"உடனடியாக வீடு கட்டவோ அல்லது விரைவான முதலீட்டு லாபமோ"
எப்படியானாலும் இது ஒரு புத்திசாலித்தனமான முதலீடு.

# இந்த வீட்டு மனையை வாங்கச் சரியான நேரம்

## (கீழே கொடுத்துள்ள 5 காரணங்களுக்காகவே)

## சிந்து நகர், சென்னை–600 056

சவீதா டெண்டல் காலேஜ் அருகில் – CMDA அப்ரூவ்டு மனைகள். (ரெ. 65/99.)

அமைந்துள்ள இடம் 

மாநகருக்கு மிக அருகில் 

பாதுகாப்பு 

முதலீடு செய்யும்
பணத்துக்கு தகுந்த மதிப்பு 

வேகமாக உயரும்
நில மதிப்பு 

### சிறப்பு அம்சங்கள்

● உடனே வீடு கட்டலாம் / அருகில் வீடுகள். ● கோயம்பேட்டிலிருந்து 10 நிமிட பயணம். ● அண்ணா நகரிலிருந்து 15 நிமிட பயணம். ● சுலபமான மூன்று வழிப் பாதைகள். கிண்டி, செயிண்ட்தாமஸ் மவுண்ட் போரூர் 100 அடி சாலை. அரும்பாக்கம், கோயம்பேடு, மதுரவாயில் 100 அடி சாலை / அம்பத்தூர், ஆவடி 60 அடி சாலை. ● சென்னை-பெங்களூர் (NH4) தேசிய நெடுஞ்சாலை. ● கோயம்பேட்டில் அமைந்துவரும் பிரம்மாண்ட பஸ் நிலையம். ● தாம்பரம்-வானகரம் புறவழிச் சாலை. ● மாநகரின் அனைத்து பகுதிகளுக்கும் தாராளமான பஸ் வசதி. ● மெடிக்கல், டெண்டல், இஞ்சினியரிங், கேட்டரிங் ஆர்ட்ஸ் கல்லூரிகள் மிக அருகில். ● சுவையான / மிருதுவான நிலத்தடிநீர். ● **சுத்தமான பத்திரம் / நம்பகமான நிறுவனம்.** ● **உடனடி பத்திரப் பதிவு.**

### BLBயின் உறுதி செய்யப்பட்ட சேவை (விற்பனைக்கு பின்)

● 5 வருடங்களுக்கு மனை பாதுகாப்பு சேவை. ● பத்திரப் பதிவுக்கு பின் தனிப் பட்டா ஏற்பாடு (பட்டா செலவு தனி.) ● வீடு கட்டும் பட்சத்தில் BLB மூலமாக கட்டுமானப் பணி ஏற்பு. ● வீடு கட்ட கடன் வசதி ஏற்பாடு.

**தவணை முறை கிடையாது**

மனையை பார்வையிட இலவச வாகன வசதி தினமும்
காலை 7.00 மணி, 11.00 மணி மற்றும் மாலை 3.00 மணி

**PH : 4357721 / 31 *TEL-FAX.* 4353183 ● CELL : 98400-44018**




# BLB Estates (P) Ltd.

S-3, "Ramana Flats", Rathna Nagar, Off : Anna Salai,
**Teynampet, Chennai - 600 018.**
(Behind Apollo Cancer Hospital)

வர்த்தகத்தில் நேர்மை; பணியில் பொறுப்பு

# “மம்பட்டியான் சொன்ன அமிசா கதை!”

“பிரசாந்துக்கு மணப்பெண் தேடினால் சீக்கிரம் கிடைத்து விடுவாள். பொருத்தமான ஹீரோயின் கிடைப்பதுதான் குதிரைக் கொம்பாக இருக்கிறது'' என்கிறார், தம் மகனுக்காக ஒவ்வொரு படத்திலும் ஹீரோயின் தேடிக் களைத்துப் போன மலையூர் மம்பட்டியான் தியாகராஜன்.

• பிரசாந்த்—அமிஷா பட்டேல்

தற்போது, 'என்ன விலை அழகே' படத்தில் பிரசாந்தின் லேட்டஸ்ட் ஜோடி அமிசா பட்டீல். 'கஹோனா ப்யார் ஹை' படத்தில் ஹீரோ ஹிர்த்திக் ரோஷனோடு அறிமுகமாகி, ஒரே நேரத்தில் இருவருக்குமே பாலிவுட் ரசிகர்கள் மனத்தில் இடம் கிடைத்திருக்கிறது.

அடுத்த காஜோல் என்று வர்ணிக்கப்படும் அமிசாவை தமிழ்கூறும் நல்லுலகுக்குக் கொண்டுவரும் தியாகராஜன் அவரைப் பற்றிச் சொன்னார்.

“கஹோனா ப்யார் ஹை' படத்திற்கு முன்பே அமிசாவை மும்பையில் சந்திச்சேன். அமெரிக்காவில் எம்.பி.ஏ. படிச்சுட்டுத் திரும்பின நேரம். தமிழ்ப்



கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

## எடைக்கு உடை!

ஜப்பானில் இப்போது பழைய துணிகள் உடுத்துவது ஃபாஷன்! அம்மாவின் பீரோவைக் குடைந்து, அவுட் அஃப் ஃபாஷன் ஆகிப்போன உடைகளை எடுத்துப் புதிய காம்பினேஷன்களில் அணிகிறார்கள் டீன் ஏஜ் பெண்கள். பல கடைகளில் பழைய ஆடைகள் விலைக்குக் கிடைக்கின்றன - எடைக்கு விற்கிறார்கள் படு மலிவாக! அவற்றை வாங்கி கோணா மாணா உடுப்புகளைத் தாங்களே உருவாக்கிக் கொள்ளும் பெண்கள் இவை 'எக்ஸ்க்லூஸிவ்' என்கிறார்கள்! ஃபாஷன் டிசைனர்களின் பிழைப்பில் தற்காலிகமாக மண் விழுந்திருக்கிறது!

நன்றி: பஸிஃபிக் ஃப்ரெண்ட்



படத்துல நடிக்கறீங்களான்னு நான் கேட்டதும், உதட்டுல விரல் வெச்சு 'உஷ்...' சப்தம் போடாதீங்க. உள்ளே அம்மா காதுல விழுந்திடும்ன்னாங்க. எனக்கு ஒரே குழப்பம். மாடலிங் வரைக்கும் வந்துட்டு நடிக்கலேன்னா எப்படின்னேன். "ஒரு பெரிய நடிகையா கணும்கிறதுதான் என்னோட லட்சியம். என்னோட விருப்பத்தை வீட்ல சொன்னதும், உடனே என்னை அமெரிக்காவுக்கு பேக்கப் செஞ்சுட்டாங்க. கொஞ்ச நாள் போகணும், அதுவும் முதல்ல ஹிந்தியிலதான் பண்றதா இருக்கேன்'னு சொல்லிட்டாங்க... வீட்ல இவ்வளவு எதிர்ப்பை வெச்சுக்கிட்டு இந்தப் பொண்ணு எங்கே நடிக்கப் போகுதுன்னு நான் திரும்பிட்டேன். அப்புறம் பிரசாந்துக்கு திரும்பவும் ஹீரோயின் பிரச்னை. ஜீன்ஸ் படத்துல ஐஸ்வர்யா ராய் ஜோடியா நடிக்கிறப்போ, பிரசாந்த் உடம்பை செயற்கையா டெவலப் செஞ்சு, மெச்சூர்டா மாத்தினோம். ஓரளவு மேட்ச் ஆச்சு. அப்புறம் இஷா கோபிகர், ரம்பா, கௌசல்யா யாருமே பொருத்தமா இல்லே. சிம்ரன் - பிரசாந்த் ஜோடி ராசியானதா க்ளிக்காச்சுதே தவிர அவ்வளவு பொருத்தமாயில்லே. இதுல பெரிய வேடிக்கை நட்லக் படத்துல பிரசாந்துக்கு ஜோடியாக நடிச்ச ரியாசென், ஒரு பொம்மை மாதிரி இருந்தாங்க.

"இந்த நேரத்துலதான் 'கஹோனா ப்யார் ஹை' படத்துல அமிசா நடிக்கிறதா தகவல். உடனே மும்பை போனேன். அமிசாவை கையும் களவுமா பிடிச்சேன். அவரோட மானேஜர் மஜோஜ் ரிக்கு சிபாரிசுல, தமிழ்ல பண்றதா ஒத்துக்கிட்டாங்க. மும்பை ஸ்டார் டஸ்ட்ல, அமிசா முதல் வரிசைக்கு வருவாங்கன்னு ஏதோ உள் மனசுல பட்சி சொல்லிச்சு. அதான் துரத்திக்கிட்டே இருந்தேன்.

"ஆனா அமிசா ரொம்ப கறார் பேர்வழி! கதையைக் கேட்டுத்தான், கையெழுத்தே போட்டுச்சுன்னா பாருங்களேன். டபுள் ஹீரோயின், ஓவர் க்ளாமர் இதெல்லாம் செய்ய மாட்டேன்னு அடிச்சு சொல்லுது.

"என்ன விலை அழகே படத்துல, ஒரு மிடில் கிளாஸ் குடும்பப் பொண்ணா, கலாசாரத்தை மதிக்கிற கல்லூரி மாணவியா நடிக்கிறாங்க. மனீஷா, ஐஸ்வர்யா ராய் மாதிரி தமிழ்ல நிக்கப் போற அடுத்த வடஇந்திய ஹீரோயின் அமிசாதான்.

"பொதுவா வடக்கு திசை ஹீரோயின்கள், ரொம்ப ஆடம்பரமாக, அரட்டை அடிக்கிறவங்களா இருப்பாங்க. அமிசா ரொம்ப மென்மை. அதுக்காக உம்மணா மூஞ்சியான்னு கேட்காதீங்க. நீங்க எந்தத் துறையைப் பத்திப் பேசினாலும் மணிக்கணக்குல பிச்சு உதறுவாங்க.

"இன்னொரு ரகசியமும் எங்கிட்ட சொன்னாங்க. பாஸ்டன் யூனிவர்ஸிட்டியில படிக்கிறப்போ ஈவ்னிங் டைம்ல வீட்டுக்குத் தெரியாம 'ஆக்டிங் அப்ரிசியேஷன்' கோர்ஸ் படிச்சாங்களாம். நடிப்புல அவ்ளோ வெறி! நீங்க வேணா பாருங்களேன். அமிசாதான் அடுத்த காஜோல்" என்றார்.

அப்படியானால் சீக்கிரமே காதல் கல்யாணம் ஆகி, பல ஆயிரம் ரசிக சிகாமணிகளை இரங்கற்பா எழுத வைப்பாரோ?

— விஷ்வல்தாசன்

# திராட்சையில் பக்கோடா!

சஞ்சீவ் கபூர். இன்று இந்தியாவின் முன்னணி சமையல் கலை நிபுணர். ஜீ டீவி.யில், 'கானா கஜானா' என்ற சமையல் நிகழ்ச்சியை கடந்த ஏழு வருடங்களாக நடத்தி வருபவர். சமீபத்தில் லேண்ட்மார்க் புத்தகக் கடைக்கு வந்திருந்தார். அவரை பிரத்யேகமாகச் சந்தித்தோம்.

"எங்கள் குடும்பத்தில் நான்தான், டிராக் மாறி கரண்டி பிடிக்க வந்தவன். ஆனால், எனக்கு இதில் துளியும் வருத்தம் இல்லை. ஒரு எக்ஸிகியூட்டிவ் செஃப் (நட்சத்திர சமையல் நிபுணர்) என்பதில் எனக்கு ரொம்ப பெருமைதான்" – இப்படிச் சொல்கிறபோது சஞ்சீவ் கபூரின் முகத்தில் பெருமை பொங்குகிறது.

"நான் படிக்க விரும்பியது இன்ஜினியரிங். ஒரு குடும்ப நண்பரின் ஆலோசனையின் பேரில் கேட்டரிங்கைத் தேர்ந்தெடுத்தேன். இந்த முடிவை எடுக்க என் அப்பாவும் ஒரு காரணம் எனலாம். அம்மா சுத்த சைவம். எனவே தனக்கு வேண்டிய நான்-வெஜ் சமையலை அப்பா தானே சமைத்துக் கொள்வார். அவர் சமையல் அறைக்குள் புகுந்து விட்டால் எங்களுக்கும் ஜாலி. எனக்குள் என்னையுமறியாமல் சமையல் ஆர்வத்தை ஏற்படுத்தியவர் அவர்தான்.

"நான் வாரணாசியில், இந்திய சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் நட்சத்திர ஓட்டலில் தான் முதலில் வேலை பார்த்தேன். அங்கே, சீசன் தவிர மற்ற சமயங்களில் டல் அடிக்கும். எனக்கு மிகவும் போரடிக்கவே, நிர்வாகத்துக்கு, சமையல் வகுப்புகள் ஆரம்பிக்க ஆலோசனை சொன்னேன். சம்மதித்தார்கள். குடும்பத் தலைவிகளுக்குச் சமையல் வகுப்புகள் நடத்தினேன். அந்த அனுபவம், டெலிவிஷன் சமையல் நிகழ்ச்சி நடத்துகிற போது மிகவும் கை கொடுக்கிறது. இதனால்தான் என் 'கானா கஜானா' நிகழ்ச்சி மிகப் பிரபலமாக விளங்குகிறது" என்கிறார்.

சஞ்சீவ் கபூர் தானாகவே பல புதிய ஐட்டங்களை உருவாக்கியவர். நாம் நினைத்துப் பார்க்காத காம்பினேஷன்களை உருவாக்கி சுவை கூட்டுபவர். இது மாதிரி முயற்சிகளைச் செய்ய நேரம், இடம் பார்ப்பதில்லை. இதற்கு ஒரு உதாரணம் : "நான் ஒரு தடவை சதாப்தி எக்ஸ்பிரசில் சென்று கொண்டிருந்தேன். உணவு நேரத்தில், சாப்பிட்டு விட்டு, காப்பி கேட்டேன். 'பால் இல்லை' என்றார்கள். ஐஸ்கிரீம் இருக்கிறதா? என்றேன். 'இருக்கிறது' என்று பதில் வந்தது. பால் இல்லாத காப்பியும், ஐஸ்கிரீமையும் கொண்டு வரச் சொன்னேன். இரண்டையும் மிக்ஸ் பண்ணிச் சாப்பிட்டேன்" என்ற சஞ்சீவிடம், 'டேஸ்ட் எப்படியிருந்தது?' என்றால், "நன்றாகவே இருந்தது" என்கிறார். சஞ்சீவ், (கருப்பு) திராட்சையை வைத்து பக்கோடா போட்டிருக்கிறார்!

நிறைய சமையல் போட்டிகளுக்கு இவரை நீதிபதியாக அழைக்கிறார்கள்.

இவரின் இரண்டாவது சமையல் புத்தகமான 'ஆரோக்கிய சமையல்' விற்பனையில் தான் பறக்கிறது.

"நான் புத்தகம் எழுத முடிவெடுத்தது கூட தற்செயலானதுதான். எனக்குத் தெரிந்த சமையல் குறிப்புகளைத்தான் புத்தகமாக எழுதினேன் என்றாலும், முதல் புத்தகத்தை உருவாக்க எனக்கு இருபது மாதங்கள் பிடித்தன. இரண்டாவது புத்தகத்துக்குப் பதிமூன்று மாதங்கள் எடுத்துக் கொண்டேன்."

சென்னையில் இருந்த இரண்டு நாட்களில் 'பொன்னுசாமி, சங்கீதா, சரவண பவன், செட்டி நாடு ஓட்டல் என்று ஒரு ரவுண்டு சுவைத்தார் சஞ்சீவ் கபூர். சரவண பவன் பற்றிய அவரது கமெண்ட் : "இவர்கள் உலக அளவில் சங்கிலியாய் ஓட்டல்கள் ஆரம்பித்தால், உலகப் புகழ் பெற்ற மெக்டொனால்டுக்குக் கடும் போட்டியாக இருக்கும்!"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**



# அறிக்கை மண்டலங்கள்!

சம்மர் சீசனுக்கு வாசகர்கள் உதகமண்டலம் புறப்பட்டுக் கொண்டிருப்பார்கள். அவர்களுக்காக நாம் சென்னையின் அறிக்கை மண்டலங்களை எட்டிப் பார்த்து, கண்டது கண்டபடி - ஸாரி! - கண்டது கண்டவாறு இங்கே தருகிறோம் :

## சுறுசுறு மண்டலம்

அறிவாலயம்! ஆட்சியிலிருந்தாலும் இல்லாவிட்டாலும் எப்போதும் பரபரப்பாக இருக்கும் தி.மு.க. அலுவலகம்.

"தினமும் ஆபீஸ் வந்துடுவாரு தலைவரு. அவரு இல்லைன்னாலும் சா. கணேசன், ஆயிரம்விளக்கு உசேன் இவங்க நிச்சயமா அலுவலகத்துல இருப்பாங்க" என்றார் கட்சிப் பிரமுகர் ஒருவர். "விழாக்கள் இருக்கும் சமயங்களில் மாலை ஆறு மணி வரை இங்கு இருப்பார் கலைஞர். அவரிருந்தால் அமைச்சர்கள் ஆர்க்காடு வீராசாமி, தமிழ்க்குடிமகன், துரைமுருகன், பொன்முடி ஆகியோரும் உடனிருப்பார்கள்!"

அறிக்கைகள், தீர்மானம் போன்றவை இங்குதான் எழுதப்படுமாம். கலைஞர் கையெழுத்தின்றி எந்தவொரு விஷயமும் அறிவாலயத்தில் நடக்காதாம். பொதுக்கூட்டம், கட்சி விழா, அழைப்பிதழ் கொடுக்க என்று தினமும் சுமார் ஐம்பது பேராவது வந்து போய்க் கொண்டுதானிருப்பார்கள். அருகிலேயே அழகான நூலகம். ஆராய்ச்சி மாணவர்கள், சில எம்.எல்.ஏக்கள் அங்கே படித்துக் கொண்டிருப்பார்கள். கலைஞருக்கே கூட சில சமயங்களில் ஏதாவது குறிப்பு தேவைப் பட்டால் இங்கு வந்து புத்தகம் புரட்டி எடுத்துச் செல்வாராம்.

சில மாதங்களுக்கு முன்பு, 'கட்சி சம்பந்தமான விஷயங்களுக்காக மட்டும் தலைவரை இங்கு சந்திக்கலாம். அரசு சார்ந்த விஷயங்களைத் தலைமைச் செயலகத்தில் பேச வேண்டும்' என்று ஒரு போர்டு வைத்திருந்தார்கள். இப்போது அந்த போர்டைக் காணவில்லை!

மடிப்பு கலையாத வெள்ளை வேட்டி, சட்டையில் வெளியூர் திமுக பிரமுகர்கள்

• அறிவாலயம்

• அ.தி.மு.க அலுவலகம்

நான்கு பேர் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அருகில் போய் விசாரித்தால் 'பத்திரிகையா?' என்றவர்கள், "வேண்டாங்க நீங்க ஏதாவது எழுதி அது வம்புல போய் மாட்டிடும்" என்று பெரிய கும்பிடு போட்டு விட்டார்கள்!

## கப்சிப் மண்டலம்

லாயிட்ஸ் ரோட்டிலுள்ள அதிமுக தலைமை அலுவலகம் புதுப்பிக்கப்பட்டிருந்ததால் பார்ப்பதற்கே ஒரு கம்பீரம்!

இங்குள்ள பழைய அலுவலகர்கள் எல்லோரும் கூண்டோடு மாற்றப் பட்ட விஷயம் ஏற்கெனவே செய்திகளில் இடம்பெற்றிருந்தது.

"புலவர் சங்கரலிங்கம்ங்கறவர்தான் இப்போ இன்சார்ஜ். அவருக்குத் தெரியாம எதுவும் நடக்காது. அவரை மீறி உள்ளே யாரும் போக முடியாது" என்று தகவல் சொன்னார் ஒரு கரை வேட்டி.

ஒவ்வொரு பிரிவுக்கும் தனித் தனி ஆபீஸ். சம்பந்தப்பட்டவர் சம்பந்தப் பட்ட இடத்தில் மட்டுமே இருக்க வேண்டும். அங்கே இங்கே நின்று கதையடிக்கக்கூடாது என்று பள்ளிக்கூட ஸ்டைலில் செம கண்டிஷன்!

இரண்டாம் 'கட்டத் தலைவர்கள் எல்லாம் ஏதாவது கூட்டம் என்றால் மட்டுமே கட்சி அலுவலகத்தில்

• தி.மு.க

• காங்கிரஸ்





''ஸ்டுடியோவில் யார் பழம் கொடுத்தாலும் வாங்காதே.''

''ஏன் அம்மா?''

''பழம் பெறும் நடிகைனு சொல் லிடுவாங்க!''

— எஸ். மோகன்

---

இருப்பார்களாம். இப்போதெல்லாம் யாரும் வருவதில்லை.

அறிக்கை தயாரிப்பதற்கென்று ஒரு குழு இருக்கிறதாம். இந்தக் குழு அறிக்கை எழுதி அம்மாவுக்கு அனுப்பி, கையெழுத்து வாங்கி பத்திரிகைகளுக்கு அனுப்பி விடுமாம்!

நாம் வெளியேறிய சமயத்தில் பெரம்பலூரிலிருந்து வேனில் வந்த அ.தி.மு.கவினரில் இரண்டு பேர் சுவாரஸ்யமாய்ச் சண்டைப் போட்டுக்கொண்டிருந்தார்கள்.

''டான்சினு இடம் இருக்காமே அங்கதான் கூட்டமாம்'' என்று ஒருவர் சொல்ல, அ.தி.மு.க. துண்டைக் கழுத்தில் தொங்கப் போட்டிருந்தவர், (பெயர் துரைசாமி) ''நான் என்ன மெட்ராஸுக்கு நேத்து வந்தவன்னு நெனச்சியா? இதுதான் ஆபீஸ். இங்கதான் கூட்டம் நடக்கும்'' என்று எகிற, ''அட ஆபீஸ்லதான் இப்படிச் சொன்னாங்க'' என்று அவர் சொல்ல, பிறகு கவுண்டமணி செந்தில் காமெடி மாதிரி ஆகிவிட்டது!

டான்சியில்தான் கூட்டம் என்பது ஊர்ஜிதமாகி(!) துரைசாமி கப்சிப் ஆக, மற்றொருவர் ஏதோ சாதித்து விட்ட மாதிரி ஒரு பார்வை விட்டார்!

## மூப்பனார் மண்டலம்

இருபத்து நாலு மணி நேர டெலிபோன் பூத் செயல்படுவதால் இந்த அலுவலகம் விடிய விடிய கண்விழித்துக் கொண்டிருக்கிறது. அலுவலக விஷயங்களில் இங்கு ஆல்-இன்-ஆல் வன்னியப்பன் என்பவர்தான்.

தினமும் அலுவலகம் வருபவர்களில் கட்சியின் துணைத் தலைவரான எஸ்.ஜி. விநாயகமூர்த்தியும் ஒருவர். தலைவரைப் பார்க்க வருபவர்கள் பெரும்பாலும் இவரைச் சந்தித்தே விஷயம் தெரிந்து கொள்வார்கள்.

மூப்பனார் உள்ளூரில் இருந்தால் பதினோரு மணிக்கு மேல் இங்கு வருவாராம். ''அவர் வந்தால் அவ்வளவுதான்...'' கார்கள். டாடாசுமோக்கள் என்று அல்லோலகல்லோலப்படும். கூடவே செல்போன் சிணுங்கல்களுக்கும் பஞ்சம் இருக்காது. ஏகப்பட்ட தலைவர்களும் வந்து விடுவார்கள். மூப்பனார் இல்லையென்றால் ஏதோ ஆளில்லாத மைதானம் மாதிரி அம்போவென்று தெரிகிறது...'' என்றனர் நாம் பார்த்த கட்சிக்காரர்கள்.

தி.மு.க., அ.தி.மு.க.வினரைப் பொறுத்தவரை தலைவர்கள், எம்.பி., எம்.எல்.ஏக்களைப் பார்க்க வருபவர்கள் அப்படியே கட்சி அலுவலகத்துக்கும் ஒரு விசிட் அடித்து விட்டுச் செல்வது வழக்கம். ஆனால் த.மா.கா.வை பொறுத்தவரை யாரைப் பார்க்க வேண்டுமோ அவரை வீட்டிலேயே பார்த்துவிட்டு, 'வந்த வேலை முடிஞ்சுதுப்பா' என்று கட்சியாபீசில் எட்டிப் பார்க்காமலேயே ஜூட் விட்டு விடுவார்களாம்!

## கமண்டலம்

மயிலாப்பூர் லஸ் கார்னரில் உள்ள காங்கிரஸ் அலுவலகம்!

நாம் சென்ற அன்றுதான் காங்கிரஸ் கட்சியின் தமிழகத் தலைவர் திண்டிவனம் ராமமூர்த்திக்குப் பிறந்த நாள். அதிகாலையிலிருந்தே அலுவலகத்துக்கு ஒவ்வொரு தொண்டராக வந்தவண்ணமிருந்தனர். வந்தவர்கள் யாரும் யாரிடமும் பேசவில்லை. கொஞ்ச நேரத்துக்குப் பிறகு இங்கே ஒரு கும்பல் அங்கே ஒரு கும்பல் (கோஷ்டி!?) என்று கூடிப் பேச ஆரம்பித்தனர்!

''தலைவர் ஊர்ல இருந்தார்னா தினமும் பதினோரு மணிக்கு மேல ஆபீஸுக்கு வந்துடுவாரு. யாராவது ஊர்லேயிருந்து தலைவரைப் பார்க்க வருவாங்க. அவங்களைச் சந்திச்சுப் பேசுவாரு. அப்புறம், அறிக்கை தயார் பண்றது, அந்த மாதிரி வேலைதான் இங்கே நடக்கும்'' என்றார் ஒரு கதர்ச் சட்டைக்காரர்.

தண்டாயுதபாணி, பாலகிருஷ்ணன் என்று இருவர் முன்பு அலுவலக விஷயமான கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்களாம். இப்போது ஆளாளுக்கென்று கோஷ்டிப் பிரிந்து விட்டதால் அவர்களும் அலுவலகம் வருவதில்லையாம்!

''தலைவர் இல்லைன்னா யாரும் இருக்கவும் மாட்டாங்க; வரவும் மாட்டாங்க. எங்களது தேசியக் கட்சியாச்சே...'' என்று அதே கதர்ச்சட்டைக்காரர் ஆரம்பிக்க, ''சர்தாங்க'' என்று கழன்றோம்!

— ஏக்நாத் ராஜ். செ.

படங்கள் : ஜரிஷ்



# 300 ரூபாய்களுக்கு கே.வி.ஆர் ஆர்ட் கோர்ஸ் ஃப்ரீ

# இதை இலவசமாக பெறும் அதிர்ஷ்டசாலிகள் 50,000

## சுலபமாக படம் வரைய கற்றுத்தரும் சிம்பிள் ஆர்ட் கோர்ஸ் இது




1ல் இருந்து 12 எண்களில் படம்

சித்திரம் வரைவது சிலருக்கு ஹாபி. சிலருக்கு அது தொழில். எந்த வயதிலும் வீட்டிலிருந்தபடியே சுலபமாகக் கற்றுக் கொள்ள முடியும். 300/– ரூபாய் மதிப்புள்ள இந்த கோர்ஸ் இலவசமாகத் தரப்படும். விளம்பரத்திற்காக இவ்வாறு கோர்ஸ்களை ஃப்ரீயாக அளிப்பதில் கே.வி.ஆர் ஒரு ரெக்கார்டை ஏற்படுத்தியுள்ளது. மற்றவர்கள் எவரும் இவ்வாறு அளிப்பதில்லை. அதனால் உடனே இதை உபயோகித்துக் கொள்வதில் ஆர்வம் காட்டுங்கள். இந்த நல்ல வாய்ப்பை உபயோகப்படுத்திக் கொள்ளுங்கள்.

### 5 கோர்ஸ்கள்

1. ஈஸி டிராயிங் கோர்ஸ்
2. ஈஸி கார்ட்டூன் கோர்ஸ்
3. ஈஸி அனாடமி கோர்ஸ்
4. ஜாமெட்ரிகல் ஆர்ட் கோர்ஸ்
5. கமர்ஷியல் ஆர்ட் கோர்ஸ்

5 கோர்ஸ்கள்

**இந்த கோர்ஸ்கள் ஃப்ரீ**

இனி உங்கள் வீட்டில் அனைவரும் சுலபமாக படம் வரையலாம்



இந்த ஃப்ரீ கோர்ஸை தினமும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு அனுப்ப வேண்டியிருக்கும். அதனால் இந்த ஃப்ரீ கோர்ஸ் உங்களை வந்தடைய குறைந்தது 10 நாட்கள் நீங்கள் காத்திருக்க வேண்டி இருக்கும்.

### கே.வி.ஆர். சிம்பிள் ஆர்ட் கோர்ஸ் தனித்துவம்

• எவராலும் சுலபமாக படம் வரைய கற்றுக்கொள்ளமுடியும். "டிரிக் ஃபோட்டோ கிராபியைப் போல • டிரிக் டிராயிங்"கிற்கான சூட்சமங்கள் • ஹாபி, பணம், புகழ், பெருமை, அனைத்தும் கிட்டும். • மொத்தம் 5 ஆர்ட் கோர்ஸ்கள் அடங்கிய ஆர்ட் கோர்ஸ் பேக்கேஜ் இது.

### இலவசமாக இவ்வாறு கோர்சை பெற்றுக் கொள்ளுங்கள்

• இந்த பத்திரிகையிலுள்ள கூப்பனில் உங்களது விவரங்களை எழுதி அனுப்புங்கள். • ஜெராக்ஸ் மற்றும் கார்டுகளின் மீது எழுதியவற்றை ஏற்றுக்கொள்ள முடியாது. • ஒரு கோர்ஸை இலவசமாக பெற ஒரு கூப்பனை அனுப்பவும். • உங்களுடைய நண்பருக்குத் தரவிரும்பினால் மற்றொரு பத்திரிகையை வாங்கி, அந்தக் கூப்பனை பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். • கவர் மீது 3ரூ ஸ்டாம்பை தற்போதுள்ள விலைமதிப்பின்படி ஒட்ட வேண்டும். • கூப்பனில் உள்ள நியமம், நிபந்தனைகளின் படி இந்த ஃப்ரீ கோர்ஸ் அளிக்கப்படும். • முதலில் அனுப்பும் 50 ஆயிரம் பேருக்கே இது அளிக்கப்படும். • இந்த கோர்ஸ் முழுவதும் இலவசம். ஆனால் இதை பெற்றுக்கொள்ளும் செலவுகளை நீங்களே ஏற்க வேண்டும்.

### கூப்பனை பூர்த்தி செய்து உடனே அனுப்பவும்

**K.V.R. INSTITUTE** 898

(Tamil Free Art Course Scheme)

P.B. No. 1020, 77. Habibullah Road, T. Nagar, Chennai - 17.

எனக்கு ரூ. 300 விலை மதிப்புள்ள கே.வி.ஆர். ஈஸி டிராயிங் கோர்ஸ், ஈஸி கார்ட்டூன் கோர்ஸ், ஈஸி அனாடமி கோர்ஸ், ஜாமெட்ரிகல் ஆர்ட் கோர்ஸ், கமர்ஷியல் ஆர்ட் கோர்ஸ் பேக்கேஜை ஃப்ரீயாக அனுப்பவும். தபால் செலவு + பேக்கேஜ் + ஃபார்வார்டிங் + விளம்பரச் செலவுகளுக்கு ரூ 100ஐ தபால்காரரிடம் செலுத்தி எனது ஃப்ரீ கே.வி.ஆர் சிம்பிள் மொத்தம் இந்த 5 கோர்ஸ்களின் 'சிம்பிள் ஆர்ட் கோர்ஸ்' பாக்கெட்டை பெற்றுக் கொள்வேனென்று உறுதியளிக்கிறேன். இந்த ஃப்ரீ கோர்ஸ் வாய்ப்பளித்ததற்காக உங்களுக்கு நன்றி.

(உங்களது விலாசத்தை நன்கு புரியும்படியாக ஆங்கிலத்தில் எழுதவும், இல்லாவிடில் கோர்ஸை அனுப்ப முடியாது)

Name ....................................................

Address ....................................................

....................................................

.................................... Pincode ☐☐☐☐☐☐

# ஆங்கிலமே அருகில் வா!

**ஆ**ங்கிலத்தில் ஆறு லட்சத்திற்கும் மேற்பட்ட வார்த்தைகள் உள்ளன.

அப்படியென்றால் இத்தனை வார்த்தைகளும் தெரிந்தால்தான் ஆங்கிலத்தில் பேச முடியும் என்று நினைத்து விடாதீர்கள்!

குறைந்த பட்சம் 1500 வார்த்தைகள் தெரிந்தால் போதும். ஆங்கிலத்தில் சகஜமாகப் பேச முடியும்.

ஆம்! நமது அன்றாட உரையாடலில் வெறும் 1500 வார்த்தைகள் மட்டுமே அடிக்கடி பயன்படுத்தப் படுகின்றன.

இந்த 1500 வார்த்தைகளில் பாதிக்கு மேற்பட்டவை ஏற்கெனவே தெரிந்த வார்த்தைகள்தான்.

ஆச்சரியமாக இருக்கிறதா?

கொஞ்சம் இருங்க. இதோ ஒரு ரிக்ஷாக்காரர் ஏதோ பேசிக்கொண்டிருக்கிறார். என்ன பேசுகிறார் என்று கவனிக்கலாம்.

"ஏம்பா, ராமன் ஸ்ட்ரீட்டுக்கு எப்படிப் போகணும்?"

ராமன் ஸ்ட்ரீட்டா? ஸ்ட்ரெய்ட்டா போயி ரைட்டுல கட் பண்ணுங்க.

ரிக்ஷாக்காரர் பேசிய வாக்கியத்தில் ஸ்ட்ரீட், ஸ்ட்ரெய்ட், ரைட், கட் இதெல்லாம் இங்கிலீஷ் வார்த்தைகள்தானே?

இதேபோல நாம **டெய்லி** பேசற விஷயங்கள்ல நெறய இங்கிலீஷ் வார்த்தைகளைத்தான் **யூஸ்** பண்றோம்.

**ஸோ**, நாம பேசற வாக்கியங்கள்ல இங்கிலீஷ் வார்த்தைங்க பூவும் மணமும் போல, கடற்கரையும் காதலரும் போல, அரசியல்வாதியும் – ...ஊழலும் போல(!) ஒண்ணாக் கலந்துதான் இருக்கு.

- எனக்கு டயர்டா இருக்கு.
- மனோகர் **பிஸியா** இருக்காரு.
- டெஸ்ட் பேப்பர்ஸ் எல்லாத்தையும் கரெக்ட் பண்ணிட்டேன்.
- ஹாஃப் எ டே லீவு போட்டுட்டு ஒய்ஃப்கூட ஷாப்பிங் போயிருந்தேன்.
- பஸ் ஸ்டாண்ட்ல ஃபைவ் மினிட்ஸ் வெய்ட் பண்ணுங்க.

ஒவ்வொரு வாக்கியத்திலேயும் பாதிக்கு மேல் இங்கிலீஷ் வார்த்தைகள் இடம் பெற்றுள்ளதை கவனித்தீர்களா? அவை அனைத்தும் நமக்குத் தெரிந்த வார்த்தைகள்தானே?

நீங்க சொல்றது ரொம்ப கரெக்ட். ஆனா இவ்வளவு வார்த்தைங்க தெரிஞ்சும் எங்களால சகஜமா இங்கிலீஷ் பேச முடியலையே என்று நீங்கள் கேட்கலாம்.

– இங்கிலீஷ் வார்த்தைகளைப் பொறுத்த வரை நமக்கு எந்த ப்ராப்ளமும் இல்லை.

இந்த வார்த்தைகளை 'யூஸ்'



**வி. ராஜகோபாலன்**

பண்ணி வாக்கியமா அமைச்சு பேசத்தான் முடியலை. ஏதாவது தப்பா பேசிடுவோ மோன்னு பயமா இருக்கு இல்லியா?

இந்தப் ப்ராப்ளத்தை ஈஸியா சால்வ் பண்ணிடலாம்.

உதாரணமா: பஸ் ஸ்டாண்ட்ல ஃபைவ் மினிட்ஸ் வெய்ட் பண்ணுங்க

இந்த வாக்கியத்துல 'பண்ணுங்க'ங்கறதைத் தவிர மீதி இங்கிலீஷ் வார்த்தைகள்தான். ஸோ, இதை மட்டும் இங்கிலீஷா பண் ணிட்டா போதும்.

முழுக்க முழுக்க இங்கிலீஷ்லயே பேச லாம் இல்லியா?

அது எப்படி?

இங்கிலீஷ் கிராமர் தெரிஞ்சாத்தான் தப்பு இல்லாம இங்கிலீஷ்ல பேச முடியும்னு எல்லாரும் சொல்றாங்களே' என்று நீங்கள் கேட்கலாம்.

நம்மில் பலர் தமிழில் நன்கு பேசுகிறோம். சிறப்பாக எழுதுகிறோம். ஆனால் அத்தனை பேருக்கும் தமிழ் கிரா மர் தெரியுமா என்று கேட்டால், தெரி யாது என்று சிலர் சொல்வதுண்டு.

நம்மிடம் ஒருவர்

ஈறுகெட்ட எதிர்மறை பெயரெச்சம்

வியங்கோள் வினைமுற்று

ஆகு பெயர்

வினையால் அணையும் பெயர் பற்றி விளக்கும்படி கேட்டால் தயங்கித் தயங்கி, sorry என்று சொல்லித் தப்பிக்கப் பார்ப்பதுண்டு.

தமிழ் இலக்கணம் பற்றித் தெரி யாத பலர் தமிழில் சுவையாகப் பேசத்தான் செய்கிறார்கள். சிலர் நாவன்மை படைத்த மேடைப் பேச்சாளர்களாகவும் இருக்கிறார் கள்.

இதைப் போலத்தான், ஆங்கில இலக்கணம் பற்றி முழுமையாகத் தெரிந்தால் தான் நம்மால் பேச முடியும் என்பது தவறான கருத்தா கும்.

எனவே, ஆங்கில **வாக்கிய அமைப்பு நியதி** பற்றி ஓரளவு தெரிந்துகொண்டால் போதும். அடுத்தவர் வியக்கும் வண்ணம் நம் மால் ஆங்கிலத்தில் நிச்சயம் பேச முடியும்.

'ஆங்கிலமே அருகில் வா' என நீங்கள் அழைக்கும் குரல் கேட்டு, உங்களை ஆங்கிலத்தில் சரள மாகப் பேச வைக்க அடுத்த வாரம் முதல் உங்கள் இல்லம் தேடி வரவிருக்கிறார் உங்களது ஆங்கில நண்பர்.

தயாராக இருங்கள்.

(தொடரும்)





• தொழிற்சாலையில்

# தாழம்பூ சர்பத் தெரியுமா?

ஆயுர்வேதம், சித்தா, யுனானி - ஒரே இடத்தில் இந்த மூன்று இந்திய மருத்துவ முறை சிகிச்சையும் கிடைப்பது ஆசியாவி லேயே இங்குதான்!

'எங்கு?'...

அடையாறு தாண்டி திருவான்மியூர் நெருங்கியதும் கல்கி கிருஷ்ணமூர்த்தி சாலையில் உள்ள இம்ப்காப்ஸ் மருத்துவ மனையில். மருந்துகள் (மூவகையும்) தயாரிக்கும் தொழிற்சாலையும் இங்கு உள்ளது.

''ஆங்கில மருத்துவம்தான் சிறந்தது என்று சொல்லிக் கொண்டிருந்தவர்கள் எல்லாம் இன்றைக்கு இந்திய மருத்துவத் துக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறார்கள்'' என்கிறார் இம்ப்காப்ஸ்(IMPCOPS) நிறுவன செயலாளர் டாக்டர் சேஷாத்ரி!

இந்தியன் மெடிக்கல் ப்ராக்டிஷனர்ஸ் கோ-ஆபரேட்டிவ் பார்மஸி அண்ட் ஸ்டோர்ஸ் லிமிடெட்டின் சுருக்கம்தான் இம்ப்காப்ஸ்.

''1944-ம் வருஷம் ஸ்ரீனிவாசமூர்த்தி என்பவர் இந்திய மருத்துவத்தின் அவசியத்தை உணர்ந்து இதை ஆரம்பித்தார். 215 உறுப்பினர் களோடு ஆரம்பிக்கப்பட்ட இந்த நிறுவனத்துக்கு இன்றைக்கு 14 ஆயிரம் உறுப்பினர்கள். இதன் தற்போதைய தலைவர் த.மா.கா. எம்.எல்.ஏ. குமாரதாஸ்'' என்று ப்ளாஷ்பேக் சொன்ன சேஷாத்திரி, ''உணவே மருந்து. மருந்தே உணவு என்பது தான் ஆயுர்வேத மருத்துவத்தின் தத்துவம்'' என்கிறார்.

''நாம சாப்பிடற உணவில சேர்த்துக்கிற மோர், பருப்பு, கீரை, காய்கறிகள், சுக்கு, மிளகு... இதெல்லாம் மருந்துதான். இந்த மருந்து இந்திய மருத்துவத்தில் மட்டும்தான் இருக்கு. ஆங்கில மருத்துவத்தில் பக்க விளைவு அதிகம். இப்ப தலைவலி வருதுன்னா அது ஒரு அறிகுறிதான். அதாவது வேற ஒரு வியாதிக்கான அறிகுறி. உடனே நாம என்ன பண்றோம்? தலைவலி மாத்திரை ஒண்ணு வாங்கிப் போடறோம். இரண்டு மணி நேரம் வலி இல்லாம இருக்கும். அப்புறம் ஆரம்பிச்சுடும். திரும்பவும் மாத்திரை போடுவோம். இது இன்னொரு வியாதியைத்தான் கொண்டு வந்து சேர்க்கும். ஆனால் ஆயுர்வேத சிகிச்சையைப் பொறுத்த வரை நோய் தீர கொஞ்சம் காலம் ஆனாலும் நிரந்தரமான நிவாரணம் கிடைக்கும்''

என்று சொல்லும் சேஷாத்ரி, "இந்திய மருத்துவ முறையால எய்ட்ஸ் நோய் கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறது" என்கிறார்.

இம்ப்காப்ஸுக்குத் தேவையான மூலிகைகள் எங்கிருந்து கிடைக்கின்றன?

"பெரும்பாலான மூலிகைகள் இங்கேயே கிடைக்கின்றன. ஒருசில மூலிகைகள் மட்டும் கேரளாவிலிருந்து வாங்க வேண்டியிருக்கிறது. ஆனால் விலை தான் அதிகம். ஒருகாலத்துல நாங்க மட்டும்தான் இதைத் தயார் பண்ணிட்டிருந்தோம். அரசுக்கும் கூட நாங்கதான் கொடுத்திட்டிருந்தோம். இப்போ வெளிநாட்டுக் கம்பெனிகள் எல்லாம் இதுல இறங்கியிருக்கு. நிறைய போட்டி. பத்து ரூபாய்க்கு வாங்கின மூலிகைகள் இப்ப நூறு ரூபாய்க்கு வாங்க வேண்டியிருக்கு. அப்படியே வாங்கினாலும் தேவையான அளவு கிடைப்பதில்லை. ஒரு சில மாத்திரை, லேகியங்களின் தேவைகள் அதிகமாக இருக்கிறது. ஆனால் எங்களால அந்த அளவு தயாரித்துக் கொடுக்க முடியலை" என்கிறார் சேஷாத்ரி.

இங்கு தயாரிக்கப்படும் வல்லாரை மாத்திரைகளும், ஸ்வர்ணபஸ்பம், தங்க பஸ்பம் போன்றவையும் நிறைய விற்கின்றனவாம். பத்து கிராம் ஸ்வர்ணபஸ்பத்தின் விலை பதினாறு ஆயிரம் ரூபாய்!

"இவ்ளோ விலையான்னு கேட்காதீங்க. மிகக் குறைந்த விலைக்கு உயர்ந்த மருந்துகளும் எங்ககிட்டே கிடைக்கும். நாங்க மசாஜ் சிகிச்சையும் பண்றோம். பக்கவாதம், தூக்கமின்மை, ஞாபகசக்தி மற்றும் மன வளர்ச்சிக் குன்றியவங்களுக்கும் தனித்தனி மசாஜ் சிகிச்சை அளிக்கிறோம். இதுல நல்ல பலன் கிடைக்குது."

வெயிலுக்கு இதமாய் ஒரு 'ஜில்' சர்பத் கொடுத்தார் சேஷாத்ரி. அது எதிரில் வைக்கப்பட்டபோதே அழகான நறுமணம். தாழம்பூ சர்பத்தாம்! "இது குளிர்ச்சியானது; உடலுக்கு நல்லது" என்கிறார்.

இதுவரை அரசின் எந்தவித உதவியுமின்றி செயல்பட்டு வரும் இம்ப்காப்ஸ், பெரிய மருத்துவமனை ஆரம்பிக்க லோனுக்கு மனு செய்து காத்திருக்கிறது. லோன் கிடைத்து, மருத்துவமனையும் உருவாகிவிட்டால் ஆயுர்வேதம், சித்தா, யுனானி என்ற மூன்று மருத்துவத்துக்கான சிகிச்சை ஒரே இடத்தில் குறைந்த செலவில் கிடைக்கும்!

— சலாம்ஜி

படங்கள் : ஹரிஷ்

• ரெடியாகிறது வல்லாரை மாத்திரை

• சேஷாத்ரி

**ஆந்திர மாநிலம், விஜயவாடா நகர மாநகராட்சி மேயராகி இருக்கிறார் இருபத்தாறு வயது அனுராதா. மிக இளம் வயது மேயரான அவரை விஜயவாடாவில் அவரின் இல்லத்தில் சந்தித்தோம்.**

**"சொல்லுங்கள் முதல் முறையாக மேயருக்குரிய ஆசனத்தில் அமர்ந்த போது எப்படி உணர்ந்தீர்கள்?"**

"முதலில் பயமாக இருந்தது. சில விநாடிகள் அமைதியாக உட்கார்ந்திருந்தபின் திரில்லிங்காக உணர்ந்தேன். அதே நிமிடம், ஆந்திர முதல்வர் நாயுடு மீது நம்பிக்கை கொண்டு, விஜயவாடா மக்கள் எனக்கு அளித்துள்ள பொறுப்பு இது; இதைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களுக்கு எவ்வளவு முடியுமோ, அவ்வளவு சேவை புரிய வேண்டும் என்ற பொறுப்புணர்ச்சியும் ஏற்பட்டது. மேயர் நாற்காலியில் முதல் தடவை நான் அமர்ந்தபோது, பலவித உணர்வுகளின் கலவையை உணர முடிந்தது."

**"பொறுப்பேற்று பத்து நாளாகி விட்டதே! எப்படியிருக்கிறது உங்கள் அனுபவம்?"**

"தினமும் நகர்வலம் செல்கிறேன். அனைத்துதரப்பு மக்களையும் நேரில் சந்திக்கிறேன். அவர்கள் பிரச்னை என்ன என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன். புது மேயர் என்பதால் நிறைய நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள அழைக்கிறார்கள். விஜயவாடாவின் கோடை வெகு பிரசித்தம். நகரம் முழுக்க தண்ணீர்ப் பந்தல்கள் திறந்து கொண்டிருக்கிறார்கள். இதை திறக்க நான்தான் வர வேண்டும் என்கிறார்கள். நான் போக வேண்டிய அவசியமில்லைதான். ஆனாலும், அன்போடு அழைக்கிற போது மறுக்க முடியவில்லை. மறுத்தால் பதவிக்கு வந்தவுடனேயே இத்தனை திமிரா? என்று விமர்சனம் வந்து விடுமே!"



**"தேர்தலில் நின்ற போது, என்னென்ன வாக்குறுதிகள் கொடுத்தீர்கள்?"**

"கிருஷ்ணா நதி பாயும் இங்கே பிரதான பிரச்னை குடிநீர்தான். அதைத் தீர்க்க உடனடி நடவடிக்கை எடுப்பதாக வாக்குறுதி கொடுத்திருக்கிறேன். கொளுத்தும் வெயிலில் நிழல் பெற நிறைய மரங்கள் நடவும், குப்பைகளை அகற்றவும் தூய்மையான, பசுமையான விஜயவாடாவுக்குப் பாடுபடுவேன் என்று கூறியிருக்கிறேன். இன்னொரு வாக்குறுதி, ஒரு மேம்பாலமாவது கட்ட ஏற்பாடு செய்வேன் என்பது."

**"வாக்குறுதிகளை நிறைவேற்றும் பணியை ஆரம்பித்து விட்டீர்களா?"**

"ஓ... யெஸ். குடிநீர்ப் பிரச்னைப் பற்றி



• கணவர் மற்றும் குழந்தையுடன் அனுராதா

# எல்.கே.ஜி. அரசியல்வாதி

முழுமையாக ஆராயப்பட்டு விட்டது. விஜயவாடாவின் பரப்பு, மக்கள் தொகை இவற்றை வைத்துக் கணக்கிட்டால், இரண்டாயிரத்து ஐநூறு பொதுக் குடிநீர் குழாய்களே போதுமானது. ஆனால், மொத்தம் ஆறாயிரம் பொதுக் குழாய்கள் இருக்கின்றன. இவைகளில், தண்ணீர் மிகக் குறைவாக வருகிறது என்பதால், பைப் லைன்களில் உள்ள குழாய்களையே நீக்கி விட்டார்கள். இதற்கு உடனடி நடவடிக்கை எடுத்து, அனைத்து இடங்களிலும் குழாய் பொருத்தச் சொல்லியிருக்கிறேன். அதை யாராவது நீக்கினால், அந்த பைப் லைனில், தண்ணீர் சப்ளை நிறுத்தப்படும் என்று கடுமையாய் எச்சரித்திருக்கிறேன்."

**"பெண் மேயர் பொறுப் பேற்றிருப்பது குறித்து பொது மக்கள் ரியாக்ஷன் என்ன?"**

"நிறைய பேர், குறிப்பாக குடிசைவாழ் மக்கள் அதிலும் பெண்கள் தங்கள் பிரச்னைகளை என் கவனத்துக்குக் கொண்டு வருகிறார்கள். நான் பிறந்தது முதல் விஜயவாடாவில் இருக்கிறேன். இப்போது வயது இருபத்தி ஆறு. இந்த நகரத்தில் மக்களுக்கு இவ்வளவு பிரச்னைகள் இருப்பதை நான் அறியாமலேயே இருந்திருக்கிறேன் என்கிறபோது ஏதோ ஒருவித குற்றஉணர்வு ஏற்படுகிறது."

**"தெலுங்கு தேசம் கட்சியின் சார்பில் போட்டியிட்ட உங்களை மேயராகத் தேர்ந்தெடுத்து விட்டார்கள். ஆனால் 50 கவுன்சிலர்கள் கொண்ட மாநகராட்சியில் காங்கிரசின் பலம் இருபத்தைந்து. உங்கள் கட்சிக்கு வெறும் பதினொன்றுதான். கூட்டணிக் கட்சியான பி.ஜே.பிக்கு நாலு. இதனால் உங்கள் பணியைச் செய்ய இடைஞ்சல்கள் வரக்கூடுமே!"**

"இது அரசியல்ரீதியாகச் சரிதான். மக்களின் ஆதரவைப் பெற்றுத்தான் நான் இந்தப் பொறுப்புக்கு வந்திருக்கிறேன். எனவே, மக்கள் நலனுக்காக நான் செய்பவற்றை, அரசியல்ரீதியாகப் பார்க்காமல், ஆதரவு தரவேண்டிய கடமை காங்கிரஸ் உட்பட அனைத்து கட்சிகளுக்குமே உண்டு. அதே சமயம், அவர்கள் சுட்டிக்காட்டும் தவறுகளைத் திருத்திக் கொள்ளும் கடமையும், அவர்களது நல்ல ஆலோசனைகளை ஏற்றுக் கொள்ள வேண்டிய கடமையும் எனக்கு உண்டு. என் கடமைகளை நான் உணர்ந்திருக்கிறேன். அரசியல் நோக்கத்துடன் காங்கிரஸ் செயல்பட்டால், மக்களுக்கு அதை புரியவைத்து, முடிவை மக்களிடம் விட்டு விடுவேன்."

**"சரி! நீங்கள் தேர்தலில் போட்டியிட்ட போது மக்களின் தீர்ப்பு இப்படித்தான் இருக்**

## "நைட்ஷோ பார்க்கப் பிடிக்கும்!"

அனுராதா, பிறந்து, வளர்ந்தது எல்லாம் விஜயவாடாதான். அப்பாவுக்கு இன்கம்டாக்ஸ் டிபார்ட்மென்ட்டில் வேலை. கணவர் ஸ்ரீதரன் சொந்த பிசினஸ் நடத்துகிறார். மாமியார் ஒரு ஸ்கூல் நடத்துகிறார். மாமனாருக்கும் பிசினஸ்தான். ஆனால், யாரும் அரசியலில் இருந்தது இல்லை.

"பேப்பரில், விஜயவாடா மாநகராட்சியின் மேயர் பதவி, பிற்படுத்தப்பட்ட இனத்துப் பெண்களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்டிருப்பதாக செய்தி வந்த போது, என் குடும்பத்தினரும், நண்பர்களும் அளித்த ஊக்கத்தின்பேரில், பி.எஸ்.ஸி., (எலெக்டிரானிக்ஸ்) பட்டதாரியான நான், என்னைப் பற்றிய விவரங்களை முதல்வர் நாயுடுவுக்கு ஃபாக்ஸ் அனுப்பினேன். மூன்றாவது நாள், இன்டர்வியூவுக்கு வரும்படி அழைப்பு வந்தது. விஜயவாடாவிலேயே இன்டர்வியூ நடந்தது. சுமார் இருபது பேர்களிலிருந்து பன்னிரெண்டு பேர் தேர்வு



செய்யப்பட்டோம். அதிலிருந்து ஏழு பேர். அதிலிருந்து மூன்று பேர். இறுதிச் சுற்றில் நான் தேர்வு செய்யப்பட்டேன். பொது அறிவு கேள்விகளும், ப்ர்சனாலிட்டியை அறியும் கேள்விகளும் இன்டர்வியூவில் கேட்கப்பட்டன. கேட்ட கேள்விகளுக்கெல்லாம், தயக்கமின்றி பதில் சொன்னதால், நிச்சயம் செலக்ட் ஆக அதிக வாய்ப்பு இருப்பதாக நான் நினைத்தேன். என் கணக்குப் பிசகவில்லை. என் படிப்புதான் நான் வேட்பாளராகத் தேர்வு செய்யப்பட்டதற்கு முக்கியக் காரணம் என்று நினைக்கிறேன்'' என்கிறார் அனுராதா.

''விஜயவாடாவில் ஆங்கிலோ இந்தியன் ஸ்கூல் ஒன்றில் படித்தபின், மாரிஸ் ஸ்டெல்லா கல்லூரியில் இன்டர் மீடியட் படித்தேன். பிறகு குண்டூரில் பி.எஸ்ஸி., (எலெக்ட்ரானிக்ஸ்) சேர்ந்தேன். தினமும் விஜயவாடாவிலிருந்து குண்டூருக்குப் போய் வருவேன்'' என்று சொல்லும் அனுராதாவுக்கு மூன்றாமாண்டு படித்துக் கொண்டிருந்தபோதே திருமணம் முடிந்து விட்டதாம்!

இப்போது ஒரு பெண் குழந்தை. கல்லூரிப் படிப்பை முடித்தபின், கம்ப்யூட்டர் கோர்ஸ் சேர்ந்தார் அனுராதா. ஒருகட்டத்தில், அந்தக் கம்ப்யூட்டர் இன்ஸ்டிடியூட்டை நடத்தியவர் அமெரிக்கா சென்றபோது இவர் அந்த இன்ஸ்டிடியூட்டை சொந்தமாக வாங்கி விட்டார்! இப்போது மேயர்!

அனுராதாவுக்குப் பிடித்த விஷயம் சினிமா பார்ப்பது. தெலுங்கு ஸ்டார் கிருஷ்ணாவின் பரம ரசிகை. அவரது படங்களில் ஒன்றைக் கூட மிஸ் பண்ணியதில்லை. வாரத்துக்கு இரண்டு படம் என்பது அனுராதாவின் குறைந்தபட்சக் கணக்கு. வழக்கமாக நைட்ஷோதான் போவார் கணவருடன்.

''மேயரான பின், நேரம் சரியாக இருக்கிறது. ஆனாலும் சினிமா பார்க்காமல் இருக்க முடிவதில்லை. வழக்கமான புடைவையில் இல்லாமல், சூரிதார்அணிந்து கொண்டு, பொதுமக்களுக்குத் தெரியாமல் சினிமா பார்த்து வருகிறேன். இனியும் அப்படியே செய்யத் திட்டம்'' என்கிறார் சின்னதாகப் புன்னகைத்து!

**கும் என்று உங்களால் தீர்மானிக்க முடிந்ததா?''**

"தேர்தல் பிரச்சாரம் என்பது எனக்கு முற்றிலும் புதிய அனுபவம். ஒரு விஷயம் சொன்னால் ஆச்சரியப்படுவீர்கள். எனக்கு வோட்டுப் போடும் வயது வந்த பின்னும் நான் தேர்தலில் வோட்டுப் போட்டதே கிடையாது. சந்திரபாபு நாயுடு முதல்வரான பின், அவரது பெண்கள் நலத் திட்டங்கள் என்னைப் பெரிதும் கவர்ந்தன. அதன்பின்தான் தேர்தலில் வோட்டுப் போட்டேன். முதலமைச்சரை, நான் நேரில் சந்தித்தது கூட இல்லை. ஆனாலும், இறுதிகட்டப் பிரசாரத்தின் போது அவரே வந்து கலந்து கொண்டது புது உற்சாகத்தை அளித்தது. தேர்தல் பிரசாரத்தின்போது, மைக் பிடித்துப் பேச நான் தடுமாறினேன். ஆனால் என்னை எதிர்த்துப் போட்டியிட்ட காங்கிரஸ் மற்றும் கம்யூனிஸ்ட் பெண் வேட்பாளர்கள் அரசியல் அனுபவம் வாய்ந்தவர்கள்.

"தினமும் ஆறு மணிக்குப் பிரசாரத்தை ஆரம்பித்தால், பிற்பகல் மூணு மணி வரை நகரின் பல பகுதிகளுக்கும் செல்வேன். அதன்பின் வீட்டுக்கு வந்து அரைமணி நேரம் ரெஸ்ட். மறுபடி மூணரை மணிக்குப் புறப்பட்டால், இரவு பத்து வரை பிரசாரம் தான். எனக்குப் பிரசார உத்திகளை வகுத்துக் கொடுத்து, ஆலோசனைகள் சொன்னது கட்சி மேலிடம்தான். அவைகளையெல்லாம் ஒரு மாணவி போலக் கேட்டுக் கொண்டு, செயல்படுத்தி, தேர்தல் என்கிற பரீட்சையில் பாஸ் பண்ணியிருக்கிறேன்."

**"இனி தொடர்ந்து அரசியலில் ஈடுபடப் போகிறீர்களா?"**

"நான் தேர்தலில் போட்டியிட்டது கூட எதிர்பாராமல் நிகழ்ந்ததுதானே! எனவே, இது இப்படித்தான் என்று நான் எதையும் முன்கூட்டியே தீர்மானிப்பது கிடையாது. வாழ்க்கையை, அதன் போக்கிலேயே சென்று வாழ்வதுதான் என் பாலிசி. எனவே இப்போது ஏற்றுக் கொண்டிருக்கும் பொறுப்பில் உண்மையாக உழைக்க வேண்டும். நான் விஜயவாடா நகரத்து மேயர் இல்லை; மாநகராட்சியின் ஒரு ஊழியர் என்றே நினைத்து உழைக்கிறேன்."

விஜயவாடாவிலிருந்து :
**எஸ். சந்திரமௌலி**

அட்டை, வண்ணப்படங்கள் :
**யோகா**

**சட்டசபையை சூடு பறக்கச் செய்து கொண்டிருக்கிறார்கள் அமைச்சர் துரைமுருகனும் எதிர்க்கட்சித் தலைவர் சோ. பாலகிருஷ்ணனும். பொதுப்பணித் துறையில் ஊழல் என்று சோ.பா. குற்றம் சாட்ட, ஆளுங்கட்சி அதை மறுத்ததோடு, சோ.பா மீதே ஒரு புதிய குற்றச்சாட்டை வீச, ஆக்ரோஷமாகியிருக்கிறார் சோ.பா. என்னதான் விவகாரம்? சோ.பாவைச் சந்தித்துக் கேட்டோம்.**



# விடமாட்டோம் துரைமுருகனை!

“பொதுப்பணித் துறையில் ஒப்பந்தங்கள் வழங்குவதில் சில முறைகேடுகள் நடந்திருப்பதாக ஆதாரங்களுடன் நான் சபாநாயகரிடம் புகார் கொடுத்திருந்தேன். உடனே முதல்வர் என்னைப் பற்றிய குற்றச்சாட்டு ஒன்றைக் கொடுத்தார். எதிர்க்கட்சிக்காரர்கள் சொல்லும் குற்றச்சாட்டுகளுக்கு, சட்டசபையில் பதில் சொல்ல வேண்டியது ஆளும்கட்சியின் கடமை! அதை விட்டு விட்டு, என்னை மிரட்டும் விதமாக எதிர்ப்புகார் கூறுவது மலிவான அரசியல் தந்திரம். ஒரு குறிப்பிட்ட பணிக்கு அதிகத் தொகை கேட்ட எங்கள் பகுதி காண்ட்ராக்டர் ஒருவருக்கு நான் சிபாரிசு செய்ததாக என் மீது குற்றச்சாட்டு. அரசு, 'blacklist' செய்த காண்ட்ராக்டருக்குப் பணியைக் கொடுப்பதாக இருந்தது. அதை விடுத்து, உண்மையிலேயே எங்கள் மாவட்ட வளர்ச்சியில் அக்கறையுள்ள, தரமாக பணியைச் செய்யும் காண்ட்ராக்டர் ஒருவருக்கு ஒப்பந்தம் கொடுக்கச் சொன்னேன். வைகை ஆற்றிலேயே ஓரமாக வலுவான தடுப்புச்சுவர் கட்டி, தண்ணீரைத் தேக்கி, கால்வாய்களில் திருப்பி விடும் பணி அது. அந்தப் பணி ஒழுங்காகச் செய்யப்பட்டால்தான் வறட்சியின் பிடியில் வாடும் எங்கள் பகுதிகளுக்குத் தண்ணீர் வரும். நல்ல காண்ட்ராக்டர் மூலம் அந்தப் பணி நிறைவேற்றப்பட வேண்டும் என்று நான் நினைத்ததில் என்ன தவறு? நான் சிபாரிசு செய்த காண்ட்ராக்டர் ராமநாதபுரத்துக்குச் சொந்தச் செலவில் விளையாட்டு ஸ்டேடியம் கட்டிக் கொடுத்திருக்கிறார். கிழக்குக் கடற்கரைச் சாலைக்கு 75 லட்சம் நிதி கொடுத்திருக்கிறார். ஆனால் அவருக்குத் தராமல், கடைசியில் அரசு யாருக்குக் கொடுக்க வேண்டும் என்று நினைத்ததோ அவருக்குத்தான் கொடுத்தது! என்னுடைய பொதுவாழ்வில் களங்கம் ஏற்படும் வண்ணம் இந்த அவதூறை வீசினார்கள். ஆனால் இது போன்ற மிரட்டல்களுக்கு நான் பயப்பட மாட்டேன்! நல்ல பாரம்பரியத்துக்குச் சொந்தக்காரரான சபாநாயகரும் 'நீங்க சொன்ன குற்றச்

**தோள் தட்டுகிறார் சோ. பாலகிருஷ்ணன்**

சாட்டுக்கும், அவங்க சொன்ன குற்றச் சாட்டுக்கும் சரியாய்ப் போய் விட்டது. இரண்டையுமே தள்ளுபடி செய்கிறேன்' என்ற ரீதியில் தீர்ப்பு சொன்னது சரியாகப்படவில்லை.

''சபாநாயகரும், முதல்வரும் துரை முருகனைக் காப்பாற்றத் துடிப்பது ஏன்? ஆனால் நாங்கள் அவரை விட மாட்டோம். பொதுப்பணித் துறையில் ஒரு சர்க்கிளில் இப்படி முறைகேடுகள் நடந்திருப்பதைப் பார்க்கும்போது, ஒரு நீதி விசாரணைக்கு ஏற்பாடு செய்தால் தமிழகம் முழுவதும் நடந்திருக்கும் ஊழல்கள் அம்பலத்துக்கு வரும்! தனி நீதி மன்றங்கள் ஊழல் செய்யும் எல்லோரையும் விசாரிக்கத்தானே இருக்கின்றன?''

**''நடுநிலையான மக்கள், த.மா.கா விடம் நிறையவே எதிர்பார்த்தார்கள். ஆனால் அ.தி.மு.க.வோடு நீங்கள் நெருங்கிப் போனவுடன் அவர்கள் நம்பிக்கை போய்விட்டதே?''**

''ஜனநாயக நாட்டில் தேர்தல் வெற்றிகள்தான் கட்சிகளின் பலத்தை நிர்ணயிக்கின்றன. எனவே அரசியலில் இருப்பதற்கு, தொண்டர்களை உற்சாகமாக வைத்திருப்பதற்கு, சில வியூகங்கள் தேவைப்படுகின்றன. நாங்கள் மூன்றாவது அணியாக நின்றபோது இந்த படித்த, நடுநிலை மக்கள் எங்களுக்கு வோட்டுகளைப் போட்டு வெற்றி பெறச் செய்திருப்பார்களேயானால் தி.மு.க - அ.தி.மு.க.வுக்கு மாற்றாக வலுவான அடித்தளம் அமைக்கும் முயற்சியில் முன்னேறியிருப்போம். ஆனால் இவர்கள் யாரும் வாக்குச்சாவடிக்கு வந்து வோட்டுப் போட்டதாகத் தெரியவில்லையே. எனவே எங்களை மட்டும் குறை சொல்லாதீர்கள்!''

**''ஊழல் சக்திகள் மீண்டும் ஆட்சிக்கு வர த.மா.கா துணை போகுமா?''**

''அ.தி.மு.க.வின் ஊழலைக் கண்டிக்கும் சில பத்திரிகைகள் தி.மு.க. ஊழல்களை மூடி மறைப்பது வினோதமாக இருக்கிறது. இன்றைக்கு ஆட்சியில் இருப்பது தி.மு.க. அது செய்யும் ஊழல்களைத்தான் நாங்கள் கண்டிக்க முடியும்! அ.தி.மு.க. ஊழல்களையே சொல்லிக் கொண்டிருந்தால் செத்த பாம்பை அடித்த கதையாகத்தான் இருக்கும். ஊழல் எதிர்ப்பு என்பது எங்கள் ரத்தத்தில் கலந்தது. தேர்தல் காலங்களில் ஏற்படும் சில நெருக்கங்கள் மற்றும் கூட்டணி காரணமாக நாங்கள் ஏதோ சமரசம் செய்து கொள்கிறோம் என்று சொல்வது கொஞ்சம் கூடச் சரியல்ல. எந்தக் கட்டத்திலும் ஊழல் சக்திகளுக்கு ஆதரவாகத் த.மா.கா செயல்படாது! எங்களை வழி நடத்தும் தலைவர் மூப்பனார் சரியான சமயத்தில் நல்ல முடிவுகளை எடுத்து, கட்சியை உயர்ந்த நிலைக்கு எடுத்துச் செல்வார்!''

சந்திப்பு: **ப்ரியன்**
படம்: **ஸ்ரீஹரி**

### இனி மரங்கள்?

**'இன்றைக்கொரு மரம் நட்டால் நம் குழந்தைகள் நாளை பயனடைவார்கள்' என்று கணக்கு போடுவதை இனி நிறுத்தலாம். வழக்கத்தைக் காட்டிலும் 30 முதல் 50 சதவிகிதம் வேகமாக மரங்களை வளரச் செய்யும் தொழில் நுட்பத்தை இஸ்ரேல் நாட்டில் கண்டுபிடித்திருக்கிறார்கள். தாவரங்களில் உள்ள C B D (Cellulose Binding Domain) என்ற மரபுக்கூறைத் தனிமைப்படுத்தி, அதை குளோனிங் முறையில் பெருக்கும் வித்தைதான் இந்தத் தொழில் நுட்பத்துக்கு அடிப்படையாம். மரபுக்கூறு தொடர்பான ஆராய்ச்சியை உள்ளடக்கியது என்பதால் இந்தப் புதுமைக்கு எதிர்ப்பு இருக்கும் என்றும் கருதுகிறார்கள். இப்போதைக்கு ஒரு சில ரக மரங்களை அதிவேகமாக வளர்ப்பதில் வெற்றி கண்டுள்ளார்கள்.**

**நன்றி: இஸ்ரேல் டுடே**

சமத்தா கேட்ச் குடுத்திட்டியே...!



2000 ஏப்ரல் 23
விக்ரம சித்திரை 11
மலர் : 58
இதழ் : 39

# கல்கி



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

## கிரிக்கெட், குரோனியே ஸ்டைல்!

நியாயத்துக்குப் புறம்பாக யாரேனும் நடந்துகொண்டால் 'தட்ஸ் நாட் கிரிக்கெட்' (that's not cricket) என்று வசனம் சொல்வதுண்டு. அப்படியொரு வசனம் உருவாகும் அளவுக்கு கண்ணியமும் ஆதர்சமும் நிறைந்த ஆட்டமாக விளங்கியது கிரிக்கெட். இன்றைக்கு அந்த வசனமே அர்த்தமிழந்து போய்விட்டது! கிரிக்கெட்டைச் சூதாட்டமாக மாற்ற ஆட்டக்காரர்களே ஒத்துழைத்திருக்கிறார்கள்! தென்னாப்பிரிக்க அணியின் கேப்டன் ஹான்ஸி குரோனியே கிரிக்கெட் 'புக்கி'களாகச் செயல்படுவோரிடம் தாம் பணம் வாங்கிக் கொண்டதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்! 'அதற்காக எந்த மேட்சையும் நான் விட்டுக் கொடுக்கவில்லை; 'ஒத்துழைக்கக்கூடிய சில ஆட்டக்காரர்களின் பெயர்களை மட்டும்தான் இனம்காட்டினேன்' என்று அவர் சமாதானம் சொல்வதுதான் மிகக் கேவலமாக இருக்கிறது! சூதாட்டத்துக்கு உடந்தையாயிருந்தேனேயொழிய அதில் நான் ஈடுபடவில்லை என்ற விளக்கத்தை எப்படி ஏற்க முடியும்?

'இரண்டு இந்திய ஆட்டக்காரர்களும் இந்தச் சதியில் ஈடுபட்டனர்' என்று குற்றம்சாட்டப்பட்ட கார்லா கூறுவது கவலை தருகிறது. இதைக் காவல் துறை மறுத்தாலும் தீர விசாரித்து, ஆதாரபூர்வமாக நிரூபிக்காதவரை உறுத்தல் தொடரும்.

உலகளாவிய கிரிக்கெட் ரசிகர்கள் பலத்த அதிர்ச்சிக்கும் ஏமாற்றத்துக்கும் உள்ளாகி,




யிருக்கிறார்கள். குழந்தைகளும் இளம் விசிறிகளும் அரண்டு போயிருக்கிறார்கள். ஹாக்கி, ஃபுட்பால், பேஸ்பால், குத்துச்சண்டை ஆகிய விளையாட்டுப் போட்டிகள் போல், கிரிக்கெட்டும் சூதாட்டமாக மாறியிருப்பது ஒருநாள் ஆட்டங்கள் பிரபலமான பிறகுதான். ஐந்து நாள் கிரிக்கெட்டின் நிதானமும் பரபரப்பின்மையும் அதற்கு இடங்கொடுக்கவில்லை. கிரிக்கெட் ஆட்டமே அபரிமிதமான சம்பாத்தியத்துக்கான 'தொழிலாக' மாறியதும் ஒருநாள் கிரிக்கெட் சூடுபிடித்த பிறகுதான். குறுகிய காலத்திலேயே போதும்போதுமென்கிற அளவுக்குச் சம்பாதித்துவிட ஒரு கிரிக்கெட் வீரரால் இன்று முடிகிறது. ஆட்ட வருமானம் தவிர விளம்பரங்கள் மூலமும், பரிசுகள் மூலமும் வேறு ஏகப்பட்ட செல்வம் சேர்கிறது. 'சீசன்' என்று இல்லாமல் மாறி மாறி ஏதேனும் ஒரு பந்தயத் தொடர் நடந்து கொண்டேயிருக்கிற நிலை வந்து விட்டதால், தங்குதடையின்றிப் பணம் வந்து குவிகிறது. இவையெல்லாம் ஆட்டத்தின் பாலுள்ள மரியாதையையும், ஜெயிக்க வேண்டும் என்ற உத்வேகத்தையும் குறைத்து அலட்சியத்தையும் வியாபாரப் போக்கையும் விசிறி விடுகின்றன. வெற்றி பெற்றாலும் அதில் பெருமை இல்லை என்ற நிலை உருவாகி விடுகிறது.

அம்பயர் அவுட் கொடுப்பதற்கு முன்பாக, அவுட் ஆனதை உணர்ந்து தாமே மைதானத்தை விட்டு வெளியேறிய சர் டான் பிராட்மன் போன்றோரது காலமில்லை இது!

ஹான்ஸி குரோனியே கூட நமது காவல் துறையினரின் குற்றச்சாட்டை முதலில் மறுத்தார். பின்னர் மதரீதியான காரணங்களுக்காக அவர் தவறை தமது பாதிரியாரிடம் ஒப்புக் கொண்டதால் விஷயம் வெளியாகியிருக்கிறது.

ரகசியமாகப் பதிவுசெய்த டெலிபோன் உரையாடல்களின் அடிப்படையில் ஒரு பெரிய சதியை அம்பலப்படுத்தியதாகக் கூறும் நமது காவல்துறை, உண்மையில் பாவமன்னிப்புக் கோரும் கிறிஸ்தவ சம்பிரதாயத்துக்குத்தான் நன்றிகூற வேண்டும்!




டெலிபோன் உரையாடல்கள் காவல் துறைக்குக் கிடைத்த மதிப்புமிக்க துப்புகளாக இருக்கலாம்; ஆனால் அவை நீதிமன்றம் ஏற்கக்கூடிய சாட்சியங்கள் அல்ல. நீதிமன்றம் ஏற்கக் கூடிய வேறு சாட்சியங்களும் தம்வசமிருப்பதாகக் காவல் துறை கூறுகிறது. எனினும், இந்த வழக்கில் தென் ஆப்பிரிக்க அரசு பாரபட்சமின்றி ஒத்துழைத்ததாலும் குரோனியே தனது தவறை பகிரங்கமாக ஒப்புக் கொண்டதாலும் இந்திய காவல்துறை ஆதாயம் அடைந்திருப்பதை மறுக்க முடியாது.

முழு விவரங்களும் சேகரித்து வலுவான ஆதாரங்களோடு வழக்கு ஜோடிக்கும் நிலையில் குற்றவாளிகளைக் கையும் மெய்யுமாகப் பிடித்த பின்னர் காவல்துறை செய்தியை வெளியிட்டிருக்கலாம்.

சதி வலைப் பின்னல் உலகளாவ பரவியிருப்பதால் பல்நாட்டு ஒத்துழைப்புடன்தான் குற்றத்தை நிரூபிக்க முடியும்.

அப்படியிருக்கையில், அவசரப்பட்டு செய்தி வெளியிட்டதில், குற்றம்சாட்டப்பட்டவர்களும் அவர்களோடு தொடர்புடையவர்களும் எச்சரிக்கையடைந்துள்ளார்கள். இவ்வழக்கில் குற்றம்சாட்டப்பட்டுத் தலைமறைவாகியிருப்பதாகக் கூறப்படும் லண்டன் - வாழ் இந்தியர் சஞ்சீவ் சாவ்லா, தமக்கும் இந்தச் சூதாட்டத்துக்கும் சம்பந்தமில்லை என்றும் குரோனியேவைத் தமக்கு முன்பின் தெரியாது என்றும் மறுப்பு விடுத்துள்ளார். அவர் 'தலைமறைவாகவில்லை, ஆனால் கடைக்குச் சில நாட்களாக வரவில்லை' என்று அவரது ஜவுளிக் கடை உதவியாளர் பத்திரிகையாளர்களிடம் கூறியிருக்கிறார்!

மறுப்பதற்கும் மறைப்பதற்கும் அவகாசமோ வாய்ப்போ தராமல் காவல் துறை செயல்பட்டிருப்பின் இந்தச் சூதாட்டப் புற்றை ஒரே போடாகப் போட்டு நொறுக்கியிருக்கலாம். இப்போது பணம் பண்ணியவர்களையும் சரி, பணத்தையும் சரி, கைப்பற்றுவது பெரிய சவால்! ●

# குமுறல் குறைந்தது;

"ஒரு நாட்டு அதிபர், இன்னொரு நாட்டு அதிபரின் மாளிகைக்குப் போனார். பிரமித்துப் போன அந்த அதிபர், 'எப்படி இத்தனை சம்பாதித்தீர்கள்?' என்று கேட்டார். ஜன்னல் வழியே தெரிந்த பாலங்களைச் சுட்டிக்காட்டிய அந்த நாட்டு அதிபர், இதில் 10 பர்செண்ட்!' என்றார். சில நாள் கழித்து, இந்த அதிபர் அந்த அதிபரின் நாட்டுக்கு விஜயம் செய்தார். அவருடைய பிரம்மாண்டமான மாளிகையையும் அலங்காரத்தையும் கண்டு பிரமித்துப் போனார். 'எப்படி இது சாத்தியமாயிற்று?' என்று கேட்டார். இவரும் ஜன்னல் வழியே பார்க்கச் சொன்னார். பார்த்தவருக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'அட, ஒரு பாலம் கூட இல்லையே?' என்றார். 'அதனாலதான் இது சாத்தியமாயிற்று!' என்றாராம்! இந்தக் கதையை சொன்னவர் வேறு யாருமல்ல. இன்டர்நெட்டில் ஊழல் அதிகாரிகளின் பெயர்களை வெளியிட்டுப் பரபரப்பை ஏற்படுத்திய ஊழல் கண்காணிப்புத் துறைத் தலைவர் விட்டல்தான்.

பாரதிய வித்யாபவன் நடத்திய விழாவுக்காக சமீபத்தில் சென்னை வந்திருந்த அவரைச் சந்தித்தோம்.

● **வெப்-சைட்டில் லஞ்சம் வாங்கியவர்கள் பெயரை வெளியிடுகிறீர்களே, இதுவரை ஏதாவது பலன் கிடைத்திருக்கிறதா?**

பலன் என்று பார்த்தால், முதலாவது, தங்கள் பெயர் வெளியாகிவிடும் என்ற பயம் இருக்கிறபோது, ஊழல் செய்யத் துணிவுடன் முனையும் நபர்களின் எண்ணிக்கை குறையும். இரண்டாவது, சார்ஜ் ஷீட் வாங்குவதில் தாமதம் தவிர்க்கப்பட்டு, எங்கள் விஜிலன்ஸ் கமிஷன் செயலர், மாதா மாதம் தயாரிக்கும் பட்டியலை



அந்தந்த இலாகா தலைமைக்கு அனுப்பி விட்டு, இரண்டாவது கட்ட நடவடிக்கை எடுக்க ஆலோசனை வழங்குகிறார். இலாகாவின் தலைவர் மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பது பற்றி விவாதிக்கிறார். குற்றத்தின் தீவிரத்தைப் பொறுத்து, தண்டனைகள் கொடுக்கப்படுகின்றன.

இப்படி முதல் கட்ட, இரண்டாம் கட்ட நடவடிக்கைகளுக்கு உட்பட வேண்டிய அதிகாரிகளின் பட்டியலை கண்காணிப்பு கமிஷனின் கீழ் இயங்கும் 559 அதிகாரிகளுக்கு அனுப்பி வைக்கிறோம். பணியில் இருக்கிற உயர் அதிகாரி ஒருவர் விசாரணையை நடத்த வேண்டும்; ஆறு மாதத்துக்குள் விசாரணையை முடிக்க வேண்டும்.

# ஊழல் ஒழியுமா...?

## — விட்டல் பேட்டி

இதனால், விசாரணை காலதாமதம் ஆவதில்லை. குற்றம் செய்தவர், வருடக் கணக்காக தண்டனை பெறாமல் தப்பித்து வரும் நிலைமை மாறியிருக்கிறது. உண்மையிலேயே நிரபராதியான ஒருவர், வருடக் கணக்காக, மனக்குமுறலுடன் பணிபுரிய வேண்டிய கொடுமையும் தவிர்க்கப்படுகிறது.

● **மற்ற இலாகாக்களிலிருந்தோ, அரசாங்கத்திடமிருந்தோ உங்களுக்குப் போதுமான ஒத்துழைப்பு கிடைக்கிறதா?**

கிடைக்கிறது. உச்சநீதிமன்றத்துக்கு அரசியல் சட்டப் பிரிவு 235ன் கீழ், 'சூபரின்டென்டிங் பவர்' எனப்படும் அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது போல, விஜிலன்ஸ் கமிஷனுக்கு, நேரடியாகத் தண்டனை வழங்கும் அதிகாரம் கொடுக்கப்படாவிட்டாலும், கமிஷனின் அதிகாரங்கள், அதே போன்ற பவர் வழங்கப்பட்டிருக்கிறது.

● **உங்களுக்கு நேரடியாகவே புகார்களை அனுப்பலாமா?**

தாராளமாக அனுப்பலாம். தினசரி எனக்கு 200 புகார்கள் தபாலிலும், ஈமெயிலிலும் வருகின்றன. யாரால் விசாரிக்கப்பட வேண்டுமோ, அவருக்கு அனுப்பி வைக்கப்படுகிறது. ஆனால் இதுவரை, நான் அந்தப் புகாரைப் பெற்றுக் கொண்டதற்கான அக்னாலெட்ஜ்மென்ட் அனுப்பியது இடையாது. இனி அனுப்பலாம் என்று தீர்மானித்திருக்கிறேன்.

● **கஸ்டம்ஸ் கிளியரன்ஸ் ஏஜெண்டுகள் பணம் கொடுக்காவிட்டால் வேலை முடிவதில்லை என்று உங்களிடம் தெரிவித்த போது, 'கொடுக்காமல் இருந்து பாருங்கள்' என்று நீங்கள் ஆலோசனை கூறியதாகத் தெரிகிறதே?**

ஆமாம். பம்பாயில் கஸ்டம்ஸ் ஏஜென்ட்ஸ் சங்கத் தலைவர் பெர்னாண்டஸ் என்பவர் என்னைச் சந்தித்து முறையிட்டுக் கொண்டார். ஆனால் ஒரு மாதம்தான் அப்படி இருக்க முடிந்தது என்றும், பிறகு பழையபடியேதான் நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது என்றும் கேள்விப்பட்டேன். இங்கே சென்னையில் எப்படி நடக்கிறது என்று விசாரித்துப் பாருங்களேன்? இங்கே நிலைமை மாறியிருக்கிறது என்றால் எனக்கு மகிழ்ச்சிதான்.

● **உங்கள் அதிகார வரம்பு, உயர் அதிகாரிகளோடு நின்று விடுகிறதே? அப்படியானால் நாடாளுமன்ற உறுப்பினர்கள், அமைச்சர்கள் எல்லாம் இந்த வட்டத்துக்குள் வர மாட்டார்களே?**

மாட்டார்கள்! தலைமை கண்காணிப்புக் கமிஷன் உருவாக்கியபோதே, நாடாளுமன்ற உறுப்பினர் பலர் என்னிடம், 'நீங்கள் தாராளமாக ஊழல் புகார்களை விசாரித்துத்

குற்றம் செய்தவர், வருடக்கணக்காக தண்டனை பெறாமல் தப்பித்து வரும் நிலைமை மாறியிருக்கிறது. உண்மையிலேயே நிரபராதியான ஒருவர், வருடக்கணக்காக, மனக்குமுறலுடன் பணிபுரிய வேண்டிய கொடுமையும் தவிர்க்கப்படுகிறது.



## விட்டல் உரையிலிருந்து :

● குஜராத்தில் கண்காணிப்புத் துறை இயக்குனராக இருக்கும் என் நண்பரின் தாயார், பெங்களூரில் காலமானார். அவருடைய இறப்புச் சான்றிதழில் மிஸஸ் கோவிந்தராஜ் என்று எழுதிக் கொடுத்து விட்டார்கள். நண்பர் அந்த ஊழியரிடம், கோவிந்தராஜ் அல்ல; கோவிந்தராவ் என்று மாற்றி எழுதிக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டார். பல தடவை முயற்சி செய்தும் அந்த ஊழியர் மறுத்து விட்டார். கடைசியில் ஐம்பது ரூபாய் கொடுத்த பிறகே இறப்புச் சான்றிதழைச் சரியாக எழுதிக் கொடுத்தார்!

● பொது விநியோகத் திட்டத்துக்காகச் செலவிடப்படும் தொகையான 15000 கோடி ரூபாயில், சுமார் 35 சதவிகிதம் – அதாவது கிட்டத்தட்ட 5000 கோடி ரூபாய் பெறுமான உணவுப் பொருள்கள் ஏழை மக்களுக்குப் போய்ச் சேருவதே இல்லை. அவர்கள் வயிற்றில் அடிக்கப்படுகிறது. அதே போல, பம்பாய்க் கலவரத்தின் போது 300 அப்பாவி மக்கள் இறந்து போக, காரணம் இருபது லட்ச ரூபாயை லஞ்சமாகப் பெற்றுக் கொண்டு ஆர்.டி.எக்ஸ்ஸை உள்ளே அனுமதித்த கஸ்டம்ஸ் அதிகாரிகள்! ஊழல் எந்த அளவுக்குப் பாதிப்பை ஏற்படுத்தும் என்பதற்கு இவை இரண்டு உதாரணங்கள்.

● ஊழலைத் தடுக்க வேண்டும் என்று நாம் சொல்லும்போது, வாங்குகிறவர்களை மட்டுமே குற்றம் சொல்லிப் பயனில்லை. கொடுக்கிற நீங்களும்தான் காரணம். நீங்கள் அத்தனை பேரும் லஞ்சம் கொடுப்பதில்லை என்று உறுதியாய் இருந்தால் மட்டுமே ஊழலைத் தடுக்க முடியும்.

தண்டனை வழங்குங்கள். ஆனால் எங்களை உங்கள் அதிகார வரம்புக்குள் கொண்டு வந்துவிடாதீர்கள்' என்றார்கள்.

● **ஆனால் பெருமளவு ஊழல் நாடாளுமன்ற உறுப்பினர், அமைச்சர்கள் அளவில் – அதாவது அரசியல்வாதிகள் அளவில்தானே நடக்கிறது?**

லோக்பால் மசோதா நடைமுறைக்கு வந்திருந்தால் அதற்கு ஒரு விடிவு காலம் வந்திருக்கும். முப்பது வருடங்களாக 'லோக்பால்' மசோதா அறிமுகப்படுத்தப்படாமலே தூங்கிக் கொண்டிருக்கிறதே!

● **அறிவியல் துறை அதிகாரிகளையும் விசாரணைக்கு உட்படுத்தப் போகிறீர்களாமே? ஏதாவது புகார் வந்ததா? அறிவியல் சமூகத்தையும் ஒரு கை பார்க்கத் துணிந்து விட்டீர்களா?**

அப்படியெல்லாம் எதுவும் இல்லை. அறிவியல் துறை நிர்வாக ஒழுக்கம் – எதிக்ஸ் இன் அட்மினிஸ்ட்ரேஷன் ஆஃப் சயன்ஸ் சம்பந்தமான கருத்தரங்கு ஒன்று நடைபெற்ற போது, என்னால் அதில் கலந்து கொள்ள முடியவில்லை. என் உரையை என் செயலர் படித்தார். அதில், அறிவியல் துறையைச் சார்ந்தவர் பெரும்பாலும் மிக நல்லவர்கள்; ஆனால் எல்லாத் துறைகளையும் போல, அதிலும் 'கறுப்பு ஆடுகள்' இருந்தால் அவர்கள் பெயரையும் வெப்-சைட்டில் வெளியிடுவதைத் தவிர வேறு வழியில்லை என்று குறிப்பிட்டிருந்தேன். அவ்வளவுதான்! அதனால் என்னுடைய அடுத்த இலக்கு அறிவியல் துறை அறிஞர்கள் என்று பத்திரிகைகள் செய்தி வெளியிட்டு விட்டன. குறிப்பிட்ட புகார்கள் எதுவும் எனக்கு வந்து விடவில்லை.

● **ஊழலை ஒழிக்க வேறு என்னென்ன திட்டங்கள் வைத்திருக்கிறீர்கள்?**

மக்கள் ஒன்றுபட்டு, 'ஊழலற்ற சேவை' தருமாறு அரசாங்க ஊழியர்களைக் கோருவது. ஊழலில் ஈடுபட்டு வருபவர்களுக்கு விரைவில் தண்டனை. என்.சி.சி. போல பள்ளி – கல்லூரி பருவத்திலேயே நேஷனல் விஜிலன்ஸ் கோர்ஸ் பயிற்சித் திட்டத்தில் பயிற்றுவித்தல் – இவை சில. ஊழல் நிறைந்த நாடுகள் பட்டியலில், 99 நாடுகளில் இந்தியா 76ஆவது இடத்தில் இருக்கிறது. இது 40க்குள் வந்தாலே எனக்கு மகிழ்ச்சிதான்.

**— சாருகேசி**

படங்கள் : **வெங்கடேஷ்**

# பவர்ஃபைனான்ஸ்

## தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

### மும்பையில் நடத்தும்

## டெபாசிட் திரட்டும் முகாம்

இடம் : **பம்பாய் ஆர்ய வைஷ்ய சங்கம் ஹால்,**

கன்யகா பரமேஸ்வரி கோயில் வளாகம், 403, வாசவி நிலையம்,

டெலாங் சாலை, மாதுங்கா, மும்பை-400 019.

**தொலைபேசி : 4021709**

நாள் : **20-4-2000 முதல் 23-4-2000 வரை.**

நேரம்: காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை

### பாதுகாப்பான முதலீடு
### நிலையான வருமானம்

# 12.63%

36 மாதங்கள் மற்றும் அதற்கு மேற்பட்ட காலத்திற்கு மாதாந்திர வட்டி 12.50%. 12 மாதங்கள் & 1 நாளுக்கு காலாண்டு வட்டி 11.10%. 25 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.61%

# 17.24%

60 மாதங்களுக்கு மாதாந்திர கூட்டுவட்டி ஆண்டிற்கு 12.50%

*மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)** (தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894

---

28-9-99 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

" Also available on the Internet" www.tn.gov.in / www.chennaionline.com / www.[illegible].com

# ஆறு விரல் அதிசயம் ஆறடியில்!

ஹிர்த்திக்கின் பெயரைக் கேட்டால் அழுத பிள்ளை வாய்மூடும். அட விளையாட்டுக்கில்லீங்க! தன்னுடைய 16 மாசக் குழந்தை டீ.வியில் ஹிர்த்திக்கைப் பார்த்தாலோ, அவருடைய "ஏக் பல் கா ஜுனா" பாடலைக் கேட்டாலோ, 'டக்'கென்று அழுகையை நிறுத்தி விடுவதாக ஒரு அம்மணி சொல்கிறார்! 16 மாசக் குழந்தையே இப்படியென்றால் 16 வயசுக் குமரிகள்...? ஹிர்த்திக் போஸ்டரை கப்போர்டில் 'சீக்ரெட்டாக ஒட்டி வைத்து தினமும், 'குட்மார்னிங்', 'குட் நைட்' சொல்வது, காரில், ஸ்கூட்டரில், புக்ஸில் ஒட்டிவைப்பது, எல்லா ஜொள்ஸூம் உண்டு!

நடிகர் கோவிந்தாவின் மகளே, இரவு 12 மணிக்கு மேல் ஹிர்த்திக் வந்த பிறகுதான் பர்த்டே கேக் வெட்டுவேன் என அடம்பிடிக்கவில்லையா? 10,000க்கும் மேலான படிக்கப்படாத ஈமெயில்களுடன் இவரது 'ஹாட் மெயில் அக்கவுண்ட்' 'ஜாம்' ஆகிக் கிடக்கவில்லையா? இத்தனை ஏன்? பாகிஸ்தானிலேயே 'ஹிர்த்திக் மேனியா' என்றால்...?

இப்படிப்பட்ட 'ஹார்ட் த்ராபை' சாந்தாக்ரூஸிலுள்ள அவரது இல்லத்தில் சந்தித்தோம்.

அசப்பில் அப்படியே இளமைக் காலத்து ராகேஷ் ரோஷன்தான். கொஞ்சம் அதிக உயரம் (ஆறடி), அதிக ஒல்லி... ஆனால் தலையில் அலை அலையாய் அந்த கேசம்.. இதற்கும் அவர் பரம்பரைக்கும் கொஞ்சமும் சம்பந்தமேயில்லை! தாத்தா ரோஷன் சாஹேப், அப்பா ராகேஷ் ரோஷன், சித்தப்பா ராஜேஷ் ரோஷன் எல்லோர் தலையும் சஹாராவாயிருக்க, இவர் நல்லவேளை, இந்த விஷயத்தில் மட்டும் அம்மா பக்கம்!



'லண்டன் ட்ரிப்பெல்லாம் எப்படி?' என ஆரம்பித்ததும் அரண்டு விட்டார்.

"ஐயோ... கேட்காதீர்கள். 'கஹோ நா ப்யார் ஹை' ப்ரீமியருக்குப் போனேனா? ஒரே ஸ்டாம்பீட்! பெண்களெல்லாம் கூச்சல் போட, ஒருத்திக்கு எலும்பே முறிந்து விட்டது; ஒருத்திக்கு மூச்சே கிட்டத்தட்ட நின்று விட்டது; நான் நசுங்கி, கிழிந்தே விட்டேன். போதுமடா சாமி என்றாகி விட்டது!

"நான் ரொம்ப காஷுவலாக ட்ரெஸ் பண்ணிக் கொண்டு சாமானியனாக உலாவவே ஆசைப்படுகிறேன்; கூட்டத்தைக் கண்டாலே வெடவெடக்கும்; ஆனால் என்னைக் கொம்பு முளைத்தவனாக எல்லோரும் பாவிக்கிறார்கள். அன்று மும்பையில், ஒரு பத்திரிகை ஆபீசுக்குப் போயிருந்தபோது, வெளியிலே கூட்டம் கூடி 'கஹோ நா ப்யார் ஹை' என்று கோஷமெழுப்பி, என்னை நடுங்க வைத்து விட்டார்கள். ஆட்டோகிராஃப் வாங்க வருபவர்கள் நான் சூப்பர்மேனாக இருக்க



வேண்டுமென்ற எதிர்பார்ப்புடன் வருகிறார்கள்... என்ன செய்வது? எத்தனையோ இண்டர்வியூஸ், 'ஷோஸ்' எல்லாம் செய்ய வேண்டியிருக்கிறது; நான் 'யாரோ'வாக என்னை 'ப்ரஜக்ட்' பண்ணிக் கொள்ளாமல், நான் நானாக இருக்கவே பிரயத்தனப்பட்டு வருகிறேன்'' என ஆரம்பித்தார்.

''இத்தனை வெட்கப்படுபவர், அப்பா முன்னால் எப்படிக் காதல் காட்சிகளிலெல்லாம் நடித்தீர்கள்?'' என்றால், ''முதலில் ரொம்பக் கூச்சப்பட்டேன். சாதாரணமாக என் அப்பா முன்னால் நான் நிற்பது, நடப்பது, பேசுவது எல்லாவற்றிலும் ஒரு மரியாதை கலந்த கண்ணியம், இடைவெளி இருக்கும். ஆனால் ஒரு ஹீரோவுக்கு இது சரிப்படாதே? அப்பா - மகன் உறவை மறந்து, இயக்குநர் - நடிகர் என்ற உணர்வில் நடந்து கொண்டேன். முதலில் இயக்குனர் வேறு யாராவதாக இருந்திருந்தால் நன்றாயிருந்திருக்குமே என நினைத்திருக்கிறேன். ஏனென்றால், 'இது நம்ம வீட்டுப் பிள்ளை' ஸ்டைலில்தானே இங்கே நடத்தப்படுவேன்? ஆனாலும், உறவு காரணமாக அவர் என்ன நினைக்கிறாரென்பதை நானும், என் திறமைகளை மிகச் சிறந்த முறையில் வெளிப்படுத்துவது எப்படி என்பதை அப்பாவும் சரியாக அனுமானித்து நடந்ததால், படம் அமோக வெற்றி பெற்றது'' என நினைவலைகளைப் படர விட்டார்.

''இது ஒஹோ என வருமென எதிர்பார்த்தீர்களா?'' என்றால், ''நீங்கள் ஒன்று... மூன்று 'கான்' (சல்மான், ஆமிர், ஷாருக்)களில் யாரை இந்தக் கதைக்காக சைன் பண்ணப் போகிறீர்கள்? இது மாதிரி காதல் கதைகளில் நடித்து அவர்களுக்கே புளித்துப் போயிருக்குமே என்று அப்பாவிடம் அஸிஸ்டெண்டாக பணிபுரிந்து கொண்டிருந்த நான் கேட்கவும், அவர், ''ம்... உன்னைத்தான் போடப் போகிறேன்'' என்று ஒரு குண்டையே தூக்கிப் போட்டு விட்டார்! கதாநாயகி அமிஷாவும் எங்களுக்குப் பழக்கமானவரென்றாலும் சினிமாவுக்குப் புதுசு; படம் நல்லபடியாக வரவேண்டுமே என்று எனக்கு ஏக டென்ஷன். அப்பாவின் அபரிமிதமான பொறுமையால் எல்லாம் நல்லபடியாக முடிந்தது''

என ஆசுவாசப்படுத்திக் கொண்டார்.

படத்தில் ரொம்ப சவாலாக அமைந்த காட்சி எதுவென்றால், ஒன்றுமே செய்யாமல், சும்மா, 'பார்க்க அழகாக மட்டும் போஸ் கொடுக்க வேண்டிய காட்சிகள்தான்' என்கிறார். அது இவருக்கு கைவந்த கலையாகத்தானே இருக்க வேண்டும்? ஆனால் ரொம்பவும் அடக்கமாக, "காமிரா கோணங்கள் சரியாக இருந்து, லைட்டும் அளவாக அமைந்தால், யார் வேண்டுமானாலும் அழகாகத் தெரியலாம்" என்கிறார்.

"இத்தனைக்கும் முதலில் நான் ரொம்ப ஒல்லி, கண்கள் மென்மையான நிறம், மூக்கு மகா நீளம், குரல் கம்பீரமில்லை என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தவர்கள், இப்போது ஆஹா, ஓஹோ என்கிறார்கள். இந்த வெளித் தோற்றமெல்லாம் ஒரு மாயைதான்; ஒரு நடிகனின் உண்மையான அழகு, அவன் ஏற்றுக் கொண்டிருக்கும் பாத்திரத்தை பூர்ணத்துவமடைய வைப்பதில்தானிருக்கிறது" என வேதாந்திக்கிறார். ஒருகாலத்தில் இவர் அனுபம் கேரின் வொர்க்ஷாப்பில், நடிப்புக் கலை பயின்று கொண்டிருந்தபோது, எல்லோரும் அபிஷேக் பச்சனைத்தான் மொய்த்துக் கொண்டிருப்பார்களாம். ஆனால் கேர், 'டக்கு (ஹிர்த்திக்கின் செல்லப் பெயர்) தானுண்டு தன் வேலையுண்டு என குறிக்கோளுடன் உழைத்த நல்ல மாணவன்' என்றிருக்கிறார் கேர்ஃபுல்லாக!

"உங்களை 'கோரியோக்ராஃபர்ஸ் ட்ரீம்' என்றிருக்கிறாரே ஃபராகான்?" என்றாலும், "அதெல்லாமில்லை; ஃபரா நல்ல நண்பர்; அதனால் என்னால் எளிதில் கை (கால்?) யாளக்கூடிய ஸ்டெப்ஸையே தந்தார்" என்கிறார் பவ்யமாக. அதனால் சந்தோஷிவனின் புகழாரத்தை நினைவுகூர்ந்து, அவர் முகத்தை இன்னும் குங்குமமாக்காமல்,

"திடீரென்று கிடைத்திருக்கும் புகழும் பணமும் உங்களை எப்படி ஆட்டிப்படைக்கின்றன?" என சீரியஸானோம்.

"புகழ் என்னை பயமுறுத்துகிறது; ஒரு படம் வெற்றி அடைந்ததும், ஆளாளுக்கு என்னை ஷாருக்கானுடனும் ஏனையோருடனும் ஒப்பிடுகிறார்கள். அவர் ஒரு செலுலாயிட் கடவுள் என்றால் நான் அவர் காலடியில் ஊர்ந்து செல்லும் சிறு எறும்பு தான். முதல் படம் எக்கச்சக்கமாக ஓடுவதால், வரும் படங்களில் எதிர்பார்ப்புகள்

## சொந்த செலவில் வந்தார்கள்!

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியில் இருந்து 1988ல் பிரிந்தது இந்திய ஐக்கிய கம்யூனிஸ்ட் கட்சி. பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் இப்பொழுது தாய்க் கட்சியுடன் தன்னை முழுவதுமாக ஐக்கியப்படுத்திக் கொண்டது.

* இந்திய கம்யூனிஸ்ட் கட்சி துவங்கி எழுபத்தி ஐந்து ஆண்டுகள் ஆனதை முன்னிட்டு பேரணியின் ஆரம்பத்தில் எழுபத்தி ஐந்து செந்தொண்டர்கள் பிரமாண்ட கொடியேந்தி

• விழா மேடையில் தலைவர்கள்...





"ரங்கசாமி மட்டும்தானே பாட்டி செத்துட்டதா லீவு போட்டுருக்கார். மற்ற ஊழியர்கள் எல்லாம் எங்கே?"

"துக்கம் விசாரிக்கணும்னு சொல்லி ஒரு நாள் லீவு போட்டுட்டுப் போயிருக்காங்க!"

- அம்பை தேவா

அணிவகுத்து நடந்து வந்தார்கள்.

✱ இரண்டாயிரம் செந்தொண்டர்கள் சீருடையணிந்து ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள். ஒயிலாட்டம், தப்பாட்டம் போன்றவைகளும் இடம் பெற்றிருந்தன.

✱ அவரவர் சொந்தப் பணம் செலவு செய்து பேரணிக்கு வந்திருந்தனர். பெரும்பாலோரிடம் பேசிப் பார்த்ததிலிருந்து இது நமக்குத் தெரிந்தது. பேரணியில் கலந்து கொண்டோர் சுமார் ஐம்பதாயிரம் பேர் இருக்கலாம்.




✱ திருச்சி மாவட்ட செயலாளர் செல்வராசுவின் மகள் அனு வந்தனாவின் பரத நாட்டிய நிகழ்ச்சியுடன் துவங்கியது இணைப்பு விழாப் பொதுக்கூட்டம். நாட்டியம் கண்டு தோழர்கள் அனுவந்தனாவுக்கென அளித்த பணத்தையெல்லாம் கட்சி நிதிக்காக கொடுத்து விட்டாள் அந்த நாட்டியச் சிறுமி!

✱ ஐக்கிய கம்யூனிஸ்ட் கட்சியின் 25,000 உறுப்பினர்கள், இந்திய கம்யூனிஸ்ட் கட்சியுடன் தங்களை இணைத்துக் கொண்டார்கள்.

✱ இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் பெருந்துறை சட்டமன்ற உறுப்பினர் நா. பெரியசாமி, திருப்பூர் சட்டமன்ற உறுப்பினர் கே. சுப்பராயன் இருவரும் மேடைக்கு கீழே பத்திரிகையாளர்களுடன் சாதாரணமாக அமர்ந்திருந்தனர். (பந்தா இல்லை! சுற்றிலும் பரிவார ஆட்கள் இல்லை!) சபாஷ், சட்டமன்ற உறுப்பினர்கள்!

✱ ''கிராமங்களில் சாதியச் சங்கங்கள் ஏற்படாமல் தடுக்க வேண்டும். நகர்ப்புறங்களில் மதவெறி தோன்றாமல் தடுக்கப்பட வேண்டும்!'' என்றார் மாநில செயலாளர் ஆர். நல்லகண்ணு.

✱ ''இந்த நிமிடம் முதல் நாம் அனைவரும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியினர்'' என்று உரையின் துவக்கத்தில் குறிப்பிட்டார் தா. பாண்டியன். மீதிப் பேச்சு முழுவதும் கிண்டலும், குத்தலுமாய்க் கலந்து வந்து தி.மு.க. அரசின் மீதான சாடலாக வெளிப்பட்டது. பேச்சுக்குப் பேச்சு, நிமிடத்திற்கு நிமிடம் கரவொலிகள்தான்!

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

---

அதிகமிருக்கும். தற்சமயம் விது வினோத் சோப்ராவின் 'மிஷன் காஷ்மீரில் தீவிரவாதி வேடம். காலித் முகமதின் "ஃபிசா"வும் ஒரு 'ஆஃப்-பீட்' படம். மக்கள் எப்படி ஏற்றுக்கொள்வார்களோ என பயமிருக்கிறது உள்ளூர.

''பணத்தைப் பற்றி நான் இதுவரை நினைத்ததோ கவலைப்பட்டதோ இல்லை; அப்பா சின்ன வயசில் கஷ்டப்பட்டிருந்தாலும், என்னையும் என் அக்காவையும் எந்தவித கஷ்டமும் தெரியாமல்தான் வளர்த்தார். செய்யும் தொழிலைச் செவ்வனே செய்தால், பணம் தானாக வரும். அதைத் தர்மகாரியங்களுக்கும் செலவிட்டால், இன்னும் பல்கிப் பெருகும் என எண்ணுபவன் நான். காது கேளாதவர்கள், சரியாகப் பேச முடியாதவர்கள்... இவர்களுக்கு ஏதாவது செய்ய வேண்டுமென்று ஆசை" என்கிறார் சீரியஸாகவே!

அது சரி... இப்படிப் பெண்கள் அலை மோதுகிறார்களே... இவருக்கு யார் மீதாவது காதல்... மோதல்...?

"இவருக்கு ஒரே ஒரு கேர்ள் ஃப்ரெண்ட் தான். சூசன்... சஞ்சய்கானின் மகள்; படத்தில் வருவது போல்தான் முதலில் ஒரு சிக்னலில் அவரைப் பார்த்தார்" என்கிறார் ஹ்ரித்திக்கின் உதவியாளர் அஷோக்!

'சூசனைத்தான் மணமுடிக்கப் போகிறேன்' என்று தன் வாயாலேயே பிரகடனப்படுத்தியும், ஹிர்த்திக்கை இப்படி ஒரு கன்னிகைக் கூட்டம் முற்றுகையிடுகிறதென்றால்...? 'ஓ...கே... நன்றி' என விடைபெறும் போதுதான் காரணம் தெரிகிறது... வலது கையில் இரண்டு கட்டை விரல்! (தம்ஸ் அப் காரர்களுக்கு இன்னும் விஷயம் எட்டவில்லையா?) அதிர்ஷ்டத்துக்கு கேட்கவா வேண்டும்?

பி.கு: இவரது பர்த்டே ஜனவரி 10; நினைவு வைத்துக் கொண்டு கார்டோ, ஈ கார்டோ, கேக்கோ, பிரசண்டோ எதையாவது அனுப்பித் தொலைக்கலாம்.

மும்பையிலிருந்து : ஜெயஸ்ரீ ராஜ்

● **டி.கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.**

*? ஹான்ஸி குரோனியே லஞ்சம் பெற்றதை ஒப்புக் கொண்டுள்ளாரே?*

! இது குரோனியேவுக்கும் தென் ஆப்பிரிக்காவுக்கும் தலைகுனிவு என்பது ஒருபுறமிருக்க, கிரிக்கெட் ஆட்டத்துக்கு ஒரு பெரும் பின்னடைவு. கிரிக்கெட் ஆட்டத்தில் பார்வையாளர்களுக்கு சுவாரஸ்யம் ரொம்பக் குறைந்து போகும். கிண்டி குதிரைப் பந்தயத்துக்கு, சூதாடுகிறவர்களைத் தவிர வேறு யாரேனும் போவார்களோ?

● **வீரமுத்து அருணாசலம், ரேமங்கலம்.**

*? காங்கிரஸின் கூடாரம் காலியாகி விட்டது என்கிறாரே வாழப்பாடி – இது பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?*

! கூடாரமே இல்லாதவர் கூடாரம் காலியாவது பற்றிப் பேசுகிறார். நல்ல தமாஷ்!

● **எம். பிச்சைக்கனி, கீழ்வெண்பாக்கம்.**

*? 'மே. வங்க மாநிலத்தில் ஜனநாயகத்தை மீட்பதற்காக த்ரிணமுல் காங்கிரஸ் அமைக்கும் மகா கூட்டணியில் காங்கிரசும் பா.ஜ.கவும் சேர்வதில் தவறு ஏதுமில்லை' என்று மத்திய அமைச்சர் அத்வானி கூறியிருப்பது பற்றி?*

! ஜோதி பாசு பதவி ஓய்வு பெறுவதாக அறிவித்ததிலிருந்துதான் இந்தப் புதிய வியூகத்துக்குத் துணிந்திருக்கிறார்கள். இவர்கள் ஜனநாயகத்தை மீட்கவா போகிறார்கள்? உருப்படியாக உள்ள ஜனநாயகத்தைக் குட்டிச்சுவராக்குவார்கள். அதற்கு பாசு இடம் தராமல் தமது செல்வாக்கை வாக்காளர் மீது செலுத்தட்டும். பதவியில் அமராவிட்டாலும் உதவி செய்யலாமே.



• பிரபலம்!



• தலைகுனிவு!

● **எஸ். இராமலிங்கம், ஆத்தூர்.**

*? பணம் மட்டுமே ஒருவனுக்கு நிம்மதி தந்து விடுமா?*

! தரும் – அதை நேர்மையாக சம்பாதித்து, பிறருக்காகவும் செலவிடும்போது.

● **தங்கமணி, சந்திரப்பட்டி.**

*? நாத்திகம் பேசும் முதல்வர் கருணாநிதியும் ஆத்திகம் பேசும் இல.கணேசனும் ஒரே மேடையில் பேசுவதைக் கேட்கும் போது நீங்கள் என்ன நினைப்பீர்கள்?*

! ராமாயணத்தில் நாத்திக வாதம் செய்யும் ஜாபாலி முனிவரையும் பெரியாரிடமும் ஆத்திக உள்ளம் உண்டு என்று எடுத்துக் காட்டும் பெரியார்தாசனையும் நினைத்துக் கொள்வேன்!



• ஆற்றல்



• தமாஷ்!



• அற்புதம்

● **ம. தாமோதரன், காஞூர்.** ❑

*? வாழப்பாடி கழற்றி விடப்பட்டால் தே.ஜ.கூ. அமைப்புகளுக்கு நெருக்கடி வருமா?*

! பா.ம.கவை எந்த அளவுக்கு அவர் பிரிக்கிறார் என்பதைப் பொறுத்து தே.ஜ. கூட்டணி கூடுதலாக உழைக்க வேண்டிவரும்.

● **சு.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.**



• அழகு

*? நவாஸ் ஷரீஃபுக்கு ஆயுள் தண்டனை அளிக்கப்பட்டிருப்பது பற்றி...?*

! ஒரு வேடிக்கை கவனித்தீர்களா? கார்கிலை நினைத்துப் பார்த்தால், வாஜ்பாய் பஸ் பயணம் செய்து நட்பை வளர்க்க முயன்று முதுகில் குத்தப்பட்டதை எண்ணிப் பார்த்தால், நவாஸ் மீது கோபம் கோபமாக வருகிறது; அதையும் மீறி இப்போது அனுதாபமும் உண்டாகிறது! முஷாரஃப்பின் ஜனநாயகப் படுகொலை அப்படி ஒரு முரண்பாட்டை, எதிரெதிரான உணர்வு

களை உருவாக்கியுள்ளது!

● கு. கணேசன், மறைமலைநகர்.

? 'பீஹார் மாநில அரசுக்குத்தான் ஆதரவு அளிக்கிறோமே தவிர, தனிப்பட்ட யாருக்கும் அல்ல! எனவே அரசிலிருந்து விலகுவது என்ற பேச்சுக்கே இடமில்லை' என்று அம்மாநில காங்கிரஸ் கட்சித் தலைவர் உறுதியாய் முடிவு சொல்லியிருப்பது பற்றி...?

! குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்பது போலிருக்கிறது. ஊழலை ஆதரிக்க முடிவு செய்பவர்கள் குறைந்தபட்சம் அதற்குச் சப்பைகட்டு கட்டாமலாவது இருக்கலாம்!

● கே. அசோகன், பள்ளியாடி.

? ஜெயலலிதா பல்வேறு தவறுகள் புரிந்த பின்னரும் கூட அவருக்குத் தனிச் செல்வாக்கு இன்னமும் இருந்து வருகிறதே? இது உங்களுக்கு மலைப்பாகத் தோன்றவில்லையா...?


• பரிதாபம்!


• அநுதாபம்

! இன்றைக்குப் பிரபலமாக இருக்கிறார் என்று வேண்டுமானால் சொல்லலாம். இன்னமும் செல்வாக்குடன் இருப்பதாக என்னால் கருத முடியவில்லை. அ.தி.மு.க. தொண்டர்களிடமே கூட அவர் தனிச் செல்வாக்கைப் படிப்படியாக இழந்து வருகிறார்.

● ஆர். வேணுகோபால், பெரியகுளம். ●

? ஜெ யாரை மதித்து என்ன செய்திருக்கிறார் என்று கேட்டுள்ளீரே – அவர் சசி அண்ட் கோவை மதித்து ஆற்றிவரும் தொண்டுகள் கண்ணுக்குத் தெரியவில்லையா?

! அந்தக் குழுவிலும் மதிப்பது எப்போது மிதிப்பது எப்போது என்று சொல்ல முடியாதபடி பாதிக்கப்பட்டவர்கள் இருக்கிறார்கள்!

● சின்னஞ்சிறுகோபு, மயிலாடுதுறை.

? மனித குளோனிங்கை இங்கிலாந்து அரசு அனுமதித்திருப்பது சரியா?

! மனித குளோனிங் ஆராய்ச்சிகளுக்குத்தான் அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. அதற்கே உலகளாவிய ஆட்சேபணை எழுந்திருக்கிறது. விஞ்ஞானம் விபரீதத்துக்கு வழி வகுத்து விடக்கூடாது என்ற எச்சரிக்கை உணர்வினால் எழுந்த நியாயமான ஆட்சேபணை.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

# தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தனி பட்ஜெட்...?

? தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தனி பட்ஜெட் போட வேண்டும் என்று வை. பாலசுந்தரம் கோரிக்கை விடுத்துள்ளாரே?

! தாழ்த்தப்பட்டவர்களுக்காக தனித்தனியாக அத்தனை அரசியல்வாதிகளும் புலம்பித் தீர்த்தாகி விட்டது. அவர்களை உயர்த்துவதற்கான உருப்படியான யோசனையை மட்டும் யாரும் கூறவோ, அமுல்படுத்தவோ காணோம்.

● டி.ஏ.சி. பிரகாஷ், திருச்செங்கோடு.

? சுந்தரராமசாமி, ஜெயகாந்தன், பிரபஞ்சன் – யாரை அதிகம் பிடிக்கும்?

! அழகுக்காக பிரபஞ்சன், அற்புதத்துக்காக ஜெயகாந்தன், அந்தராத்மாவில் மிக நேரடியாகத் தைப்பதற்காக சு.ரா.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ம. தாமோதரன்,
காணூர்,
ஆண்டிப்பாளையம் - 611 101.
திருவாரூர் மா.வ.

● ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஆர். வேணுகோபால்,
அமர்ஜோதி பேப்பர்
ஸ்டோர்,
கடைவீதி, தென்கரை,
பெரியகுளம் - 625 601.

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

செவ்வாய் ஆட்சி செலுத்தற நேரம்னாலே சிக்கல் இல்லாத நேரம்னு அர்த்தம். இப்ப உங்க காட்டுல பருவ மழை. புதிய முயற்சிகள் அமோகமா ஓர்க்அவுட் ஆகும். எதிர்பார்த்த பண உதவிகள், வியாபார ஒப்பந்தங்கள் சுமுகமா க்ளிக் ஆகும். கலைத்துறையினருக்கு ஜாக்பாட் மாதிரி ஏதாவது லக் அடிச்சா ஆச்சர்யப்படாதீங்க. உடல் நலன் கவனம். உஷ்ணம் தொடர்பாக சிறு கோளாறுகள் ஏற்படலாம்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

நீங்க கொஞ்சம் அடக்கி வாசிக்க வேண்டிய நேரம் இது. எதிரிகள் கை ஓங்கியிருக்கு. பதுங்கிச் செயல்பட வேண்டியது அவசியம். திட்டங்கள் எதையும் வெளியில சொல்லாதீங்க. தடாலடியான காரியங்கள்ல இறங்காதீங்க. மேலதிகாரிகளோட கடும் அதிருப்திக்கு ஆளாக வேண்டி வரும். பதிலே பேசாம காரியத்துல கவனமா இருக்கறது நல்லது. பயணங்களைத் தவிர்க்கறதும் அவசியம்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

குழந்தைங்க படிப்பு, உடல் நலன்ல கவனம் செலுத்தறது அவசியம். சில புதிய தொழில் ஒப்பந்தங்கள் இப்ப ஏற்படலாம். அதனால வெளியூர்ப் பயணம், கொஞ்சம் கூடுதல் செலவு இருக்கும். வீட்டுல ஒரு நல்ல காரியம் நடக்கும். அதனால செலவு கூடும். இந்த நேரத்துல நீங்க அறிமுகமில்லாதவங்ககிட்ட கவனமா பழக வேண்டியது மட்டும் ரொம்ப முக்கியம். யாருக்கும் ஜாமீன் கையெழுத்தெல்லாம் போட்டுடாதீங்க!



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

தன்னம்பிக்கை மேலோங்கி இருக்கும். அதனால எப்பேர்ப்பட்ட காரியமும் உங்களுக்கு ஜுஜுபிதான்! எதிர்பார்த்த பணவரவு சரியா வந்து சேரும். சிலருக்கு பிரமோஷனோட கூடிய இடமாறுதல் இருக்கும். வீட்டுல கல்யாணப் பேச்சு வார்த்தை தொடங்கும். பழைய நண்பர்களை சந்திப்பீங்க. ஷேர்ல முதலீடு செய்ய நினைச்சா இப்ப செய்யலாம். ஆனா, லாட்டரி ரேஸ் சமாச்சாரமெல்லாம் கவுத்துடும்.





**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

தெய்வபலம் கூடிய நேரம் இது. தாராளமா புதிய முயற்சிகள்ல இறங்கலாம். நண்பர்களும் உறவினர்களும் உதவிக்கரம் நீட்டுவாங்க. வங்கிக் கடன்கள் சுலபமா கிடைக்கும். அரசு ஊழியர்களுக்குச் சில கூடுதல் பொறுப்புகள் வந்து சேரும். கணவன் - மனைவி உறவு சீரா இருக்கும். வீட்டு உபயோகப் பொருட்கள் சில வாங்குவீங்க. பெண்களுக்கு நகை யோகம் இருக்கு.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

கிரகங்கள் சாதகமா இல்லை. நீங்க தொழில்ல ரொம்ப எச்சரிக்கையா நடந்துக்க வேண்டியது அவசியம். யாரையும் நம்பி, பெரிய பொறுப்புகளை ஒப்படைக்காதீங்க. புதிய ஒப்பந்தங்கள் எதுவும் இப்ப வேணாம். அதே சமயம் அரசு மூலம் நடக்க வேண்டிய காரியங்கள் தடையில்லாம சீரா நிறைவேறும். வழக்குகளில் சிக்கிக்கிற 'பாக்கியம்' சில அரசியல்வாதிகளுக்கு உண்டாகும். மேடைப் பேச்சுலயும் எச்சரிக்கையா இருங்க. வீண் வம்பு

## அக்னிசர்மா பக்கம்

## ஏப்ரல் 19 முதல் 25 வரை

**மிதுன ராசிக்காரரான டைரக்டர் கே. எஸ். ரவிக்குமாருக்கு புதுப் பட ஒப்பந்தங்கள் வரலாம்.**

களில் தலையிடாம இருக்கறது எல்லாருக்குமே நல்லது.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

தேக பலம் மேலோங்கியிருக்கற அதே சமயம் மனபலம் குன்றியிருக்கும். குழப்பங்களை விலக்கி வேலையைப் பாருங்க. நீங்க ரொம்ப நாளா எதிர்பார்த்துட்டிருக்கற ஒரு 'அழைப்பு' இப்ப வந்து சேரும். அநேகமாக அது வெளிநாட்டு வேலை வாய்ப்பா இருக்கலாம்! சிலருக்குக் கல்யாண நேரம் கூடி வருது. விருந்துகள்ல கலந்துக்கற வாய்ப்பும் வரும். புதிய அறிமுகங்கள் சில உதவிகரமா இருக்கும். பண விஷயத்துல கவனமா இருங்க. கடன் குடுக்காதீங்க யாருக்கும்!



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

குழப்பவாதியா இருக்கீங்க. எதிர்காலத்தை உத்தேசித்து இப்ப நீங்க எடுக்கற முடிவு, ரொம்ப முக்கியம். பொறுப்புகளைப் பகிர்ந்து கொடுத்துட்டு ஹாயா இருங்க! கோயில் குளம் சுத்தற யோகம் இருக்கும். ஆன்மிக சொற்பொழிவாளர்களுக்கு இது வளமான நேரம். வீட்டுல மகிழ்ச்சி நிறைந்து இருக்கும். உடம்பை மட்டும் நல்ல கவனமா பார்த்துக்கங்க.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

பணி நெருக்கடி அதிகம். அதனால தூக்கம் இருக்காது. உடம்பு கெடும். கவனமா இருங்க. சிலருக்கு வெயிலுக்கு இதமா ஜில்லுனு காதல் காத்து வீசும். 'ஊ லலல்லா'ன்னு பார்க், பீச்சை வண்ணமயமாக்குவீங்க. பிரமோஷன் வாய்ப்பிருக்கு. திருமண யோகமிருக்கு. பணப் பிரச்னையுமில்லை. அப்புறமென்னங்க? பயணத்துல மட்டும் எச்சரிக்கையா இருங்க. பிக்பாக்கெட்ல இழப்பு நேரலாம். சிலருக்கு 'நாய்க்கடி யோகம்' இருக்கலாம்; உஷார்!



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

நிர்வாகத் திறமை கூடும். எதிர்ப்புகள் அகலும். நண்பர்கள் உதவுவாங்க. பணப் பிரச்னை இருக்காது. கடகடன்னு உங்க பழைய, கிடப்புல போட்ட சமாசாரங்களையெல்லாம் எடுத்து முடிக்கப் பாருங்க. வீடு வாங்கற யோசனை உள்ளவங்க, இப்ப வாங்கலாம். கலைத்துறையினருக்கு நல்ல பணவரவு நேரம் இது. சொகுசான அனுபவங்கள் வாய்க்கும். தர்ம காரியங்களுக்கு முடிஞ்ச உதவி செய்தீங்கன்னா இப்ப, ரொம்ப நல்லது.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

திறமை மேலோங்கற நேரம். செயற்கரிய காரியங்கள் ஏதாவது செய்வீங்க. அரசியல்வாதிகளுக்குப் பிரகாசமான பாதை புலப்படும். வழக்குகள் சுமுகமா தீர்ப்பாகும். எதிர்பாராத பண வரவோ, வெளிநாடு சான்ஸோ இருக்கும். புண்ணியத் தலங்களுக்குப் போய் வருவீங்க. வீட்டுல ஒரு சுபகாரியம் நடக்கும். புதிய துணிமணிகள் வாங்கிக் குவிப்பீங்க. பயணத்திலும் ஹோட்டல் உணவிலும் எச்சரிக்கையா இருங்க.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

பொருளாதார ரீதில நல்ல வளர்ச்சி இருக்கும் இப்ப. குறிப்பா ரியல் எஸ்டேட், எண்ணெய் வியாபாரிகளுக்கு இது அமோகமான நேரம். மராமத்துப் பணிகளுக்காக வீட்டுல சில செலவும் இருக்கும். படிக்கற பசங்க, மனசை அலைபாய விடாம இருக்க வேண்டியது ரொம்ப முக்கியம். சினிமாக்காரங்களுக்கு டைம் அவ்வளோ நல்லா இல்லை. புதிய முயற்சிகளைக் கொஞ்சம் ஒத்திப் போடறது நல்லது.

குடிகாரன்களோடு பேசி சமாளித்து விட்டு வருவதற்குள் போதும் போதும் என்றாகி விடுகிறது. மாமா, சித்தப்பா, பெரியப்பா மகன் எல்லோருமே குடிகாரர்களாக இருக்கிறார்கள்.

மாமாதான் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார். தூக்குத் தண்டனையிலிருந்து மீண்ட கைதி மாதிரி, தப்பித்து வந்தேன். சமூக மாற்றம் சமூக மாற்றம் என்கிறார்களே... குடிகாரர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருவதுதானா?




# போலி வேலி

## நாராயணி கண்ணகி

வேலூர் பஸ் வந்தது. ஏறினேன். இடம் இல்லை. நிற்க வேண்டியதாயிற்று.

கடைசி சீட்டில் ஆறு பேர்.

நான் போய் நின்றதும் மூன்றாவதாக உட்கார்ந்திருந்த ஆள் எழுந்து "உட்காருங்க" என்றார். எனக்கு எதுக்கு இடத்தைக் கொடுக்கிறார்?

மறுப்புச் சொல்லாமல் உட்கார்ந்தேன்.

"எவனும் என்னை ஒன்னும் பண்ண முடியாது" பக்கத்தில் உட்கார்ந்திருந்த தடிமனான ஆள் காரணமே இல்லாமல் சொன்னான். சாராய நெடியுடன்! என் தலைவிதி எங்கே போனாலும் இப்படித்தானா?

உட்கார இடம் தந்துவிட்டு, நின்று கொண்ட மகா புத்திசாலி, என்னைப் படுகு(டி)ழியில் தள்ளிவிட்ட திருப்தியுடன் வெற்றிப் பார்வை பார்த்தான். அவன் உள்ளுக்குள் சிரிப்பது கண்களில் தெரிந்தது.

குடிகாரன் என் தோளில் கை போட்டான். சாராய நெடி குமட்டியது.

"டேய்... தண்ணி அடிச்சிட்டு வந்து தள்ளாடறியா?" கண்களை உருட்டிக் கேட்டான். நடுங்கி விட்டேன்.

பான்பராக் பொட்டலம் எடுத்து நீட்டினான். "குரு! இதப் பிரிச்சி தா குரு!"என்றான்.

"பழக்கம் இல்லை" என்றேன்.

"என்னா குரு பான்பராக்குதானே..?"

பான்பராக் பொட்டலத்தை வாங்கினேன். எதிர் சீட்டின் பின்புறம் நீண்டிருந்த ஆணியின் தலையில் பொட்டலத்தை மாட்டி, கிழித்துக் கொடுத்தேன்.

"கை நீட்டு குரு! இந்தா... நீ பாதி, நான் பாதி...!" கையைப் பிடித்து அவன் இழுக்க, "வேண்டாம்" என்றேன்.

மற்றப் பயணிகள் வேடிக்கை பார்த்தார்கள்.

"என்னை எவனும் எதுவும் பண்ண முடியாது. என் முதுகுல பாத்தியா நாலு கத்திகுத்து. பாரு குரு!" என்றவாறு சட்டைய மேலே ஏற்றிக் கொண்டு குனிந்தான்.

"இருக்கு ஸார்! தெரியுது.'

அவனிடமிருந்து தப்பிக்க எழுந்து நிற்க முயற்சி செய்தேன்.

அவனே எழுந்து நின்றான். கால்களை மிதித்தான். படிக்கட்டில் போய் நின்றான்.

படியில் நின்று அவன் தள்ளாடியதைப் பார்த்து, 'திக் திக்' என்றது. விழுந்து தொலைக்கப் போகிறானென்று. ஆனால் அவன் அடுத்து செய்த காரியத்தைப் பார்த்து எட்டி உதைத்து விடலாம் போலிருந்தது.

பொறுக்கமாட்டாமல் டிரைவர் கண்டக்டரிடம் போனேன். "என்ன ஸார்? இந்த ஆள் இவ்ளோ இம்சை கொடுக்கிறான். கண்டுக்காம வர்றீங்களே... வழியில போலீஸ் ஸ்டேஷன் இருந்தா நிறுத்தி ரிப்போர்ட் பண்ணுங்களேன்" என்றேன்.

டிரைவர் சிரித்தார். கண்டக்டர் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்து, "அந்த ஆளே போலீஸ்தான் ஸார்!" என்றார்.



# 'நான் ஏன் சித்தார்த்தன் ஆனேன்?'

பேராசிரியர் பெரியார்தாசன்

புத்தர் ஓர் அரசரின் மகன். பேரரசர் அல்ல; சிற்றரசரின் மகன். அவர் துறவு மேற்கொண்டார். தாம் உணர்ந்த கொள்கைகளைப் பிறருக்கு எடுத்துச் சொல்வதற்காக ஒரு சங்கத்தை – இயக்கத்தைத் தொடங்கினார்.

அவரது போதனைகளில் மிக முக்கியமானவை என்று மூன்றைச் சொல்லலாம். ஒரு மனிதன் பிறந்தது முதல் இறக்கிற வரையிலான வாழ்க்கையை ஒழுக்கமாக வாழ வேண்டும். இது கடவுளால் கட்டளையிடப்பட்ட ஒழுக்கமல்ல. மனிதன் தனக்குத்தானே உவந்து ஏற்படுத்திக் கொள்கிற ஒழுக்கம். இது முதல் பகுதி. இரண்டாவது பகுதி, எல்லா நிகழ்வுகளும் காரண காரியத் தொடர்புடையவை என்கிற தத்துவப் பகுதி. மூன்றாவது சத்தம்மம் என்பது. அதாவது நிப்பாணமடைவது – பிறப்பறுப்பது.

இவற்றைத்தான் புத்தர் பிரசாரம் செய்தார். அதற்காக ஒரு சங்கம் அமைத்தார். அந்தச் சங்கத்தில் சேர பலரும் வந்தார்கள். எல்லா ஜாதியினரும் வந்தார்கள். ஆனாலும் அவர் சங்கத்தின் உயர்ந்த பொறுப்புகளில் நியமிப்பதற்கு ஜாதி பார்க்கவில்லை. யார் ஒழுக்கமுடையவர்களாக இருந்தார்களோ, அவர்களைத்தான் நியமித்தார். துப்புரவுப் பணியாளர் சுனிதாவை, நாவிதர் உபாலியை, கொள்ளைக்காரனாய் இருந்த 'அங்குலிமாலாவை எல்லாம் சங்கத்தின் தலைமைப் பொறுப்பேற்கச் செய்தார்.

ஆரம்பத்தில், புத்தருடைய சங்கத்தில் சேருவதற்காகப் பெண்கள் வந்தபோது, அவர்களைச் சேர்த்துக் கொள்ள மறுத்தார். அதுவும் எப்படிப்பட்ட பெண்கள்? புத்தரை வளர்த்த பிரஜாபதி அம்மையார் தலைமையில் வந்த பெண்களையே மறுத்தார். காரணம், அவர்களால் நிர்வாண நிலையை அடைய முடியாது என்பதல்ல. பெண்களின் கவர்ச்சியால், சங்கத்திலுள்ள ஆண்கள் தங்கள் ஒழுக்கத்தில் பலவீனமடைந்து விடக்கூடாது என்பதால் மறுத்தார்.

அதனாலேயே 'ஆனந்தா பெண்களைப் பார்க்காதே! பெண்கள் இருக்குமிடத்திற்குச் செல்லாதே!' என்று கூட தமது சீடர்களுக்கு உபதேசமும் செய்தார்.

ஆனால், பிறகு, ஆண்களே தங்கள் கட்டுப்பாட்டின் மீது உறுதியளித்த பிறகு, சில நிபந்தனைகளோடு பெண்களையும் சங்கத்தில் சேர்த்துக் கொண்டார் புத்தர். அவர்களைச் சேர்த்துக் கொண்ட பிறகு, அவர்களுக்கும் ஆண்களுக்குச் சமமான உயர் பதவிகளையளித்தார். பால் பேதம்

பாராட்டவில்லை புத்தர்.

அது மட்டுமல்ல; ஒருமுறை பசநேதி என்கிற மன்னன் ஒருவன் புத்தரிடம் பேசிக் கொண்டிருந்தான். அப்போது அந்த மன்னனின் சேவகன் ஒருவன், "அரசே! தங்கள் மனைவியும் எங்கள் அரசியுமான மல்லிகாவுக்குப் பெண் குழந்தை பிறந்திருக்கிறது!" என்று சொன்னான்.

அதைக் கேட்டதும் மன்னன் சோகமாகி விட்டான். இன்றைக்குக் கூட பெண் குழந்தை பிறந்தால் சோகப்படுபவர்கள் இருக்கிற போது, 2,600 ஆண்டுகளுக்கு முன்பு இருந்திருக்காதா என்ன?

மன்னனின் சோகத்தைக் கண்ட புத்தர், "பெண் குழந்தை என்பது அத்தனை சோகமான விஷயமா என்ன? ஆண் குழந்தையால் என்னவெல்லாம் செய்ய முடியுமோ, அதையெல்லாம் பெண் குழந்தையாலும் செய்ய முடியும் என்பது மட்டுமல்ல; ஆண்களை விடச் சிறப்பாகவும் பெண்களால் செய்ய முடியும். ஆண்கள் எத்தனை சிறப்பானவர்களாக இருந்தாலும் அவர்களைப் பெற்றுத் தருவது பெண்கள் தானே! அதனால் பெண் குழந்தை பிறந்ததற்காக நீ இரட்டிப்பு மகிழ்ச்சியடைய வேண்டும்!" என்றார் புத்தர்.

புத்தரின் பிரதம சீடர்களில் ஒருவர் ஆனந்தா. அவரைச் சுற்றிச் சுற்றி வந்து ஒரு பெண் காதலித்தாள். இதையறிந்த புத்தர், அந்தப் பெண்ணை அழைத்து, இந்த வாழ்க்கையின் நிலையாமை தத்துவத்தை எடுத்துரைத்து, அந்தப் பெண்ணே தன்னிச்சைப் படி துறவு மேற்கொள்ளுமாறு செய்தார். பிற்காலத்தில் ஆனந்தருக்குக் கிடைத்த உயர்வு அந்தப் பெண்ணுக்கும் கிடைக்குமாறு செய்தார்.

ஆக, நிப்பாணம் என்கிற முக்தி நிலை அடைய ஆண், பெண் பேதம் தடையில்லை. பிறந்த ஜாதியும் தடையில்லை. பயிற்சியும் முயற்சியும் இருக்குமானால் யார் வேண்டுமானாலும் உயர்ந்த நிலையை அடையலாம் என்பதை புத்தர் தமது வாழ்க்கையில் நிரூபித்துக் காட்டினார்.

இது மட்டும் என்னைக் கவர்ந்து விடவில்லை. இன்றைய பொருளாதாரச் சிக்கல்களுக்குக் கூட புத்தரிடம் தீர்வு இருப்பதை உணர்ந்தேன்.

"வறுமையைப் பங்கிட்டுக் கொள்ளாதீர்கள். செல்வத்தின் வளத்தோடு வாழுங்கள். செல்வத்தைப் பங்கிட்டுக் கொள்ளுங்கள். வறுமையில் வாடாதீர்கள்!" என்றார் புத்தர்.

'ஆசையே துன்பத்திற்குக் காரணம். அதனால் ஆசையை அறுத்தெறியுங்கள்!' என்றல்லவா புத்தர் சொன்னார் என்கிறீர்களா! உண்மைதான். ஆசையை அறுக்கத்தான் சொன்னார். ஆனால் எப்படிப்பட்ட ஆசையை? பேராசையை – நியாயமில்லாத வழிகளிலான ஆசைகளைத்தான் அறுக்கச் சொன்னார். அப்படிப்பட்ட ஆசைகளால் தான் துன்பம் வருகிறது என்றார். 'நியாயமான வழிகளில் பொருளீட்டுங்கள். அதையும் சுயநலத்துக்காக மட்டுமே பயன்படுத்தாதீர்கள். சுயநல ஆசைகளைத் துறந்து விட்டு உழைத்து ஈட்டிய செல்வத்தைப்

## சமையல் காஸ் செலவைக் குறைக்க...

● அடுப்பைப் பற்ற வைக்கும் முன் சமைக்க வேண்டிய பண்டங்களைச் சேகரித்து, சுத்தம் செய்து, ஆய்ந்து/நறுக்கி தயார் நிலையில் வைத்துக் கொள்ளுங்கள்.

● பிரஷர் குக்கரில் சமைத்தால் ஒவ்வொரு முறையும் ஐந்து முதல் எட்டு நிமிடம் வரை நேரம் மிச்சமாகும்– ஆகையால் காஸும் சேமிக்கப்படும். சாதம், பருப்பு, காய்கறி சேர்த்து ஒரே முறையில் வேக வைக்கலாம்.

● தீயைக் கட்டுப்படுத்தும் விசையில் 'on', 'off', 'simmer' என்று மூன்று குறிப்புகள் இருக்கும். Simmer அல்லது sim என்ற குறிப்பில் விசையைப் பொருத்தினால் தீ அடங்கி நிழல்போல் எரியும். எந்தப் பொருளைச் சமைப்பதானாலும் கொதிநிலை வந்தவுடனே 'சிம்' நிலையில் அடுப்பை எரியவிட்டால் போதுமானது. தொடர்ந்து 'ஹை' அல்லது 'ஆன்' நிலையில் எரிய விடுவதால் சமையல் சீக்கிரம் முடிந்துவிடாது. காஸ்தான் வீணாகும்; உணவுச் சுவையும் குன்றும்.

● நீல நிறத்தில் காஸ் கனல் எரியாவிட்டால் பர்னரைச் சுத்தம் செய்ய வேண்டும். தீயின் நிறம் மாறும்போது காஸ் வீணாகிறது என்று அறிக.

● வேக வைக்கும் பொருள்களில் அளவுக்கு அதிகமாகத் தண்ணீர் சேர்ப்பதாலும் காஸ் வீணாகும்.

● தட்டையான அடிப் பாகங்கள் கொண்ட அகன்ற பாத்திரங்கள் சமையலுக்கும் சிக்கனத்துக்கும் ஏற்றவை. சமைக்கும்போது பாத்திரம் மூடியிருந்தால் வேகமாக வேலை முடியும். காஸ் மிச்சம்!

–எம்.பி.ஜி. இந்தியா ஹேண்ட்புக் (1999-2000)

பிறருடன் பகிர்ந்து கொள்கிற தகைமையை வளர்த்துக் கொள்ளுங்கள்' என்றுதான் புத்தர் உபதேசித்தார்.

செய்யக் கூடாத தொழில்கள் என்று அவர் பட்டியலிடும் தொழில்கள் : உயிர் வதை செய்து சம்பாதிக்கக் கூடாது. பிறர் பொருளைக் கவர்கிற – திருடுகிற தொழில்களைச் செய்யக் கூடாது. பிழையான காமத்துக்குரிய விபசாரத் தொழில் செய்யக் கூடாது. பொய், பித்தலாட்டம் செய்து சம்பாதிக்கக் கூடாது. மதுவை அடிப்படையாகக் கொண்ட தொழில்களையும் செய்யக்கூடாது. இவை தவிர்த்த பிற நேர்மையான தொழில்களைச் செய் என்றுதான் புத்தர் உபதேசித்தார்.

சமத்துவம் என்பது இருப்பதைப் பகிர்ந்து கொள்வது மட்டுமல்ல; நியாயமான வழிகளில் செல்வத்தைத் தேடி அதைப் பகிர்ந்து கொள்வது. அனைவருமே சம்பாதித்து அனைவருமே பகிர்ந்து கொள்கிற ஒரு சமுதாயம் எப்படிப்பட்ட உன்னதமான சமுதாயமாக இருக்கும்! அப்படிப்பட்ட சமுதாயம் உருவாகத்தான் புத்தர் உபதேசித்தார்.

அரசியல் பற்றியும் புத்தர் சொல்லியிருக்கிறார். 'பிற நாட்டு எல்லைக்குள் புகுந்து, அவர்களை வதைத்து உன் நாட்டு எல்லையுடன் அந்த நாட்டை இணைத்துக் கொள்ள ஆசைப்படாதே! நீ இருக்கிற இடம் – நாடு சிறியது என்று எண்ணாதே. பிறருக்குரிய பெரிய இடத்துக்காக ரத்தக் களறியை ஏற்படுத்துவதை விட, உனக்குரியதாய் இருக்கிற சிறிய இடத்தில் அமைதியையும் மகிழ்ச்சியையும் ஏற்படுத்துவது நல்லதல்லவா!' என்றார் புத்தர்.

இன்னும் சுருக்கமாகச் சொன்னால், வாழும் வாழ்க்கையை மகிழ்ச்சியாக வாழ வேண்டும் என்றவர் புத்தர். பிறப்புக்கு முன்னால், எப்படியிருந்தோம்? இறப்புக்குப் பிறகு எப்படியிருப்போம் என்கிற கேள்விகள் புத்தரிடம் எழுப்பப்பட்டபோது, 'நீ ஏன் அது பற்றியெல்லாம் கவலைப்படுகிறாய்? ஆன்மா என்று எதுவும் கிடையாது. பிறப்பு முதல் இறப்பு வரை உயிர் இருக்கிறது. உயிர் இருக்கும் வரை மனம் இருக்கிறது. எதிலும் மனம்தான் முந்திச் செல்கிறது. அதுதான் சந்தோஷத்தையும் துக்கத்தையும் உன்னுள் ஏற்படுத்துகிறது. அந்த துக்கத்துக்கான காரணம் நியாயமில்லாத பேராசை என்பதும் புரிகிறது. அந்தப் பேராசையை விட்டு விட்டால் ஆனந்தமாக வாழ முடியும் என்பதும் தெரிகிறது. அப்புறம் ஏன் நீ துக்கப்படுகிறாய்? உயிருள்ள வரை ஆனந்தமாகவே இரு!' என்றார் புத்தர்.




வாழ்க்கையை இப்படி நடைமுறை சாத்தியமாக அனைவரும் வாழ வழி சொன்னவர் புத்தர். அப்படிப்பட்ட சமயம் பௌத்தம். அதனால்தான் நான் சித்தார்த்தன் ஆனேன்! அது சரி. என் சமூக மாற்றப் பிரசாரப் பணி என்னவாயிற்று?

(தொடரும்)

# சிதைவு

**சா**ந்தி - எமர்ஜென்ஸி வார்டிலிருந்து ரிசப்ஷன் ஹாலுக்கு வந்த போது கௌரி மாத நாவல் ஒன்றை வாசித்துக் கொண்டிருந்தாள். சாந்தி வந்ததும் நாவலை டிராயருக்குள் வைத்தாள். "என்ன சாந்தி... ஒடிவர்றே... என்னாச்சு அந்த கேஸ்...?"

"அனேகமா காப்பாத்த முடியாதுன்னுதான் தோணுது. நம்ம மேடத்தைப் பத்தித் தெரியாதா...? முடிஞ்ச மட்டும் பணத்தைக் கறந்துட்டு முடியாதுன்னு சொல்வாங்க. இந்த மருந்தை பக்கத்து மெடிக்கல்ல வாங்கிட்டு வா..." என்று சொல்லிவிட்டு சாந்தி திரும்ப ஓடினாள், எமர்ஜென்ஸி வார்டுக்கு.

கௌரி வெளியே வந்தாள். வராந்தாவை கடந்து வாசலுக்கு வந்தவள், ஆஸ்பத்திரியை ஒட்டியிருந்த மெடிக்கல் ஷாப்பில் மருந்துகளை வாங்கிக் கொண்டு திரும்ப வந்தாள். சாந்தி மருந்தை வாங்கிக் கொண்டு உள்ளே ஓடினாள். வாட்ச்மேன் வந்தான். பீடி நாற்றம் அடித்தது. எத்தனை தடவை சொல்வது இவனுக்கு. ஹாஸ்பிடலில் பீடி குடிக்காதே என்று. கேட்க மாட்டேனென்கிறான்.

"என்ன கௌரி... சாந்தி வந்துச்சு. அந்தப் பொண்ணு என்னாச்சு? கலைச்சாச்சா?" என்றவாறு வாசலை நோக்கிப் போனான்.

கௌரி டிராயரைத் திறந்து நாவலை எடுத்தாள். புத்தகத்தை வாசிக்கும் மனநிலையில் தற்போது இல்லை என்று தோன்றியது. அந்தப் பெண்ணின் ஞாபகம் வந்தது. கூடவே மனசையும் யாரோ பிசைவது மாதிரியிருந்தது.

**ரி**சப்ஷன் ஹாலுக்கு வந்தார் அந்தப் பெண்ணின் அப்பா. ஹாலில் இருந்த ஒரு பெஞ்சில் அமர்ந்தார். கண்களை மூடிக் கொண்டார். அந்தக் கோலம் கௌரியை சங்கடப்படுத்தியது. எத்தனை ஆசை, ஆசையாய் தன் பெண்ணை வளர்த்திருப்பார். இன்றைய அவளின் கோலத்தைக் கண்டு புழுவாய்த் துடித்துப் போயிருப்பார்.

கௌரி தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். யாராவது பேஷண்ட் வந்தால் டோக்கனைக் கொடுத்துவிட்டு உட்காரச் சொல்வது அவள் வேலை.

இயல்பான மனநிலைக்கு தன்னைக் கொண்டு வரப் பார்த்தாள். முடியவில்லை. ஹாலில்



வருபவர்கள் பார்க்க டி.வி. இருந்தது. அது ஓடிக் கொண்டிருந்தது. அணைத்தாள். திரும்பத் திரும்ப அந்தப் பெண்ணின் ஞாபகம் வந்து இம்சித்தது. அப்படியே விட்டிருக்க முடியாது. மானமரியாதை என்னாவது? இப்போது என்ன நினைப்பார்கள்? ஒருவேளை, "அவ செத்தா கூட பரவாயில்லே. கலைச்சாகணும்" என்ற எண்ணத்தில் இருக்கலாம்.

இவர்களைச் சொல்லிக் குற்றமில்லை. மேடத்திற்கு இதுபற்றின கருணை இல்லை. டேஞ்சர் ஆன கேஸ் என்று தெரிந்தும் கூட அதற்கு ஒப்புக் கொண்டிருக்கிறாள். சாந்தி சொன்ன மாதிரி, "நம்ம மேடத்துக்கு காசு ஆசை ரொம்பதான். நார்மல் டெலிவரியைக் கூட சிசேரியன் பண்ணச் சொல்வாங்க. இதுக்கு முன்னதாக இருந்த டாக்டர் எல்லாம் இப்படி



யில்லை. தங்கமானவங்க. பணம் சம்பாதிக்கிற குறிக்கோள் இல்லாதவங்க..."

வந்து சேர்ந்த கொஞ்ச நாளிலேயே தெரிந்து விட்டது. அபார்ஷன் கேஸ்கள் அதிகமாய் வரும். கல்யாணமான, கல்யாணமாகாத பெண்கள். "வேறு எந்த டாக்டரும் முடியாதுன்னு சொல்லி அனுப்பிய கேஸை கூட சேர்த்துப்பாங்க" என்றாள் சாந்தி.

இப்படிக் கூட நடக்கிறதா என்று கௌரிக்கு ஆச்சர்யமாய் இருக்கும். எப்படி இவர்களால் முடிகிறது... ஒரு பக்கம் மேடத்தின் 'சேவை' இவ்விதம் தொடர்கிறது என்றால், இன்னொரு பக்கம் குழந்தைப்பேறு இல்லாதவர்கள் - "கைராசியான டாக்டர். அவங்க பார்த்தா குழந்தை பிறக்கும்" என்று தேடி வந்து கொண்டிருக்கிறார்கள்.



சப்தம் கேட்டு நிமிர்ந்தாள். நின்று கொண்டிருந்த அந்தப் பெரியவர், திடீரென்று தடுமாறிக் கீழே விழப் போனார். ஒரு பேஷண்ட் அவரைப் பிடித்துக் கொண்டார். பெரியவர்

**யோகி**

சுதாரித்து உட்கார்ந்து கொண்டார். சாப்பிடாமல் இருந்திருப்பார் போலும். அதோடு மனக்கவலை.. சோர்வு... அயர்ச்சியடைய செய்திருக்க வேண்டும். உட்கார்ந்தார். தம் பெண்ணுக்கு நிறைய சுதந்திரம் கொடுத்து, செல்லம் கொடுத்து வளர்த்திருப்பார் போலும்.

அந்தச் சுதந்திரம் அந்தப் பெண்ணுக்கு வளர்ச்சியைத் தராமல், தளர்ச்சியைத் தந்திருக்கிறது. இவரின் மனைவிதான் மகளின் மீது கடுமையான சொற்களை வீசினார். "செத்து தொலையேன்டி" என்று அடிக்கவும் செய்தாள். "மூதேவி இப்படி பண்ணிட்டு வந்துட்டியே?" என்று முகத்திலேயே அடித்தாள்-எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்க. அவள் விலையுயர்ந்த சேலை உடுத்தி, கழுத்து நிறைய நகைகள் அணிந்திருந்தாள்



''சம்பளம் வந்ததும் முதல்ல என்ன வாங்குவே?''

''மனைவிட்ட கொண்டுபோய்க் கொடுத்துட்டு, 'டோஸ்' வாங்குவேன்!''

– பர்வதவர்த்தினி

படங்களில் வரும் அம்மா நடிகை போல்!

"முதலிலேயே சொல்லித் தொலைச்சிருக்க வேண்டியதுதானே" என்று புலம்பினாள்.

அந்தப் பெண்ணுக்கு அப்படியொன்றும் அதிக வயசு இருக்காது. ப்ளஸ் டூ படிக்கும் மாணவி போல் இருந்தாள். குழந்தைத்தனம் நிரம்பி வழிந்தது முகத்தில்.

நல்லபடியாய் எல்லாம் முடிய வேண்டும் என்று வேண்டிக் கொண்டாள் கௌரி. எதற்காக இந்த வேண்டுதல்? அந்தப் பெண்ணுக்கு எத்தனையோ கனவுகள் இருக்கலாம். காதலைப் பற்றி உன்னதமாய் நினைத்திருக்கலாம். எப்படியோ ஏமாந்து போனாள்.

**சி**ல சமயம் தோன்றும். வேறு வேலைக்குப் போய் விடலாம் என்று. ஷிப்ட் முறை வேலை வேறு. வீட்டிலும் பிக்கல் பிடுங்கல். இங்கும் இவ்விதமான பாதிப்புகள். வாழும் சூழலையே அடியோடு வெறுக்க வேண்டிய தாய் உள்ளது. ஆனால் வயிறு இருக்கிறதே! கணவனுக்குப் பெரிய அளவு சம்பளம் இல்லை. பிடிக்கிறதோ இல்லையோ வாழத்தான் வேண்டியுள்ளது. இங்கு மேடம் நல்ல சம்பளம் தருகிறாள். இந்த அளவு சம்பளம் வெளியே கிடைப்பது கடினம்.

**வீ**ட்டிற்குப் போக இன்று தாமதமாகக் கூடும். பேஷண்ட்கள் வந்து கொண்டேயிருக்கிறார்கள். மேடம் இன்னும் எமர்ஜென்ஸி வார்டிலிருந்து வரவில்லை. இப்போதே மணி ஏழுக்கு மேலாயிற்று. மேடம் எத்தனை மணிக்கு ரூமுக்கு வருவார்? இன்னும் எத்தனை பேஷண்ட்கள் வருவார்களோ... அடுத்த ஷிப்ட் நர்ஸ் வந்தாலும், பேஷண்ட்கள் அதிகமாய் இருந்தால் உடனே கிளம்பி விட முடியாது. விவரம் சொல்லிவிட்டுப் போக பத்து மணிக்கு மேலாகக்கூடும். அயர்ச்சியாயிருந்தது.

ரேணுகா, சாந்தி, லலிதா வந்தார்கள். அவர்களின் முகமே சொல்லி விட்டது. அந்தப் பெண்ணின் கதி என்னவாயிற்று என்று...

மேடம் வந்து விட்டதாக ரேணுகா சொன்னாள்.

மணி பார்த்தாள். எட்டு. பசித்தது. அடுத்த ஷிப்ட் நர்ஸ்களை எதிர்பார்த்தாள். மாமியார் காட்டுக்கத்தல் கத்துவாள் லேட்டாகப் போனால்.

**வே**லை முடிந்து வீட்டிற்கு வந்த போது மணி பத்துக்கு மேலாகியிருந்தது. ஆஸ்பத்திரியில் இருந்து நடக்கும் தூரம் தான் வீடு.

கதவு பூட்டியிருந்தது. தட்டினாள். அத்தை கதவைத் திறந்தாள். கடுகடுவென்று இருந்தாள். சங்கர் டீவி. பார்த்துக் கொண்டிருந்தான். அத்தை முகத்தை பார்க்கப் பயமாய் இருந்தது. "உனக்கொரு குழந்தையிருந்தா வீட்டுக்கு நேரத்துக்கு வரணும்னு தோணும்" என்று சொல்லிக் கொண்டிருந்தாள் அத்தை.

கௌரிக்கு அழுகை வந்தது. குழந்தையில்லை என்பதால் அழுகிறோமா இல்லை – குழந்தை வேண்டாம் என்று கலைக்க வந்த பெண்ணுக்காக அழுகிறோமா? கண்ணீருக்கு மத்தியில் எதுவும் தெளிவாகத் தெரியவில்லை. ●

காச்மூச்!



# வேட்பாளர்கள் பிச்சைக்காரர்களா?

**பீட்டர் அல்போன்ஸ், எம்.பி.**

எனக்குப் பல கோபங்கள். முதலாவது, எல்லாக் கடமைகளும்; எல்லா பொறுப்புகளும் இந்த நாட்டை ஆள்பவர்களுக்கும், அமைச்சர்களுக்கும், மட்டுமேதான், தங்களுக்கு எந்தப் பொறுப்புமில்லை என்று நினைக்கும் படித்த நடுத்தரவர்க்க மக்களைப் பார்க்கும்போது எனக்குப் பற்றிக்கொண்டு வருகிறது. இந்த மக்கள் அபிப்ராயத்தை உருவாக்கக்கூடியவர்கள். ஆனால் பலர் தேர்தலின்போது வாக்களிக்க வருவதில்லை. ஏதோ வேட்பாளர்கள் எல்லாம் பிச்சைக்காரர்கள் போலவும், 'உங்கள் யாருக்கும் வோட்டு இல்லை போ' என்று சொல்வதில் ஒரு கிறுக்குத்தனமான, கொடூரமான சந்தோஷம் அடைகிறார்கள் இவர்கள். இந்தக் கும்பலைப் பார்த்தால்தான் என்றில்லை, இவர்களைப் பற்றி நினைத்தாலே உள்ளுக்குள் குமுறிப் போகிறேன்.

இரண்டாவதாக, நேர்மை, நாணயம், தர்மம் இவையெல்லாம் அரசியல்வாதிகள் மட்டுமே கடைப்பிடிக்க வேண்டியவை என்று வலியுறுத்தி அதில் யாராவது எங்காவது சிறிது வழுக்கினாலும் உடனே வரிந்து கட்டிக் கொண்டு எழுதித் தள்ளும் சில பத்திரிகைகள் மீது எனக்கு ஏகக் கோபம். சிமெண்ட் நிறுவனங்கள் ஒரு 'பாவ கூட்டணி' அமைத்துக் கொண்டு அதன் மூலம் சிமெண்ட் விலையை அநியாயத்துக்கு உயர்த்தி இரண்டாயிரம் கோடி ரூபாய்க்கு மேல் பணம் பண்ணியிருக்கிறார்கள். இதை நான் சொன்னபோது அப்படியெல்லாம் இல்லை என்றார்கள். இப்போது எம்.ஆர்.டி.பி. (MRTP) கமிஷனே உறுதிப்படுத்தி விட்டது. எந்தப் பத்திரிகையாவது இந்த அநியாயக் கொள்ளையைக் கண்டித்து எழுதியதா? இல்லையே! எழுதாது என்று எனக்குத் தெரியும். ஏனென்றால் இப்படிக் கொள்ளையடிப்பவர்களின் விளம்பரங்கள் இவர்களுக்கு வேண்டுமே! எப்படி எழுதுவார்கள்? முதுகெலும்பு இல்லாத பத்திரிகைகளைக் கண்டால் நான் கோபத்தால் பொங்கிப் போகிறேன்!

சந்திப்பு:
**ராணிமைந்தன்**

படம்:
**வெங்கடேஷ்**

# பொன்னியின் செல்வன்



### முப்பத்து ஒன்பதாம் அத்தியாயம்

## "விபத்து வருகிறது!"

பழுவேட்டரையர் சிரித்தார். நந்தினியின் வார்த்தையைக் கேட்டுப் பரிகாசமாகச் சிரிப்பதாய் எண்ணிக் கொண்டு இலேசாகத்தான் சிரித்தார். அந்தச் சிரிப்பின் ஒலியினால் அந்த அறையும் அதிலிருந்த சகல பொருள்களும் நடுநடுங்கின.

தம்மை அவமதித்தவர்களை நந்தினி தன் கையினாலேயே கத்தி எடுத்துக் கொன்றுவிடுவதாகக் கூறியதைக் கேட்ட பேர்து அவருடைய உள்ளத்தில் ஒரு பெருமிதம் உண்டாயிற்று. தம்முடைய மரியாதையைப் பாதுகாப்பதில் நந்தினிக்கு அவ்வளவு அக்கறை இருக்கிறது என்பதை அறிந்ததில் பழுவேட்டரையருக்கு இறும்பூது ஏற்பட்டது. அதே தோரணையில் அவள் மேலும் பேசிக் கேட்க வேண்டுமென்று ஆசை அவர் மனத்தில் ஒரு பக்கம் பெருகியது. மற்றொரு பக்கத்தில் அவன் அம்மாதிரியெல்லாம் பேசுவதைத் தாம் விரும்பவில்லை என்று காட்டிக் கொள்ளவும் ஆசைப்பட்டார்!

"ஐயா! ஏன் சிரிக்கிறீர்கள்! என் வார்த்தையில் அவநம்பிக்கையினால் சிரிக்கிறீர்களா?" என்று நந்தினி கேட்டான்.

"தேவி! மந்தார மலரின் இதழைப் போல் மென்மையான உன் கையினால் கத்தியை எப்படி எடுப்பாய் என்று எண்ணிச் சிரித்தேன். மேலும் நான் ஒருவன் இரண்டு நீண்ட கைகளை வைத்துக் கொண்டு உயிரோடிருக்கும் போது..."

"ஐயா! தங்கள் கரங்களின் பெருமையையும் வலிமையையும் நான் அறிவேன்.

**அமரர் கல்கி**

யானைத் துதிக்கையையொத்த நீண்ட கைகள். இந்திரனுடைய வஜ்ராயுதத்தைப் போன்ற வலிமையுள்ள கைகள். போர்க் களத்தில் ஆயிரமாயிரம் பகைவர்களை வெட்டி வீழ்த்திய கைகள். சோழ சக்கரவர்த்திகளின் சிரத்தில் மணிமகுடத்தை வைத்து நிலைநாட்டி வரும் கைகள். ஆனாலும் அதையெல்லாம் இன்று நினைத்துப் பார்ப்பாரில்லை. நேற்றுப் பிறந்த பிள்ளைகள் தங்களைக் 'கிழடு' என்று சொல்லி ஏளனம் செய்யும் காலம் வந்துவிட்டது. தாங்களோ மந்திரத்தால் கட்டுண்ட சர்ப்பராஜனைப் போல் சோழ குலத்தாரிடம் பக்திக்குக் கட்டுப்பட்டுச் சும்மா இருக்க வேண்டியிருக்கிறது. என்னுடைய கரங்கள் வளையல் அணிந்த மென்மையான கரங்கள்தான். மலர் எடுத்து மாலை கட்டுவதற்கு மட்டுமே தகுதியுள்ள கைகள்தான். ஆனாலும் வீராதி வீரராகிய தங்களை அக்கினி சாட்சியாகக் கைப்பிடித்த காரணத்தினால் எனது கைகளுக்கும் சிறிது சக்தி ஏற்பட்டிருக்கிறது. என் கற்பைக் காத்துக் கொள்வதற்குள் என் கணவரின் மரியாதையை நிலை நிறுத்துவதற்கும் அவசியம் ஏற்படுமானால் என் கைகளுக்கும் கத்தி எடுக்கும் வலிமை உண்டாகிவிடும். இதோ பாருங்கள்...!'' என்று நந்தினி கூறிவிட்டு, மஞ்சத்துக்கு அடியிலிருந்த பெட்டியைத் திறந்து அதன் மேற்புறத்தில் கிடந்த ஆடைகளை அப்புறப்படுத்தினாள். அடியில் தகதக வென்று பிரகாசித்துக் கொண்டிருந்த நீண்ட வாளை ஒரு கையினால் அலட்சியமாக எடுத்துத் தலைக்கு மேலே தூக்கிப் பிடித்தாள்.

பழுவேட்டரையர் அதைப் பார்த்த வண்ணமாகச் சிறிது நேரம் பிரமித்துப் போய் நின்றார். பின்னர், ''இந்தப் பெட்டிக்குள்ளே இந்த வாள் எத்தனை காலமாக இருக்கிறது? உன் ஆடை ஆபரணங்களை வைத்திருப்பதாக அல்லவோ நினைத்தேன்?'' என்றார்.

நந்தினி வாளைப் பெட்டியில் திரும்ப வைத்துவிட்டு, "ஆம்; என் ஆடை ஆபரணங்களை இந்தப் பெட்டியிலேதான் வைத்திருக்கிறேன். என் ஆபரணங்களுக்குள்ளே மிக முக்கியமான ஆபரணம் இந்த வாள். என் கற்பையும் என் கணவருடைய கௌரவத்தையும் பாதுகாப்பதற்குரியது" என்றாள்.

"ஆனால் இதை நீ உபயோகப்படுத்துவதற்கு அவசியம் ஒன்றும் ஏற்படப் போவதில்லை; நான் ஒருவன் உயிரோடிருக்கும் வரையில்!"

"அதனாலேதான் இந்த வாளை நான் வெளியில் எடுப்பதில்லை. ஈழ நாட்டிலிருந்து வேங்கி நாடு வரையில் சோழ ராஜ்யத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும் தங்கள் தோள் வலிமை தங்கள் கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியாதா? அல்லது பேதையாகிய என்னைத்தான் பாதுகாக்க முடியாதா? என்றாலும், முக்கியமான, ராஜரீகமான காரியங்களில் ஈடுபட்டிருக்கும் தாங்கள் எப்போதும் என்னைக் கட்டிக் காத்துக் கொண்டிருக்க முடியாது. தங்களைப் பிரிந்திருக்கும் நேரங்களில் என்னை நான் பாதுகாத்துக் கொள்ள ஆயத்தமாய் இருக்க வேண்டும் அல்லவா?"

"தேவி! அதற்கு அவசியம் என்ன? போனது போகட்டும். இனி நான் உன்னைப் பிரிந்திருக்கப் போவதே இல்லை..."

"ஐயா! என்னுடைய விருப்பமும் அதுதான். ஆனால் இந்த ஒருதடவை மட்டும் தாங்கள் என்னைப் பிரிந்து தஞ்சை புரிக்குப் போய் வாருங்கள்..."

"இது என்ன பிடிவாதம்? எதற்காக இந்தத் தடவை மட்டும் நான் உன்னை இங்கே விட்டுவிட்டுப் போக வேண்டும்?" என்று பழுவேட்டரையர் கேட்டபோது அவருடைய புருவங்கள் நெரிந்தன.

"சுவாமி! அதற்கு இரண்டு காரணங்கள் இருக்கின்றன. என்னை நீங்கள் இப்போது தங்களுடன் அழைத்துப் போனால் இங்குள்ள மூடர்கள் மேலும் நம்மைக் குறித்துப் பரிகசித்துச் சிரிப்பார்கள். 'கிழவருக்கு இளையராணியிடம் அவ்வளவு நம்பிக்கை!' என்று சொல்லுவார்கள். அதை நினைத்தாலே எனக்கு இரத்தம் கொதிக்கிறது. மற்றொரு காரணம், இன்னும் முக்கியமானது. சம்புவரையரைத் தங்களுடைய அத்தியந்த சிநேகிதர் என்று இத்தனை காலமும் தாங்கள் சொல்லி வந்தீர்கள்; நம்பியும் வந்தீர்கள். ஆனால் இளவரசர் வந்ததிலிருந்து அவருடைய

பேச்சிலும் நடவடிக்கைகளிலும் ஏற்பட்டிருக்கும் மாறுதலைக் கவனித்தீர்களா? தாங்கள் கவனிக்காவிட்டாலும் நான் கவனித்துக் கொண்டு வருகிறேன்..."

"நானும் அதைக் கவனித்துத்தான் வருகிறேன். அந்த மாறுதலுக்கு காரணம் என்னவாயிருக்குமென்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறேன்..."

"தாங்கள் கபடமற்ற உள்ளமுடையவர்; ஆகையால் ஆச்சரியப்படுகிறீர்கள். எனக்கு அதில் ஆச்சரியம் இல்லை. மனிதர்களுடைய பேராசை இயல்புதான் சம்புவரையரின் மாறுதலுக்குக் காரணம். இளவரசர் ஆதித்த கரிகாலர் பெண்களை முகமெடுத்தே பார்ப்பதில்லையென்றும் வதந்தியாயிருந்தது. இங்கு அவர் வந்ததிலிருந்து அதற்கு நேர்மாறாக நடந்து வருவதைப் பார்த்திருப்பீர்கள். பெண்கள் இருக்குமிடத்துக்கு அடிக்கடி வருகிறார். கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகிறார். இதற்கெல்லாம் காரணம் சம்புவரையர் மகள் மணிமேகலை மீது அவருடைய மனம் சென்றிருப்பதுதான். 'மணிமேகலையை வேட்டையாடுவதற்கு அழைத்துப் போகலாமா?' என்று கூடக் கரிகாலர் கேட்டார் அல்லவா? இது சம்புவரையருக்கும் தெரிந்திருக்கிறது. ஆகையால் பழைய ஏற்பாடுகளையெல்லாம் அவர் மறந்து விட்டார். தம் அருமை மகள் தஞ்சாவூர்த் தங்கச் சிங்காதனத்தில் சக்கரவர்த்தினியாக வீற்றிருக்கப் போவது பற்றிக் கனவு காணத் தொடங்கிவிட்டார்..."

"ஆமாம்; நீ சொல்வதுதான் காரணமாயிருக்க வேண்டும். சம்புவரையன் இத்தகைய நீச குணம் படைத்தவன் என்று நான் கனவிலும் எண்ணவில்லை. இரண்டு மாதங்களுக்கு முன்புதான் இதே மாளிகையில் மதுராந்தகரைத் தஞ்சைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைப்பதாக எல்லாரும் கூடிச் சபதம் செய்தோம். சீச்சீ! இப்படிப் பேச்சுத் தவறுகிறவனும் ஒரு மனிதனா?" என்று பழுவேட்டரையர் சீறினார்.

"சுவாமி! அதனாலேதான் நான் தங்களுடன் வரவில்லை என்று சொல்கிறேன். தாங்கள் இல்லாத சமயத்தில் இவர்கள் இங்கே என்ன சதி செய்கிறார்கள் என்பதைக் கவனித்துக் கொள்வேன். ஏதேனும் இவர்கள் சூழ்ச்சி செய்தால் அது பலிக்காமற் செய்ய வழி தேடுவேன்."

"நந்தினி! இதிலேயெல்லாம் நீ எதற்காகப் பிரவேசிக்க வேண்டும்?"

"கணவர் சிரத்தை கொண்டுள்ள காரியத்தில் மனைவிக்கும் சிரத்தை இருக்க வேண்டாமா? 'வாழ்க்கைத் துணைவி' என்று பிறகு, எதற்காக எங்களைச் சொல்கிறது?"

"என்ன இருந்தாலும் இந்த மூர்க்கர்களுக்கும் நீசர்களுக்கும் நடுவில் உன்னைத் துணையின்றி விட்டு விட்டு நான் போகிறதா? அது எனக்குச் சிறிதும் சம்மதமாயில்லையே?"

"எனக்கு இங்கே துணையில்லாமற் போகவில்லை. மணிமேகலை இருக்கிறாள். எனக்காக அந்தப் பெண் என்ன வேணுமானாலும் செய்வாள்..."

"அது உண்மைதான். நானும் கவனித்தேன். உன்னுடைய மோகன சக்தி அவளை உன் அடிமையாக்கியிருக்கிறது. ஆனாலும் அது எவ்வளவு தூரம் நிலைத்திருக்கும்? ஆதித்த கரிகாலன் சிங்காதனத்தில் ஏறி அந்தப் பெண்ணைச் சக்கரவர்த்தினியாக்கிக் கொள்ளப் போவதாக ஆசை காட்டினால்..."

"ஐயா! அது விஷயத்தில் தங்களுக்குச் சிறிதும் சந்தேகம் வேண்டியதில்லை. மணிமேகலை என் கருத்துக்கு மாறாகத் தேவலோகத்து இந்திராணி பதவியையும் ஏற்றுக் கொள்ள மாட்டாள். 'கரிகாலனை இந்தக் கத்தியால் குத்திக் கொன்று விட்டு வா!' என்று நான் சொன்னால், உடனே அவ்விதம் செய்துவிட்டு வருவாள். என்னுடைய மோகன சக்தியைப் பற்றி அடிக்கடி தாங்களே சொல்வீர்கள் அல்லவா? அது மணிமேகலையை முழுதும் ஆட்கொண்டிருக்கிறது! வேணுமானாலும், இப்போதே தங்களுக்கு அதை நிரூபித்துக் காட்டுகிறேன்!" என்றாள் நந்தினி.

பழுவேட்டரையரின் உடம்பு படபடத்தது. அந்தக் கிழவர் உதடுகள் துடிக்க, தொண்டை அடைக்க, நாத் தழுதழுக்கக் கூறினார்: - "தேவி! உன்னுடைய சக்தியை நான் அறிவேன். ஆனால் கரிகாலன் விஷயத்தில் நீ அம்மாதிரி எதுவும் பரீட்சை பார்க்க வேண்டாம். அவன் அறியாச் சிறுவன்.

ஏதோ தெரியாமல் உளறினான் என்பதை நாம் பெரிதுபடுத்தக் கூடாது. கரிகாலன் மணிமேகலையை மணந்து கொள்ள இஷ்டப்பட்டால் நாம் அதற்கு தடையாக இருக்க வேண்டாம்!"

"ஐயா! நாம் தடை செய்யாமலிருக்கலாம். ஆனால் விதி ஒன்று இருக்கிறதே! அதை யார் தடை செய்ய முடியும்? மணிமேகலை என்னிடம் பிரியங் கொண்டவளாயிருப்பது போல் நானும் அவளிடம் பாசம் வைத்திருக்கிறேன். என்கூடப் பிறந்த தங்கையைப் போல் அவளிடம் ஆசை கொண்டிருக்கிறேன். அற்பாயுளில் சாகப் போகிறவனுக்கு அவளை மணம் செய்து கொடுக்க நான் எப்படி இணங்குவேன்?" என்றாள் நந்தினி. அப்போது அவளுடைய பார்வை எங்கேயோ தூரத்தில் நடக்கும் எதையோ பார்த்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

பழுவேட்டரையர் இன்னும் அதிக பரபரப்பை அடைந்து கூறினார்:- "நந்தினி! இது என்ன வார்த்தை? சோழ சக்கரவர்த்தியின் வேளக்காரப் படைக்கு நான் ஒரு சமயம் தலைவனாயிருந்தேன். சக்கரவர்த்தியையும் அவருடைய சந்ததிகளையும் உயிரைக் கொடுத்தேனும் பாதுகாப்பதாகச் சத்தியம் செய்திருக்கிறேன்..."

"ஐயா! அந்தச் சத்தியத்தைத் தாங்கள் மீற வேண்டுமென்று நான் சொல்லவில்லையே?"

"உன்னால் கரிகாலனுக்கு ஏதேனும் இங்கு நேர்ந்தாலும் அந்தக் குற்றம் என்னையே சாரும். சிறு பிள்ளையின் பரிகாசப் பேச்சைப் பொறுக்காமல் கிழவன் படுபாதகம் செய்து விட்டான் என்று உலகம் என்னை நிந்திக்கும். ஆறு தலைமுறையாக எங்கள் குலம் சோழர்களுக்குப் பாதுகாப்பாக இருந்து எடுத்திருக்கும் நல்ல பெயர் நாசமாகும்..."

"அப்படியானால் தாங்கள் இந்த ஊரை விட்டு உடனே போக வேண்டியது மிகவும் அவசியம்!" என்று நந்தினி மர்மம் நிறைந்த குரலில் கூறினாள்.

"எதனால் அவ்விதம் சொல்லுகிறாய்?" என்று பழுவேட்டரையர் கேட்டார்.

"தங்களிடம் எப்படிச் சொல்வதென்று தயங்கிக் கொண்டிருந்தேன். இப்போது சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. துர்க்கா பரமேசுவரி எனக்குச் சில அபூர்வ சக்திகளை அளித்திருக்கிறாள். இது தங்களுக்கே தெரியும். சுந்தர சோழர் இளம் வயதில் ஸ்திரீ ஹத்தி தோஷத்துக்கு உள்ளானவர் என்பதை நான் என் மந்திர சக்தியினால் அறிந்தேன். அதைத் தங்களுக்கும் நிரூபித்துக் காட்டினேன். அதேபோல் ஆதித்த கரிகாலனுடைய இறுதிக் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பதையும் இப்போது என் அகக் கண்ணினால் காண்கிறேன். அது தங்கள் கையினாலும் நேரப் போவதில்லை; என் கையினாலும் நேரப் போவதில்லை. ஆனால் யமனுடைய பாசக் கயிறு அவனை நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பது மட்டும் நிச்சயம். காட்டிலே வேட்டையாடப் போன இடத்திலே அவனுக்கு இறுதி நேரலாம்; அல்லது அரண்மனையில் படுத்திருக்கும்போதும் நேரலாம். புலி, கரடி முதலிய துஷ்ட மிருகங்களினால் நேரலாம்; அல்லது அவனுடைய சிநேகிதர்கள் விடும் அம்பு தவறி விழுந்தும் அவன் சாகலாம். அல்லது மென்மையான பெண்ணின் கரத்திலே பிடித்த கத்தியினால் குத்தப்பட்டும் அவனுக்கு மரணம் நேரலாம். ஆனால், ஐயா, அவனுடைய மரணம் தாங்கள் கைப்பிடித்து மணந்த என்னுடைய கரத்தினால் நேராது என்று தங்களுக்குச் சத்தியம் செய்து கொடுக்கிறேன். சாலையோரத்திலே அநாதையாக நின்ற என்னைத் தாங்கள் உலகறிய மணந்து இளையராணி ஆக்கினீர்கள். அத்தகைய தங்களுக்கு என்னால் ஒரு பழியும் ஏற்படாமல் பார்த்துக் கொள்வேன். அதற்காகவே தாங்கள் இச்சமயம் இங்கு இருக்க வேண்டாம், போய் விடுங்கள் என்று வற்புறுத்திச் சொல்கிறேன். தாங்கள் இங்கு இருக்கும் சமயம் கரிகாலனுக்கு என்ன விதமான விபத்து நேர்ந்தாலும் உலகத்தார் தங்களை அத்துடன் சம்பந்தப்படுத்துவார்கள். அருள்மொழிவர்மனைக் கடல் கொண்டதற்குத் தங்கள் மீது பழி கூறவில்லையா? அம்மாதிரி இதற்கும் தங்கள் பேரில்

குற்றம்சாட்டுவார்கள். தங்களால் விபத்து நேர்ந்ததென்று சொல்லாவிட்டாலும் தாங்கள் ஏன் அதைத் தடுக்கவில்லை என்று கேட்பார்கள்! ஆனால் தங்களுடைய வஜ்ராயுதம் போன்ற கரங்களாலும் கரிகாலனுக்கு வரப்போகும் விபத்தைத் தடுக்க முடியாது.. ஆகையால், தாங்கள் உடனே போய்விட வேண்டும். என்னைத்



தங்களுடன் அழைத்துக் கொண்டு போனால், அதைப் பற்றியும் வீண் சந்தேகம் ஏற்படும். முன்னதாகத் தெரிந்திருந்தபடியினால் என்னையும் அழைத்துக் கொண்டு போய் விட்டதாகச் சொல்வார்கள். ஆகையால், தாங்கள் மட்டுமே போக வேண்டும். என்ன நேர்ந்தாலும், எப்படி நேர்ந்தாலும், அதனால் தங்களுக்கு அபகீர்த்தி எதுவும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள நான் இங்கிருப்பேன். ஐயா! என்னிடம் அவ்வளவு நம்பிக்கை தங்களுக்கு உண்டா?'' என்று நந்தினி கேட்டு விட்டுத் தன் கரிய பெரிய விழிகளால் பழுவேட்டரையரின் நெஞ்சை ஊடுருவிப் பார்த்தாள். பாவம்! அந்த வீரக் கிழவர் நந்தினியின் சொல்லம்பினால் பெரிதும் கலங்கிப்



போயிருந்தார். அவளுடைய கண் அம்புக்கு முன்னால் கதிகலங்கிப் பணிந்தார்.

## நாற்பதாம் அத்தியாயம்

# நீர் விளையாட்டு

ந்த வரலாறு நிகழ்ந்த காலத்துக்கு அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தில் மூவேந்தர்களைத் தவிரச் சிற்றரசர்கள் எழுவர் புகழ்பெற்று விளங்கினார்கள். அவர்களுக்கு 'வள்ளல்கள்' என்ற பட்டப் பெயரும் வழங்கி வந்தது. அந்த எழுவரில் ஒருவன் கொல்லிமலையின் தலைவனான ஓரி என்பவன். இவன் வில் வித்தையில் இணையில்லாத வீரன் என்று பெயர் பெற்றிருந்தான். இவன் தன் வலிய பெரிய வில்லை வளைத்து நாணேற்றி அம்பை விட்டானாயின், அது இராமபிரானுடைய அம்பு ஏழு மரங்களைத் தொளைத்தது போல முதலில் ஒரு புலியைத் தொளைத்து, பிறகு ஒரு மானைத் தொளைத்து, பிறகு ஒரு பன்றியைத் தொளைத்து, பின்னர் ஒரு முயலைத் தொளைத்து, கடைசியில் ஒரு மரத்தையும் தொளைத்து விடுமாம். இவ்வாறு புலவர்களால் அவனுடைய வில் வித்தைத் திறன் பாடப் பெற்றிருந்தது. அதிலிருந்து அவனை 'வல்வில் ஓரி' என்று குறிப்பிடுவதும் வழக்கமாயிற்று.

கொல்லிமலை வல்வில் ஓரியின் மீது, அந்நாளில் வலிமை பெற்ற வேந்தனாக விளங்கிய சேரன் கோபம் கொண்டான். அவனைத் தாக்குவதற்குத் திருக்கோவலூர்த் தலைவன் மலையமான் திருமுடிக்காரியின் துணையை நாடினான். காரியின் வீரம் ஓரியின் வீரத்துக்குக் குறைந்ததன்று. அத்துடன் மலையமான் காரிக்குப் படைபலம் அதிகமாயிருந்தது. மலையமான், கொல்லிமலை மீது படை எடுத்துச் சென்று வல்வில் ஓரியைக் கொன்று அவனுடைய மலைக் கோட்டையையும் நிர்மூலமாக்கினான்.

அதே காலத்தில் கொல்லிமலையை அடுத்திருந்த நிலப்பகுதியில் அதிகமான் நெடுமானஞ்சி என்னும் குறுநில மன்னன் அரசு புரிந்து வந்தான். வல்வில் ஓரியுடன் அவன் உறவு பூண்டவன். வல்வில் ஓரியைக் கொன்ற மலையமான் காரியை அவன் பழிவாங்க விரும்பினான். தன்னால் மட்டும் அது முடியாதென்று எண்ணிச் சோழ மன்னனாகிய கிள்ளி வளவனின் உதவியை நாடினான். மலையமானின் வலிமை அதிகமாகி வருவது பற்றியும் அவன் சேரனோடு தோழமை கொண்டிருப்பது பற்றியும் கிள்ளிவளவனுக்குக் கோபம் இருந்தது. எனவே சோழன் கிள்ளிவளவனும் தகடூர் அதிகமானும்



சேர்ந்து திருக்கோவலூர் மலையமானைத் தாக்கினார்கள். மலையமான் போர்க்களத்தில் வீர சொர்க்கம் எய்தினான். மலையமானுடைய இரு இளம் புதல்வர்களைச் சோழ நாட்டு வீரர்கள் சிறைப்பிடித்து வந்தார்கள். மலையமானுடைய வம்சத்தையே அழித்து விடவேண்டுமென்று கருதியிருந்த அதிகமானும் கிள்ளிவளவனும் அந்தக் குழந்தைகளைப் பூமியில் கழுத்தளவு புதைத்து யானைக் காலால் இடறிக் கொல்லும்படிக் கட்டளையிட்டார்கள். மலையமானுடைய வள்ளன்மையை அறிந்து, அதனால் பயன் துய்த்திருந்த புலவர் ஒருவர் அச்சமயம் அங்கு வந்து சேர்ந்தார். மலையமானுடைய குழந்தைகளின் உயிருக்காகச் சோழ மன்னனிடம் மன்றாடினார்.

"வேந்தே! அதோ பார்! கழுத்துவரை புதைக்கப்பட்டிருக்கும் குழந்தைகளின் முகங்களைப் பார்! அந்த முகங்களில் தவழும் புன்னகையைப் பார்! தங்களைக் காலால் இடறிக் கொல்லப் போகிற யானையைப் பார்த்து, அதன் துதிக்கை ஆடுவதைப் பார்த்து, அக் குழந்தைகள் ஏதோ வேடிக்கை என்று எண்ணிச் சிரிக்கின்றன! இத்தகைய குற்றமற்ற குழந்தைகளையா கொல்லப் போகிறாய்? அந்தக் குழந்தைகள் என்ன பாவம் செய்தன? தகப்பன் செய்த குற்றத்துக்காகக் குழந்தைகளைத் தண்டிக்கலாமா?" என்றார் புலவர்.

அதைக் கேட்ட சோழன் மனமாற்றம் அடைந்தான். தன் கட்டளையை உடனே மாற்றினான். குழந்தைகளைத் தரையிலிருந்து எடுக்கச் செய்தான். தன் அரண்மனையிலேயே வளர்க்கவும் செய்தான். வயது வந்த பிறகு அவர்களில் மூத்த பிள்ளைக்குத் திருக்கோவலூர் அரசையும் திரும்பக் கொடுத்தான்.

இது முதல் நூற்றாண்டு நூற்றாண்டாகச் சோழகுலத்து மன்னர்களிடம் திருக்கோவலூர் மலையமான் வம்சத்தினர் நன்றியுடன் நட்புரிமை கொண்டிருந்தார்கள்.

அந்த உறவு சுந்தர சோழர் காலம் வரையில் நீடித்திருந்தது. மலையமான் மகளாகிய வானமா தேவியைச் சுந்தர சோழர் மணந்து பட்ட மகிஷியாகக் கொண்டிருந்தார்.

கொல்லிமலை வல்வில் ஓரி – தகடூர் அதிகமான் இவர்களுடைய வம்சத்தினர் அழிந்து பட்டனர். ஆயினும் அவர்களுடைய கிளை வம்சத்தில் தாங்கள் தோன்றியதாகக் கடம்பூர் சம்புவரையர்கள் சொல்லிக் கொண்டார்கள். அவர்களுடைய முன்னோர்கள் திருக்கோவலூர் மலையமான் வம்சத்தாரிடம் கொண்டிருந்த பகைமையும் சம்புவரையர்கள் மறக்கவில்லை. ஆதலின் மலையமானுடைய பேரப் பிள்ளை சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக முடிசூடுவதை அவர்கள் விரும்பாதது இயற்கையே அல்லவா? ஆதித்த கரிகாலனுடைய அகம்பாவமும், சிற்றரசர்களைச் சிறிதும் மதியாமல் அவன் நடந்து கொண்ட விதமும் சம்புவரையர்களின் வெறுப்பு வளருவதற்கு மேலும் காரணம் தந்தது. ஆகையினாலேயே கண்டராதித்தருடைய குமாரன் மதுராந்தகனைத் தஞ்சைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைக்கும் முயற்சியில் சம்புவரையர்கள் ஊக்கமாக ஈடுபட்டார்கள்.

ஆனால் கரிகாலன் கடம்பூருக்கு வந்த நாளிலிருந்து பெரிய சம்புவரையரின் உள்ளம் சிறிது சிறிதாக மாறுதல் அடையலாயிற்று. அவருடைய செல்வப் புதல்வியாகிய மணிமேகலையே அவருடைய மன மாறுதலுக்குக் காரணமாயிருந்தாள். ஆதித்த கரிகாலனுடைய உள்ளத்தை மணிமேகலை கவர்ந்து விட்டாள் என்பதற்குப் பல அறிகுறிகள் தென்பட்டன. பெண்களைக் கண்ணெடுத்தும் பாராதவன் என்றும், பிரம்மச்சாரியாகவே காலத்தைக் கழிக்கப் போகிறான் என்றும் கரிகாலனைப் பற்றிப் பேசப்பட்டு வந்தது. அத்தகையவன் கடம்பூர் மாளிகைக்கு வந்ததிலிருந்து அடிக்கடி பெண்கள் இருக்கும் இடம் போவதும் அவர்களுடன் உல்லாசமாகப் பேசுவதுமாக இருந்தான். முக்கியமாக அவன் மணிமேகலையின்

'சூடிகை'யைப் பற்றி அடிக்கடி பாராட்டிப் பேசினான். கரிகாலன் வந்ததிலிருந்து மணிமேகலையும் ஒரே உற்சாகமாக இருந்தாள். அதற்குக் காரணம் அவளும் கரிகாலனிடம் பற்றுக் கொண்டது தான் என்று சம்புவரையர் கருதினார். அவர்கள் இருவருடைய குதூகலத்தையும் பார்த்துப் பார்த்துச் சம்புவரையரும் உற்சாகம் கொண்டார். கரிகாலன் மணிமேகலையை மணந்து கொண்டால் தம் செல்வத் திருமகள் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினியாக விளங்குவாள்! அவளுக்குப் பிறக்கும் குழந்தையும் தஞ்சை சிங்காதனத்துக்கு உரியவனாவான்! இன்று திருக்கோவலூர் மலையமான் அடைந்திருக்கும் பெருமிதத்தை அப்போது தாமும் அடையலாம். அதற்கெல்லாம் தாமே எதற்காகத் தடையாக இருக்க வேண்டும்? தமது அருமைக் குமாரியின் ஏற்றத்துக்குத் தாமே ஏன் இடையூறு செய்ய வேண்டும்?

**ம**துராந்தகனுக்குத் தம் மகளையும் மணம் செய்விக்கலாம் என்ற யோசனை முன்னம் சம்புவரையருக்கு இருந்தது உண்மைதான். ஆனால் மதுராந்தகனுக்கு ஏற்கெனவே இரு மனைவியர் இருந்தனர். சின்னப் பழுவேட்டரையரின் மகளை அவன் மணந்திருந்ததுடன், அவளுக்கு ஓர் ஆண் மகவும் பிறந்திருந்தது. ஆகையால் மதுராந்தகன் சிங்காதனம் ஏறினால், பழுவேட்டரையரின் வம்சத்தினர்தான் பட்டத்துக்கு உரிமை பெறுவார்கள். மணிமேகலை தஞ்சை அரண்மனையில் உள்ள பல சேடிப் பெண்களில் தானும் ஒருத்தியாக வாழ வேண்டியிருக்கும்.

ஆனால் ஆதித்த கரிகாலனை மணிமேகலை மணம் செய்து கொண்டால் அவள்தான் பட்டமகிஷியாயிருப்பாள். அவளுக்குப் பிறக்கும் பிள்ளைக்கே சிங்காதனம் உரியதாகும்.

மதுராந்தகனுக்குப் பட்டம் சூட்டுவதென்பது பிரம்மப் பிரயத்தனமான காரியம். மக்கள் அதற்கு விரோதமாயிருப்பார்கள். மலையமானுடனும் கொடும்பாளூர் வேளானுடனும் போராட்டம் நடத்தித்தான் அதைச் சாதிக்க வேண்டியதாயிருக்கும். மதுராந்தகனுடைய அன்னையே அதற்குத் தடையாயிருக்கிறாள். இவ்வளவு தொல்லையான முயற்சியை எதற்காக மேற்கொள்ள வேண்டும்?

ஆதித்த கரிகாலனுக்கு முடிசூட்டுவதென்பது ஏற்கெனவே முடிவான காரியம். அதை நிறைவேற்றுவதில் எவ்வித சிரமமும் ஏற்படாது. பழுவேட்டரையர்களின் பிடிவாதந்தான் பெரிய இடையூறாயிருக்கும். அவர்களில் பெரிய கிழவனோ இளையராணியின் மோகத்தில் மூழ்கிக் கிடக்கிறான். இன்னும் எத்தனை நாளைக்கு அவன் உயிரோடிருப்பானோ, தெரியாது. இந்தக் கிழவனை நம்பி ஒரு பெரும் அபாயகரமான காரியத்தில் எதற்காகத் தலையிட வேண்டும்?

மதுராந்தகன் பக்கம் இருப்பதாகத் தாம் சபதம் செய்து கொடுத்திருப்பது என்னமோ, உண்மைதான். அதனால் என்ன? சபதத்துக்குப் பங்கம் செய்யாமலே காரியத்தை முடிக்க வழியில்லாமலா போகிறது? மதுராந்தகன் ஓர் அப்பாவிப் பிள்ளை என்பது தெரிந்த விஷயந்தான். அவனைக் கொண்டே, "எனக்கு இராஜ்யம் வேண்டாம்" என்று கூடச் சொல்லும்படி செய்து விடலாம். அல்லது அவனுடைய அன்னையின் சம்மதம் வேண்டும் என்று வற்புறுத்தினாலும் போதுமே!....

இவ்வாறெல்லாம் சம்புவரையரின் உள்ளம் சிந்திக்கத் தொடங்கியிருந்தது. ஆகையால் பழுவேட்டரையர் தஞ்சைக்குப் போகும் யோசனையை அவர் உற்சாகமாக ஆதரித்தார். அவர் இல்லாத சமயத்தில் கரிகாலனுடைய உள்ளத்தை நன்கு அறிந்து கொள்ளலாம் என்றும், பிறகு சமயோசிதம் போல் நடந்து கொள்ளலாம் என்றும் எண்ணினார். ஆதலின் பெரிய பழுவேட்டரையரை அவரே துரிதப்படுத்திப் பரிவாரங்களுடன் தஞ்சைக்கு அனுப்பி வைத்தார்.

**ப**ழுவேட்டரையர் பிரயாணப்பட்டுச் சென்ற பிறகு ஆதித்த கரிகாலனும் அவனுடைய தோழர்களும் வேட்டைக்குப் புறப்பட்டார்கள்.

அவர்களுடனே மணிமேகலையையும் மற்ற அந்தப்புரப் பெண்களையும் அனுப்பக் கூடச் சம்புவரையர் சித்தமா யிருந்தார். ஆனால் நடப்பதையெல்லாம் வேறு நோக்குடன் கவனித்து வந்த கந்தமாறன் அதை ஆட்சேபித்தான். கரிகாலன் மணிமேகலையிடம் காட்டிய சிரத்தையெல்லாம் • நந்தினியை முன்னிட்டுத்தான் என்பதை அவன் உணர்ந்திருந்தான். இதனால் கரிகாலன் பேரில் அவனுடைய வெறுப்பு வளர்ந்திருந்தது. இதை யெல்லாம் தந்தையிடம் விளக்கிச் சொல்லவும் முடியவில்லை. ஆகை யால், "வேட்டையாடும் இடத்தில் பெண்களைக் கூட்டிக் கொண்டு போய் என்னத்தைச் செய்வது? இவர்கள் பத்திரமாயிருக்கிறார்களா என்று பார்ப்பதற்குத்தான் சரியாயிருக்கும். மேலும் இது ஐப்பசி மாதம். எந்த நிமிஷத்திலும் பெருமழை தொடங்



கலாம். ஏரிக்கரைக் காடெல்லாம் வெள்ளமாகி விடும். பெண்கள் திண்டாடிப் போவார்கள்!" என்று சொன்னான்.

அதன் பேரில் சம்புவரையரும் அந்த யோசனையைக் கைவிட்டு விட்டார். ஆதித்த கரிகாலன் தன் தோழர்களாகிய பார்த்திபேந்திரன், வந்தியத்தேவன், கந்தமாறன் இவர்களையும், மற்ற வேட்டைக்காரர்களையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றான்.

எல்லாரும் சென்ற பிறகு சம்புவரையர் மாளிகை வெறிச்சென்று இருந்தது. நந்தினி மணிமேகலையைப் பார்த்து, "புருஷர்கள் வீட்டில் இருக்கும்போது நமக்குத் தொல்லையாகத் தோன்று கிறார்கள். ஆனால் அவர்கள் எங்கேயாவது போய் விட்டாலும் நமக்குச் சங்கடமாகத்தான் இருக்கிறது. பரிகசித்துச் சிரிப்பதற்குக் கூட விஷயம் கிடைப்பதில்லை!" என்றாள்.

"ஆம், அக்கா! நாம் கூட வேட்டைக்குப் போயிருக்கலாம். எனக்கு வேட்டை பார்க்கப் பிரியம் அதிகம். என்



தந்தையோடும் தமையனோடும் சில சமயம் போவதுண்டு. ஆனால் இன்றைக்கு என்னமோ கந்தமாறன் பிடிவாதமாகத் தடைசெய்து விட்டான். ஒருவேளை உங்களுக்கு வேட்டை பிடிக்காது என்று அவ்விதம் தடைசெய்தானோ, என்னமோ?" என்றாள் மணிமேகலை.

"ஆமாம்; எனக்கு வேட்டை அவ்வளவாகப் பிடிப்பதில்லைதான். இரத்தத்தைக் கண்டாலே எனக்குத் திகிலாயிருக்கும். ஆனால் கந்தமாறன் அதற்காகச் சொல்லவில்லையடி! உன்னையும் உன் வீட்டு விருந்தாளிகளில் ஒருவரையும் பிரித்து வைப்பதற்காகவே அவ்விதம் அவன் தடைசெய்து விட்டான்!" என்றாள் நந்தினி.

மணிமேகலையின் கன்னங்களில் சுழிகள் காணப்பட்டன. சிறிது நேரம் தரையைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, "புருஷர்கள் எங்கேயாவது போய்த் தொலையட்டும். அக்கா! அவர்கள் சகவாசமே நமக்கு வேண்டாம். நாம் ஏரிக்கரை நீராழி மண்டபத்துக்குப் போய் நீர் விளையாடி விட்டு வரலாம்! வருகிறீர்களா?" என்றாள். நந்தினியும் அதற்குச் சம்மதிக்கவே தந்தையிடம் சொல்லி அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை மணிமேகலை செய்தாள்.

வீர நாராயண ஏரியின் கீழ்ப்புறத்தில் பெரிய கரையும் அதில் எழுபத்து நாலு மடவாய்களும் உண்டு என்பதைப் பார்த்திருக்கிறோமல்லவா? ஏரியின் மேற்புறத்தில் அத்தகைய பெரிய கரை கிடையாது. ஏரி நீரின் ஆழம் சிறிது சிறிதாகக் குறைந்து வந்து ஏரிக்கரை அங்கே சம தரையாக அமைந்திருந்தது. இன்னும் மேற்கே அடர்ந்த காடுகள் மண்டிக் கிடந்தன.

இவ்விதம் ஏரி நீர் குறைந்து சமதரையாகும் பிரதேசத்தில், ஆங்காங்கே சிறிய சிறிய தீவுகள் காணப்பட்டன. தீவுகளில் மரங்களும் செடி கொடிகளும் அடர்ந்து வளர்ந்திருந்தன. அத் தீவுகளில் ஒன்றின் கரையில் படித்துறையும் நீராழி மண்டபமும் அமைக்கப்பட்டிருந்தன. இங்கே கடம்பூர் சம்புவரையரின் அந்தப்புரத்துப் பெண்கள் நீராடுவதற்காகவும் உல்லாசமாகப் பொழுதுபோக்குவதற்காகவும் வருவது வழக்கம். அந்த இடத்துக்கு வந்து சேர வேண்டுமானால் இரண்டு காத தூரம் ஏரியைச் சுற்றிக் கொண்டு வர வேண்டும். அல்லது படகிலேறி ஏரியைக் கடந்து வர வேண்டும். இதனாலும் சம்புவரையர் வீட்டுப் பெண்கள் குளிக்குமிடம் என்று தெரிந்திருந்தபடியாலும் அன்னிய மனிதர்கள் அங்கே வருவது கிடையாது.

நந்தினியும் மணிமேகலையும் படகிலேறிக் கொண்டு அந்தத் தீவுக்கு இப்போது வந்து சேர்ந்தார்கள். படகு ஓட்டத் தெரிந்த இரண்டு தோழிமார்கள் உடன் வந்தார்கள். சமையல் செய்வதற்கு வேண்டிய பண்டங்களையும் படகில் கொண்டு வந்தார்கள். நீராழி மண்டபப் படித்துறையை அடைந்ததும் தோழிப் பெண்கள் படகை விட்டிறங்கி மண்டபத்தில் சமையல் செய்யத் தொடங்கினார்கள்.

நந்தினியும் மணிமேகலையும் சிறிது நேரம் படித்துறையில் உட்கார்ந்து வம்பு பேசிக் கொண்டிருந்தார்கள். மணிமேகலை இயற்கை மதியூகமுள்ள பெண்; குறும்பில் பற்றுள்ளவள். அவள் பழுவேட்டரையர் பேசுவது போலவும், கரிகாலன், கந்தமாறன், பார்த்திபேந்திரன், வந்தியத்தேவன் ஆகியவர்கள் பேசுவது போலவும் பேசி நடித்துக் காட்டினாள். அதையெல்லாம் பார்த்தும் கேட்டும் நந்தினி கலீர் கலீர் என்று சிரித்துக் கொண்டிருந்தாள். ஆயினும் அவளுடைய கவனம் முழுதும் மணிமேகலையிடம் இல்லை என்பதும், அவள் மனம் அவ்வப்போது ஏதோ அந்தரங்க சிந்தனையில் ஈடுபட்டது என்பதும் வெளியாகி வந்தது.

திடீரென்று மணிமேகலை துள்ளிக் குதித்து எழுந்து நின்றாள். "அக்கா! வேட்டைக்கு நாம் போகவில்லை; ஆனால் வேட்டை நம்மைத் தேடி வந்திருக்கிறது!" என்று கூவிக் கொண்டே இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்தாள்.

நந்தினியும் திடுக்கிட்டு எழுந்து மணிமேகலை பார்த்த திசையை நோக்கினாள். அங்கே சாய்ந்து படர்ந்திருந்த ஒரு பெரிய மரக்கிளையின் மீது சிறுத்தைப் புலி ஒன்று காணப்பட்டது. அந்தச் சிறுத்தை அவர்கள் மீது பாயலாமா, வேண்டாமா என்று யோசிப்பது போலப் பார்த்துக் கொண்டிருந்தது.

அதே சமயத்தில் சிறிது தூரத்தில் குதிரைகள் தண்ணீரில் இறங்கிப் பாய்ந்து வரும் சப்தமும் கேட்டது.

(தொடரும்)



ஸ்ரீ ராமஜெயம்

# ஸ்ரீ மாருதி டிராவல்ஸ்

தொலைபேசி எண் 5511786 10/6, ராஜேஸ்வரி தெரு, பெரம்பூர், சென்னை - 600 011

(நாம சங்கீர்த்தனத்துடன் அன்பர்களை அழைத்துச் செல்லும் ஆன்மீக சுற்றுலா குழு அமைப்பாளர்கள்)

① 21.5.2000 ஒரு நாள் பயணம் வல்லக்கோட்டை, மகாமேரு (கண்டிகை) காஞ்சிபுரம் (வரதராஜர், காமாக்ஷி) தென்னாங்கூர் — சாப்பாடு, பஸ் கட்டணம் உட்பட நபர் ஒருவருக்கு ரூ. 180/-

② 28.5.2000 - ஒரு நாள் பயணம்: திருமலைவையாவூர், மயிலம், மதுராந்தகம், திருவக்கரை— பஸ் கட்டணம், சாப்பாடு உட்பட நபர் ஒருவருக்கு — ரூ 180/-

③ 16.6.2000 முதல் 21.6.2000 வரை ( 5 நாட்கள்) - தென்னிந்திய யாத்திரை. கும்பகோணம், தஞ்சாவூர், ராமேஸ்வரம், மதுரை, பழநி, திருச்சி — யாத்திரை 2x2 டீலக்ஸ் பஸ் மூலமாகவும், காபி, டிபன், சாப்பாடு இரவு தங்குதல் உட்பட நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ 1450/-

④ 1.7.2000 முதல் 9.7.2000 கர்நாடக யாத்திரை - பெங்களூர், ஸ்ரீரங்கபட்டிணம், K.R.S டேம், சாமுண்டீஸ்வரி, தலை காவேரி, தர்மஸ்தலம், சுப்பிரமணியா, உடுப்பி, மூகாம்பிகை, கடீல், கோகர்ணம், கலசா, சிருங்கேரி, ஹளபேடு — சென்னை to பெங்களூர்—சென்னை—இரயில் பயணம். பெங்களூரிலிருந்து 2x2 டீலக்ஸ் பஸ் மூலமாக யாத்திரை, சாப்பாடு, இரவு தங்குதல் உட்பட ரூ 2200/-

⑤ July 2000 சிங்கப்பூர், மலேசியா, பாங்காக், ஹாங்காங்-13 நாட்கள் தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

⑥ Sept 2000 15 நாட்கள் பத்ரிநாத், கேதார்நாத், ரிஷிகேஷம், ஹரித்துவர், ஆக்ரா, மதுரா, பிருந்தாவனம் கட்டணம் ரூ 4750/-

⑦ Nov 2000 15 நாட்கள் பஞ்சத் துவாரகை யாத்திரை கட்டணம் ரூ 5150/-



முழு விவரமறிய சுய விலாசமிட்ட ரூ. 3/-ஸ்டாம்ப் அடங்கிய கவர் அனுப்பவும். விவரங்கள் அனுப்பப்படும்.

பங்கு பெறுவீர்! பாக்கியவான்களாவீர்!

மேலும் விவரங்களுக்கு:

V. சீனிவாசன் *(அமைப்பாளர்)*

**ஸ்ரீ மாருதி டிராவல்ஸ் & கேட்டரிங் சர்வீஸ்** பெரம்பூர், சென்னை - 600 011 தொலைபேசி: 5511786

---

# தென்னை மரங்களில் அதிக மகசூல் பெற "கோகோஸ்" உர மருந்துக் கலவை!!

★ திருவையாறு - தமிழ்நாடு தென்னை வளர்ச்சிக் கழகம் பல வருடங்களாக செய்த ஆராய்ச்சிகளினால், தென்னை மரங்களில் பொய்ப் பாளை வருதல், பூக்கள் கருகி பிஞ்சுகள் உதிர்தல், ஒல்லிக்காய் போன்ற வியாதி களை கோகோஸ் உர மருந்து தடுத்து அதிக மகசூல் தருகிறது. 100 நாட்களில் நன்கு ரிசல்ட் தெரியும். கடந்த 29 வருடங் களாக பயன்படுத்தியவர்கள் கோகோஸ் உர மருந்து ஒரு வரப்பிரசாதம் என்று பாராட்டு கிறார்கள்.

★ மரம் ஒன்றிற்கு கோகோஸ் விலை ரூ. 4, வி.பி.பி. செலவு தனி. 7, 14, 28 தென்னை மரங்களுக்குரிய பாக்கெட்டுகளில் கிடைக்கும்

★ "VS மிக்ஸ்" :- குருத்து கத்தரித்தல், குருத்து அழுகல், காண்டாமிருக வண்டு தாக்குதலுக்கு "VS மிக்ஸ்" பயன் படுத்தவும் 25 தென்னை அல்லது செடிகளுக்கு பயன் படுத்தும் மினிமம் பாக்கெட் விலை ரூ. 24 வி.பி.பி. தனி.

★ தென்னை. ஆராய்ச்சியாளர் டாக்டர் வா.செ. செல்வம் எழுதிய "வளம் தரும் தென்னை" செல்வம் தரும் தென்னை அழிவில்லா தென்னை ஆராய்ச்சி புத்தகங்கள் விலை ரூ. 27/- வி.பி.பி. தனி

★ குறிப்பு : வி.பி.பி. பார்சல் அல்லது வங்கி வழி பார்சல் பெறலாம்.

★ டீலர்கள் தேவை: ரூ. 5000 முதலீடும் கடை வசதி உள்ள கோகோஸ் டீலர்கள் தேவை. 20 வயதுக்கு மேற்பட்ட +2 படித்த பேச்சுத்திறமை உள்ள செயல் விளக்க பணியாளர்கள் தேவை நேரில் வரவும். நவீன தென்னை சாகுபடி மூலம் ஆயிரக்கணக்கான தோப்புகளை உருவாக்கிய டாக்டர் வா.செ. செல்வம் அவர்கள் புதிய தென்னை தோப்புகள் உருவாக்கவும், மகசூலை பெருக்கவும், ஃபீல்டை நேரிடையாக பார்வை யிட்டு ஆலோசனை வழங்குவார்.

★ 3 வருடங்களில் காய்ப்புக்கு வரும் திருவையாறு T2 உயர் ரக வீரிய தென்னம்பிள்ளைகள் கிடைக்கும்.

★ கோகோஸ் உரமருந்து தென்னம் பிள்ளைகள் பிரபல்யமான பேரை பயன்படுத்தி வீடு தேடி போலிகள் வருகிறார்கள். நேரில் அல்லது போனில் தொடர்பு கொண்டு உண்மை தெரிந்து வாங்கவும்.

தொடர்பு முகவரி

போன் :

**04362 - 60363, 60003**

**COCOM & Co.,**

கோஸ் சந்து,
புஷ்ப மண்டப தெரு,
திருவையாறு-613 204,
தஞ்சை Dt.

# பிரிட்டனில் காமராஜர் ஆட்சி!



**பி**ரிட்டிஷ் பிரதமர் டோனி ப்ளேரின் மனைவி செரி ப்ளேருக்குக் குழந்தை பிறக்கப் போகிறது. குழந்தையைக் கவனித்துக் கொள்ள பிரதமர் விடுமுறை எடுத்துக் கொண்டு தமக்கு உதவ வேண்டும் என்கிறார் செரி ப்ளேர்! இதை பிரிட்டிஷ் பெண்கள், குறிப்பாக 'மெட்டர்னிடி அல்லயன்ஸ்' அமைப்பைச் சேர்ந்தவர்கள் ஆதரிக்கிறார்கள்.

ப்ளேர் லீவு எடுத்தால் எதிர்க்கட்சியான கன்சர்வேடிவ் கட்சித் தலைவர் வில்லியம் ஹேக் நன்றாக வாருவார்; லீவு போடாவிட்டால் மனைவி செரியிடம் செமத்தியாக வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டும்.

என்ன செய்வது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்த டோனி ப்ளேர், இறுதியில் லீவ் எடுப்பதில்லை என்று சமர்த்தாக முடிவு செய்து விட்டார். அவர் இந்த முடிவுக்கு வருவதற்குள் நம்மூர் அரசியல்வாதிகள் சும்மா இருப்பார்களா? அல்லது நம் கற்பனைதான் சும்மா இருக்குமா? ஒரு செய்திப் பத்திரிகையே தயார் செய்து விட்டோம்.



## பிரிட்டிஷ் பிரதமர் மனைவிக்குக் குழந்தை பிறந்தது!

**பி**ரிட்டன் டோனி ப்ளேரின் மனைவி செரி ப்ளேருக்கு லண்டன் மருத்துவமனை ஒன்றில் ஆண் குழந்தை நேற்று பிறந்தது. குழந்தையைப் பார்க்க வந்த ப்ளேரிடம், செரி ப்ளேர் லீவு போட்டு விட்டுக் குழந்தையைப் பார்த்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். 'குழந்தைக்கு ஐந்து வயதாகும் வரை பதிமூன்று வாரங்கள் வரை கணவன் லீவு எடுக்கலாம் என்று சட்டம் இருப்பது தெரியுமா?' என்று செரி ஆவேசமாகக் கேட்டார். லீவு போட மறுத்து, நாடாளுமன்றத்துக்குப் போய் விட்டார் ப்ளேர். இருவருக்கும் பலத்த வாக்குவாதம் நடந்தது என்கிறார்கள் மருத்துவமனை ஊழியர்கள். இருவரையும் சமாதானப்படுத்த அடுத்த வாரம் அமெரிக்க அதிபர் பில் கிளின்டன் அமைதிப் பயணம் மேற்கொண்டு லண்டன் வருகிறார். அவருடன் அவர் மாமியாரும் வழக்கம்போல் வருகிறார். கிளின்டனின் சமாதான உரையை பிரிட்டன் மக்களுக்கு பி.பி.சி. நேரடியாக ஒளிபரப்பும் என்று அறிவித்திருக்கிறது. கிளின்டன் மாமியாரின் உரையை ஒளிபரப்புமா என்பது பற்றி இதுவரை எதுவும் முடிவாகவில்லை.

ஒரு டமாஷ் நியூஸ்!

### "பிரதமர் பிரம்மசாரியாக இருக்க வேண்டும்!" — வாஜ்பாய்

'**பி**ரிட்டிஷ் பிரதமரின் மனைவி பிரசவித்ததால், பிரதமர் லீவு போட்டுவிட்டு

வீட்டில் இருக்க வேண்டியிருக்கிறது. இதற்குத்தான் பிரதமர் பிரம்மசாரியாக இருக்க வேண்டும் என்று, அரசியல் சட்டத் திருத்தம் கொண்டு வர நான் டோனி ப்ளேரிடம் ஆலோசனை கூறியிருக்கிறேன். அரசியல் சட்டத் திருத்தக் குழு ஒன்றை நியமித்து, டோனி ப்ளேர் உடனடியாக இதைச் செய்யலாம். பிறகு பிரச்னை எதுவும் எழாது. இல்லையென்றால் ஆர்.எஸ்.எஸ். தலைவர் கருத்துப்படி பிரதமர் போன்ற முக்கிய பதவிகள் வகிப்பவர்கள் எழுபது வயதுக்கு மேற்பட்டவராக இருப்பது நல்லது. இந்த விஷயத்தில், எனக்கும் குடியரசுத் தலைவருக்கும் கருத்து வேற்றுமை இருப்பதாகச் சில பத்திரிகைகள் விஷமத்தனமாக எழுதியிருக்கின்றன. இதற்கு ஆதாரமே இல்லை. வேண்டுமென்றே இவர்கள் பிரச்னையை உருவாக்கப் பார்க்கிறார்கள். பிரச்னையை உருவாக்க வேண்டுமென்றால், குடியரசுத் தலைவர் பிரிட்டன் போகிறபோது அங்கே நாடாளுமன்றத்தில் உரையாற்றி, பிரச்னையை உருவாக்க மாட்டாரா? அவருக்குத் தெரியாததா?'

– இவ்வாறு பிரதமர் வாஜ்பாய் செய்தியாளர்களிடம் நேற்று தெரிவித்தார்.

## "பிரிட்டன் பிரதமர் ஆவேன்!" – சு. சுவாமி தடாலடி

ஜனதாக் கட்சித் தலைவர் டாக்டர் சுப்பிரமணியம் சுவாமி, மதுரையில் செய்தியாளர்கள் கூட்டம் ஒன்றில் டோனி ப்ளேர் விவகாரம் குறித்து தம் கருத்தை நேற்று வெளியிட்டார் :

'பிரிட்டிஷ் பிரதமர் லீவு போட மாட்டேன் என்று அடம்பிடிப்பது நியாயம் அல்ல. ஃபின்லாந்து பிரதமர் லிப்போனன் ஒரு வாரம் லீவு போட்டு விட்டுத் தம் மனைவி – குழந்தையுடன் இருந்தார். ப்ளேர் ஒரு வாரமோ, ஒரு மாதமோ, லீவு போட்டுவிட்டு வீட்டில் இருந்தால் நாடு ஸ்தம்பித்துப் போய்விடுமா என்ன? பிரிட்டிஷ் நாடாளுமன்றம் ஒப்புதல் அளித்தால் அந்த இடைப்பட்ட காலத்தில் அங்கே போய், டோனி ப்ளேர் லீவு முடிந்து திரும்பும் வரை, நான் பிரதமராக இருக்கத் தயார். அங்கே நான் பிரதமராக இருக்கிறபோது, ஜனதா கட்சித் தலைவர் சந்திரலேகா விக்டோரியா ராணியாராகப் பதவியில் அமர்த்தப்பட வேண்டும். எலிசபெத் ராணியார் தங்கியிருக்கும் மாளிகையில் அவருக்கு இடம் கொடுத்தால் போதும்.

– இவ்வாறு சுப்பிரமணியம் சுவாமி தெரிவித்தார்.



## "பிரதமரின் மனைவியானாலும் பிரசவித்துதான் ஆக வேண்டும்!" – கலைஞர் கடிதம்

அன்புள்ள உடன் பிறப்பே!

டோனி ப்ளேரின் மனைவிக்குக் குழந்தை பிறந்ததற்காக அவர் விடுமுறை எடுக்க வேண்டுமா என்பது பெரிய பிரச்னையாக உருவெடுத்திருக்கிறது. குழந்தை பிறந்தபோது ப்ளேர் விடுமுறை எடுத்ததாகத் தெரியவில்லை. மாலையில்தான் மருத்துவ மனைக்குப் போய் மனைவியையும் குழந்தையையும் பார்த்திருக்கிறார். இதிலிருந்து நீ என்ன புரிந்து கொள்ளுகிறாய் என்பதை என்னால் இங்கிருந்தே ஊகித்துக் கொள்ள முடிகிறது. பிரதமரின் மனைவியாக இருந்தாலும் பிரசவித்துத்தான் ஆக வேண்டும். பிரதமராக இருந்தாலும், மனைவி பிரசவித்தால் உடனே போய்க் குழந்தையைப் பார்த்துக் கொஞ்சிவிட்டுத்தான் வர வேண்டும். மாண்புமிகு எதிர்க் கட்சித் தலைவர் வில்லியம் ஹேக் இந்தச் சமயத்தில் ஆட்சியைக் கவிழ்த்துவிட்டு பின்பக்க வழியில் தாம் பிரதமர்





பதவிக்கு வந்திடலாம் என்று துடித்துக் கொண்டிருக் கிறார். ஒரு வருடமே இருக் கிறது தேர்தலுக்கு என்று அறிந்தும் ஆசை அவரை விடவில்லை. போயஸ் தோட்டதைச் சேர்ந்தவர் கள், சத்தியமூர்த்தி பவன் ஆட்களோடு, வில்லியம் ஹேக்குக்குச் சதித்திட்டம் தீட்டிக் கொடுக்க முன்வந் தால், நான் வியப்படைய மாட்டேன்.

## வாஜ்பாய் பதவி விலக வேண்டும்! — ஜெயலலிதா அறிக்கை

கிளின்டனின் மனைவி பிரசவிக்காத போதே அவரை இந்தியாவுக்கு அழைத்து, சிவப்புக் கம்பள வரவேற்பு அளித்த வாஜ் பாய் அரசு, டோனி ப்ளேரின் மனைவி பிரச வித்த போது இந்தியாவுக்கு ஏன் அவரை அழைக்க வில்லை? அப்படி அழைத் திருந்தால் அவர் லீவு போட வேண்டிய தேவையே ஏற்பட்டிருக்காது. டோனி ப்ளேரை அழைக்கத் தவறிய பிரதமர் வாஜ்பாய் பதவி விலக வேண்டும். பா.ஜ.க.வின் தோழமைக் கட்சியான தி.மு.க.வும் இந்தத் தவறை உணர்ந்து, தமிழ்நாட்டில் ஆட்சியை விட்டு இறங்க வேண்டும். கருணாநிதி அப்படிச் செய்ய முன்வராவிட்டால், குடியரசுத் தலைவர் மாளிகை முன் மாபெரும் ஆர்ப்பாட்டம் நடத்தத் தயாராவோம்! இதில் த.மா.கா.வும் பங்குபெற மூப்பனாரைச் சந்தித்துப் பேசுவேன்.

## பிரிட்டனில் காமராஜர் ஆட்சி! — மூப்பனார்

சத்தியமூர்த்தி பவனில் மூப்பனாரைச் சந்தித்தார் நமது நிருபர்.

நிருபர் : பிரிட்டிஷ் பிரதமர் லீவு எடுக்க வேண்டுமா, வேண்டாமா?

மூப்பனார் : நானா பிரிட்டிஷ் பிரதமர்?



நிருபர் : நீங்கள் டோனி ப்ளேராக இருந்தால் என்ன செய்திருப்பீர்கள்?

மூப்பனார் : பான்ட் போட்டு, சட்டை இன் பண்ணி, டைகட்டி, கோட் போட்டுக் கொண்டிருப் பேன்.

நிருபர் : நீங்கள் லீவு போட்டிருப்பீர்களா?

மூப்பனார் : நான் இந்தியா வந்து, தில்லியில் சோனியா காந்தியுடன் ஆலோசனை நடத்தி விட் டுத்தான் முடிவு எடுத்திருப் பேன்.

நிருபர் : பிரிட்டிஷ் பிரதமர் ஆவேன் என்று சுப்பிரமணியம் சுவாமி கூறியிருக் கிறாரே?

மூப்பனார் : அது அவர் விருப்பம்.

நிருபர் : பிரதமர் லீவு எடுத்தால் எதிர்க்கட்சித் தலைவர் ஆட்சியைப் பிடிக்கலாமா?

மூப்பனார் : அதுதான் சிறந்த நடைமுறை. ஒரு ஆட்சியைக் கவிழ்த்தால்தான் இன்னொரு ஆட்சி வர முடியும். இதை நாங்கள் மத்தியிலும், பாண்டிச்சேரியிலும் முயன்று பார்த்திருக்கிறோம். பாண்டிச்சேரியில் வெற்றியும் கண்டிருக்கிறோம். பிரிட்டனில் காமராஜர் ஆட்சி நடைபெற வேண்டும் என்பதே எங்கள் விருப்பம். அதற்கான வியூகங்களை இங்கிருந்தே வகுப்போம்.

கற்பனை : **சாருகேசி**

## வி.ஐ.பி. விருப்பம்

# டென்னிஸ் மீது ஒரு கிக்!

## சடகோபன் ரமேஷ்

இந்தியாவில் சாலை விதிகளை யாரும் அனுசரித்துப் போவதில்லை. அதிலும் குறிப்பாக அரசு பேருந்துகள், அரசு வாகனங்கள் சாலை விதிகளுக்கு மிகக் குறைந்தபட்ச மரியாதையைத்தான் காண்பிக்கின்றன. இதனால் ஏற்படும் விபத்துக்கள் நிறைய. அண்ணா சாலையில் நான்கு வழி பாதை இருந்த போது பி.டி.சி. பஸ் ஒன்று பாதை மாறி ஓவர் ஸ்பீட் எடுத்து வர, ஸ்கூட்டர் ஓட்டி வந்த என் நண்பன் பிழைத்தது தெய்வச் செயல்!

சிக்னல் விளக்குகளை சிறிதும் மதிக்காதவர்கள் அரசு வாகன ஓட்டுனர்கள். 'நம்மை யார் என்ன செய்து விட முடியும்?' என்ற எண்ணம்தான் காரணம். யாராவது அப்பாவி பொதுஜனம் தெரியாத்தனமாக மாட்டிக் கொண்டால் அவ்வளவுதான். பிழிந்து விடுவார்கள். யாராவது எம்.எல்.ஏ., அல்லது கட்சிப் பிரமுகருக்கு தூரத்துச் சொந்தம் என்றால் சலாமடித்து விட்டு விடுவார்கள்.

நான் ஆஸ்திரேலியா சென்ற போது ஒரு சம்பவத்தைக் கேள்விப்பட்டேன். அந்த நாட்டு ஜனாதிபதி காரில் ஓவர் ஸ்பீட் சென்றபோது மாட்டிக் கொண்டார். போலீஸ் அவருக்கு அபராதம் போட்டு விட்டது. ஆனால் இங்கே அப்படிப் போட முடியுமா? சில மாதங்களுக்கு முன்னர் பஸ் ஊழியர்கள் திடீரென்று வேலை நிறுத்தம் செய்தார்கள். சாலை விதிகளை மதிக்காமல் போய் விபத்துக்கள் ஏற்பட்டால் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்று' நிர்வாகம் சுற்றறிக்கை விட்டதுதான் காரணமாம். சாலை விதிகளை கடுமையாக அமுல்படுத்தி, மீறுபவர்கள் மீது பாரபட்சமின்றி நடவடிக்கை எடுக்கும் காலம் வருமா?



சமுதாய அடிப்படையிலான விருப்பம் இதுவென்றால் தனிப்பட்ட முறையில், என் நிறைவேறாத ஆசை என்பது 'டென்னிஸ் ஆட்டக்காரராக வர முடியவில்லை' என்பதுதான். சிறிய வயதில் இருந்தே டென்னிஸ் மீது ஒரு கிக். ஆனால் என் அண்ணன்கள் எல்லோரும் கிரிக்கெட்டில் ஆர்வம் கொண்டவர்களாக இருந்ததால், நானும் கிரிக்கெட்டில் இறங்கி விட்டேன்.

— ரமா

படம் : வெங்கடேஷ்

13

"வழக்கமா ஆசிரியர்களை ஏணியோட ஒப்பிடுவாங்க. அப்படிப் பார்த்தா எங்க ஸ்கூல் டீச்சர்களை அதைவிட அதிகமாகவே எடை போடணும். ரொம்பப் பொறுப்பானவங்க. அதனாலே நீங்க கவலையே படவேண்டாம்'' என்று சுவாதியிடம் கூறினார் அந்த மனநலப் பள்ளியின் முதல்வர்.

அதே வளாகத்தில் இருந்த விடுதியிலும் முன்னாவை சேர்த்தாகிவிட்டது. பெரிதான எந்த எதிர்ப்புமில்லாமல் அவன் அதற்கு ஒத்துக் கொண்டது ஒருவிதத்தில் நிம்மதியையும், இன்னொரு விதத்தில் குற்ற உணர்வையும் அளித்தது.

'இதைவிட இவளிடம் எதிர்பார்க்க முடியாது' என்றோ, 'எவ்வளவு நாட்கள்தான் இவர்களுக்குப் பாரமாக இருந்துவிட முடியும்' என்றோ நினைத்திருப்பானோ?

''முன்னா, வாராவாரம் உன்னைக் கட்டாயம் வந்து பார்க்கிறேன்'' என்று சொன்னபோதே 'தான் விமானப் பணிப் பெண் பயிற்சிக்காக பெங்களூருக்குப் போய் விட்டால்?' என்ற நினைவு வர, ''நான் இல்லாவிட்டாலும் என் அம்மா வந்து உன்னை அடிக்கடிப் பார்த்துட்டுப் போவாங்க'' என்றாள்.

''யாரு, நாம டேராடூனிலே இருக்கும் போது செத்துப் போயி, மெட்ராஸ் வந்தவுடனே உயிரோடு இருக்கிறாங்களே, அவங்களா?'' என்று அவன் கேட்டபோது பள்ளி முதல்வர் அவனை வினோதமாகப் பார்த்தார்.

தன் வாழ்க்கையே வினோதமாகத்தான் இருக்கிறதென்று நினைத்தபோதே முன்னா ஏதோ மனநிலை சரியில்லாததால் அப்படிப் பேசியதாகவும் அவர் நினைத்துக் கொண்டிருக்கலாம் என்று அவளுக்குத் தோன்றியது.

வீட்டுக்கு வந்து வெகுநேரமாகியும் துயரம் குறையவில்லை. யாருமே தனக்கு இல்லையோ எனும் உணர்வு வாட்டியது. எனினும் அம்மாவை நினைத்து மனதை திசைதிருப்ப முயற்சித்து பெருமளவு வெற்றி பெற்றாள்.

எல்லா உணர்ச்சிகளுமே அடிப்படையில் சுயநலம் கலந்ததுதான் என்கிற தத்துவத்தின் அடிப்படையில், பிறகு தன் வருங்காலத்தைப் பற்றி யோசிக்கத் தொடங்கினாள். கோமளா ஆண்ட்டியும் இதுபற்றி நேற்று பேச்சைத் தொடங்கியிருந்தாள்.

''வழியிலே சங்கீதாவைப் பார்த்தேன். நீ ஏர் ஹோஸ்டஸாகப் போகணும்னு ஆசைப் பட்டாயாமே... இங்கே நீ முகத்துக்குப் பவுடர் கூடப் போட்டுக்கிட்டு நான் பார்த்ததில்லே... ஏர்ஹோஸ்டஸ்னா தினமும் கொஞ்சமாவது மேக்கப் செய்துக்க வேண்டி



யிருக்குமே. உங்கம்மா வந்ததும் கலந்தாலோசித்து எந்த முடிவையும் எடு.''

மற்றபடி காலத்துக்கேற்ப மாறியிருந்தாலும், இந்த சங்கீதா அக்காவுக்கும், கோமளா ஆன்ட்டிக்கும் விமானப் பணிப் பெண் என்றால் மட்டும் ஏன் இந்த இளக்காரம்? பறப்பதின் சுகத்தை அறியாதவர்கள். விமானப் பணிப் பெண்ணாக நான் இருக்கும்போது இறக்கைகள் இருக்கப் போவது விமானத்துக்கு இல்லையே; எனக்கல்லவா அவை முளைக்கப் போகின்றன.

நினைக்கும்போதே பெருமிதம் ஏற்பட்டது. என்றாலும் பிரசாத் கேட்டபோது ஏனோ தன் வருங்காலத் திட்டத்தை வெளிப்படுத்த இயலவில்லை. ஏனோ என்று நழுவுவதைவிட அவன் தனது வருங்காலத்தைப் பற்றி ஒரு வட்டத்தைத் தாண்டி ஆலோசனை கூறாததுதான் முக்கிய காரணமாக இருந்திருக்க வேண்டுமெனத் தோன்றியது.

''சீக்கிரமே உங்கம்மா வந்திடுவாங்க. நீ



அருணன் சரண்யா

"என்ன செய்வதாக இருக்கே? மேலே படிக்கப் போறியா?" இந்த இடத்திலேயே சுவாதி இல்லை எனும் விதத்தில் தலையசைக்க, "அப்போ ஏதாவது வேலை தேடிக்கப் போறியா?" என்றான். இம்முறை சுவாதியின் தலை மேலும் கீழும் ஆட, "வங்கிகளிலே இப்பவெல்லாம் வேலைக்கு ஆள் எடுப்பது ரொம்பக் குறைஞ்சிடுச்சு. மற்றபடி தனியார் நிறுவனங்களிலே உதவியாளராச் சேரலாம். நான் வேணா தினமும் பேப்பரில் வரும் வேலைவாய்ப்புப் பகுதியை உனக்காகப் படிக்கிறேன். தகுந்த விளம்பரம் வந்தால் உன்னிடம் சொல்றேன்."

'அட போங்கப்பா. நாற்காலியில் உட்கார்ந்தபடி செய்யும் வேலையைத்தானே நீங்க எனக்குக் காட்டப்போறீங்க. என் ஆசையே வேறே' என்று மனத்தில் எண்ணம் ஓடினாலும் "அம்மா வந்ததும் கேட்டுட்டு முடிவெடுக்கிறேன்" என்று அப்போதைக்குச் சொல்லி வைத்தாள்.

"பராக், பராக், சிங்கப்பூருக்கே கொஞ்ச வருடங்களாக சிறப்பு சேர்த்துக் கொண்டிருக்கும் திருமதி ஜானகி பிரேம்நாத் வருகிறார்."

பிரசாத்தின் அறிவிப்பைத் தொடர்ந்து நடுத்தர வயதுப் பெண்மணி ஒருத்தி சுவாதியின் (சத்யாவின்) போர்ஷனுக்குள் நுழைந்தாள். முகத்தில் நல்ல களை. எளிமையான அலங்காரத்திலேயே ஒரு உயர்வான ரசனையும் தென்பட்டது. ஏதோ ஒரு கலையுடன் அவள் சம்பந்தப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றியது. வலது காலைச் சற்றே விந்தியபடி அவள் வந்தது மனத்தை நெருடியது.

"அக்கா, இவங்கதான் சுவாதி. சத்யா அக்காவோட மகள்" என்று பிரசாத் கூறியதும், அந்தப் பெண்மணி எதிர்பாராத ஒரு காரியத்தைச் செய்தாள். அவளைக் கட்டி அணைத்துக் கொண்டாள்.

"தம்பி விஷயத்தைச் சொன்னவுடனேயே உன்னைப் பார்க்கணும்னு தோணிச்சு. உடனே வந்துட்டேன்."

எல்லோருக்குமே தான் ஒரு காட்சிப் பொருளாகிறோமோ? பின் என்ன, தங்களோடு நெருங்கிப் பழகிய ஒருத்தியின் மகள் பல வருடங்களுக்குப் பிறகு வந்து குதித்தால் அவளைக் குறிஞ்சி மலராகக் கருதி ஆவலோடு பார்க்க வருவதுதானே இயல்பு?

ஒரு மிக அழகான ஹேர்பின் செட்டை அந்த ஜானகி அவளுக்குக் கொடுத்தாள். சிங்கப்பூரிலிருந்து வாங்கியதாக இருக்க வேண்டும். வித்தியாசமாகவும், கண்ணைப் பறிப்பதாகவும் இருந்தது.

"இதெல்லாம் எதுக்குங்க?" என்று சுவாதி தயங்க, "இதற்குப் போய் தயங்குறியே? உன் அம்மா என் வாழ்க்கைக்கு ஏற்றி வைத்த விளக்கோடு ஒப்பிட்டால் இதெல்லாம் கால் தூசி" எனும்போது அவள் கண்கள் கலங்கின.

இதற்குமேல் மறுத்துப் பேசாமல் அதை வாங்கி அங்கிருந்த மேஜையின் மீது வைத்துவிட்டு, "கொஞ்சம் இருங்க. காப்பி கலந்துக்கிட்டு வரேன்" என்றபடி ஸ்டவ் அருகே சென்றாள்.

"வேண்டாம் சுவாதி. வீட்டிலே அம்மா பால் காய்ச்சிக்கிட்டிருக்காங்க. எட்டிப் பார்த்துட்டுப் போகலாமேன்னு வந்தேன்" என்றாள் ஜானகி. "பரவாயில்லை அக்கா. இன்னைக்கி சுவாதி போடும் காப்பியையே குடிக்கலாம்" என்றவன் மெல்லிய குரலில் சுவாதிக்கு மட்டும் கேட்கும்படி, "வருங்காலத்துக்கு நாக்கை இப்போதே தயார் செய்து கொள்வது நல்லது இல்லையா?" என்றான்.

சுவாதி சங்கடப்பட, "என்ன சொன்னான் இவன்? தனக்கு காப்பியில் அதிக சர்க்கரை போடணும்னு சொல்லியிருப்பானே" என்று கூற, ஆமாம் என்று தலையசைக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது சுவாதிக்கு.

அடுப்பில் பால் காய்ந்து கொண்டிருக்க, "எங்கக்காவுக்கும் காந்திக்கும் உள்ள முக்கிய வித்தியாசம் என்ன சொல்லு?" என்று கேட்டுவிட்டு அவனாகவே சொன்னான் "காந்தி அஹிம்சாவாதி. அதாவது 'நான்-வயலினிஸ்ட்'. எங்கக்கா வயலினிஸ்ட்."

கண்கள் விரிய ஜானகியைப் பார்த்த சுவாதி "நீங்க சின்ன வயதிலேயே வயலின் கத்துக்கிட்டீங்களா?" என்று கேட்டாள்.

**"மெகா சீரியல்ல இந்த வாரம் கதை என்ன?"**

**"வீட்டை விட்டு வெளிய போக, வீட்ல இருக்கிற அஞ்சு பேரிடமும் விடைபெற ஆரம்பிக்கிறார்; அதுல இன்னும் மூணு பேர் பாக்கி!**

**– பர்வதவர்த்தினி**



# சென்னை தரமணியில் புதிய நகர் உருவாக்கம்

எந்த லாப, நஷ்டமும் இல்லாமல் செயல்படும் பதிவு செய்யப்பட்ட நல வாழ்வு சங்கத்தின் அனைத்து வசதிகளுடன் கூடிய தரமான சூப்பர் டீலக்ஸ் அடுக்குமாடி குடியிருப்புகள் சென்னை தரமணியருகே (M.R.T.S. இரயில் நிலையம் சமீபம்) உருவாகி வருகிறது. ஒன்று மற்றும் இரண்டு படுக்கையறைகள் கொண்ட வீடுகள் (Single, Double Bedrooms) ஒதுக்கீடு செய்யப்படவுள்ளன. மத்திய, மாநில அரசு ஊழியர்கள், பொது நிறுவன ஊழியர்கள், ஓய்வூதியம் பெறுபவர்கள், குழுவாக பதிவு செய்ய விருப்பமுள்ள நிறுவனங்கள் மற்றும் சங்கங்கள் ஆகியோரிடமிருந்து உறுப்பினராக விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**அரசு பொதுத்துறை ஊழியர்கள்**
**நல வாழ்வுச் சங்கம்**
**32, பர்க்கிட் ரோடு, தி. நகர்,**
**சென்னை - 600 017,**
**தொலைபேசி : 4349625**

## "ஸ்ஸ்... அது மட்டும் சஸ்பென்ஸ்!"

**சின்னத்திரை சீரியல் விரும்பிகளை இப்போது வாட்டி வதைத்துக் கொண்டிருக்கும் கேள்வி, 'ஜெயிப்பது நிஜம்' தொடரில் வரிசையாக கொலை செய்து கொண்டிருப்பவர் யார்? என்பதுதான். இத்தொடரின் கதை, திரைக்கதை, வசனம் எழுதியுள்ள பட்டுக்கோட்டை பிரபாகர் வீட்டுக்கு 'யாராந்த கொலையைச் செய்தார்?' என்று கேட்டு தினமும் போன் கால்களாம்!"**

**"யாரையாவது சந்தித்தால் கூட முதல்ல அந்த கொலைகாரனை விசாரித்து விட்டுத்தான் என்னை நலம் விசாரிக்கிறார்கள்" என்கிறார் பிரபாகர். அப்படியா சார், 'அது யாருன்னு நம் காதை மட்டும் கடியுங்களேன்' என்று கேட்டால், "ஸாரி, என் மனைவி, குழந்தைகள்கிட்டே கூட நான் அதைச் சொல்லலை. 59வது வாரம் வரை வெயிட் பண்ணுங்க" என்கிறார் மர்மமாக!**

**– ஏக்**

• 'ஜெயிப்பது நிஜம்' தொடரில் நீனா

ஜானகி புன்னகைத்தாள். "அதாவது உங்கம்மா எனக்குச் செய்த உதவியை இப்போதே சொல்லியாக வேண்டுமென்றாக்கி விட்டது உன் கேள்வி."

"அம்மா உங்களுக்கும் ஏதாவது ஓவியத்தை ப்ரசென்ட் செய்தாங்களா?" என்று சுவாதி பட்டென்று கேட்டுவிட, அவள் ஏன் அப்படிக் கேட்கிறாள் என்பதைப் புரிந்து கொண்ட பிரசாத் சிரித்தபடி "இது ஓவியமில்லே. காவியம். ஒரு பாதக்கலை கைக்கலையாக மாறிய காவியம்" என்றான்.

இது பற்றியெல்லாம் சுவாதிக்குப் புரியாவிட்டாலும், அது பற்றி ஜானகி கவலைப்பட்டதாகவும் தெரியவில்லை. கண்கள் மின்ன தன் வாழ்நாட்களை ரிவர்ஸில் ஓட விட்டாள்.

"இப்போது என் உடல்வாகு கொழு கொழுன்னு இருக்கு. ஆனால் ஆறு வருடங்களுக்கு முன்னே என்னைப் பார்த்தவங்க "செதுக்கி வைத்த சிற்பம்" மாதிரி நான் இருப்பதாகச் சொல்வாங்க. பரதநாட்டிய நிகழ்ச்சிகள் சிலதைச் சின்ன வயதிலே பார்த்ததிலேயிருந்து எனக்கும் டான்ஸ் ஆட வேண்டுமென்ற ஆர்வம் வந்தது. ஆனால் பள்ளிப் படிப்பு முடியும் வரை நடன வகுப்புகளிலே சேர வீட்டிலே அனுமதி கிடைக்கலே. படிப்பு கெட்டுப் போயிடும்கிற பயம். ஸ்கூல் படிப்பு முடிந்ததும் கட்டாயம் டான்ஸ் க்ளாஸில் சேர்த்து விடுவதாக அம்மா வாக்கு கொடுத்திருந்தாங்க.

ஆனால் எதிர்பாராதது நடந்தது. பள்ளியில் பிரிவுபசார விழாவில் ஒரு கலை நிகழ்ச்சி ஏற்பாடு செய்திருந்தாங்க. அதிலே ஒரு க்ரூப் டான்ஸிலே நானும் சேர்ந்திருந்தேன். நிகழ்ச்சி முடிந்து மேடையை விட்டு இறங்கும்போது ஏதோ நினைவில் கீழே காலை வைத்துவிட, நாலைந்து படிகள் உயரத்துக்குத் தாறுமாறாக விழுந்து விட்டேன். அந்த விபத்தில் என் வலதுகால் எலும்பு வளைந்து விட்டது. இப்போது கூட நான் விந்தி விந்தி நடப்பதைப் பார்த்திருப்பாயே?"

சுவாதி கொடுத்த காப்பியை உறிஞ்சிக் குடித்தபடி தெம்பாகத் தன் பேச்சைத் தொடர்ந்தாள் ஜானகி.

"அழுதேன். தொடர்ந்து அழுதேன். அந்தக் கால் வலியிலும் எப்படியோ பரீட்சை எழுதித் தேறிவிட்டேன். ஆனாலும் மனசிலே ஒரு ஆழமான வடு. சின்ன வயதிலிருந்தே நான் கண்ட கனவு இனி பலிக்காதுன்றதாலே என் வாழ்க்கைக்கே அர்த்தமில்லைன்னு நினைத்தேன். அதற்கப்புறம் ஒரு நாளைக்கு ஒரு வேளைதான் சாப்பாடு. கோயில் உட்பட எங்கும் போவதில்லைன்னு நான் முடிவெடுக்க வீட்டிலே ஒரே சோகக் காட்சிதான் என்னால். அந்த சமயத்திலேதான் உங்கம்மா என்கிட்டே வந்து சில கேள்விகள் கேட்டாங்க."

ஜானகி தொடர்ந்து பேசி முடித்ததும், சுவாதிக்குத் தன்னை யாரோ வேகமாக உலுக்கிவிட்ட மாதிரி இருந்தது. புதுப்புது ஞானக் கண்கள் அவளுக்குள் திறந்தன. மனதுக்குள்ளேயே விமானப் பணிப்பெண் வேலைக்கு முழுக்குப் போட்டாள். தன்னுடைய திடமான, மாற்ற முடியாத வருங்கால லட்சியம் என்ன என்பது பற்றி அடுத்த நாள் தெரிவித்ததும் கோமளா "நிஜமாகத்தான் சொல்றியா?" என்றாள் பலத்த அதிர்ச்சியுடன்!

(தொடர்ந்து பறக்கும்)

# மோகன் மருத்துவமனை

## குடல் இறக்கத்திற்கு லேப்ராஸ்கோபிக் சிகிச்சை

- ★ சென்னையில் குடல் இறக்கத்திற்கு (ஹெர்னியா) லேப்ராஸ்கோபிக் மூலம் அறுவையில்லாமல் சிகிக்சை செய்து தழும்பு இன்றி இரண்டே நாளில் வீடு திரும்பலாம்.
- ★ சிசேரியன் மூலம் ஹெர்னியா வந்தவர்களுக்கு கூட அறுவை இன்றி சிகிச்சை செய்யப்படும்.
- ★ கர்ப்பப்பை தொடர்பான நீண்ட கால நோய்களுக்கு லேப்ராஸ் கோபிக் சிகிச்சை மூலம் தீர்வு
- ★ மூல நோய்க்கு அறுவையில்லா நவீன IRC சிகிச்சை

மேலும்

நீண்ட கால கர்ப்பப்பை தொடர்பான நோய்களுக்கு

சிறப்பு அறுவை சிகிச்சை

**LAPAROSCOPIC HYSTERECTOMY**

லேப்ராஸ்கோபி கர்ப்பப்பை நீக்குமுறை

- மிகக்குறைந்த அளவு இரத்த இழப்பு
- தழும்பில்லா சிகிச்சை
- 2 நாட்கள் தங்கினாலே போதுமானது

C P 50, ரசாக் கார்டன், MMDA மெயின் ரோடு, அரும்பாக்கம்,
சென்னை -106. ☎ : 4756490, 4752990.

# கழற்றாத சிலுவை!

இதுவரை எந்தத் தேர்தலிலும் நின்றதில்லை. ஒரு வோட்டு கூட பெறாமலேயே ரஷ்யாவின் மிக உயர்ந்த பதவியை அடைந்திருக்கிறார் விளாடிமிர் புடின்!

தனிப்பட்ட முறையில் உடல்நலமின்மை, ஊழல் குற்றச்சாட்டுகள், நாட்டின் பொருளாதார வீழ்ச்சி ரஷ்யாவிலிருந்து பிரியத் துடிக்கும் செச்னியாவின் யுத்தம் - இவற்றின் காரணமாக ஜனாதிபதி எல்ஸ்டின் தம் பதவியை ராஜினாமா செய்ய, அந்த யோகம் புடினுக்கு அடித்திருக்கிறது.

லெனின்கிராடில் உள்ள ஏழ்மையான குடும்பம் ஒன்றில் பிறந்த புடின் சிறு வயதில் ஒரு தெருப்பொறுக்கி! சமீபத்தில் வெளியாகியுள்ள ''பர்ஸ்ட் பர்சன்'' என்ற நூலில் அவரே இப்படி குறிப்பிட்டிருக்கிறார். பிறகு ஜூடோ கலையை முழுவதுமாக கற்றுக் கொண்ட பின் வாழ்வில் சுயக்கட்டுப்பாடு அவசியம் என்பதை உணர்ந்து கொண்டார். பள்ளிப் பருவத்தில் இவர் பார்த்த ஒரு யுத்தத் திரைப்படமும், அதில் வெகுவாகப் புகழப்பட்டிருந்த சோவியத் உளவாளிகளும் இவர் மனத்தை மிகவும் பாதித்தன(ர்).

நேராக, ரஷ்ய உளவு நிறுவனமான கேஜிபியின் தலைமை அலுவலகத்திற்குச் சென்று, "உளவாளியாகச் சேர விரும்புகிறேன்'' என்று அந்த டீன் ஏஜ் இளைஞன் சொன்னதைக் கேட்டதும், உளவு அதிகாரிகளுக்கு வியப்பு! இங்கு சேர வேண்டுமானால் ஒன்று அரசு ராணுவத்தில் சேர்ந்து பணியாற்றியிருக்க வேண்டும். அல்லது தலைசிறந்தக் கல்வி நிறுவனமொன்றில் பட்டப் படிப்பை முடித்திருக்க வேண்டும்'' என்றனர் அந்த அதிகாரிகள்.

உடனடியாகக் கல்லூரியில் சேர்ந்து சட்டக் கல்வியைப் படித்து முடித்தார். ரஷ்ய உளவு நிறுவனத்தில் உடனடியாகச் சேர்ந்தார்.

மிகவும் துடிப்பானவராகவும், பொறுப்புள்ளவராகவும் விளங்கிய புடின் விரைவிலேயே பவெல் போரோடின் என்பவரின் கவனத்தை ஈர்த்தார். எல்ஸ்டினின் நேரடி உதவியாளரான இவர் புடினைத் தமது உதவியாளராக அமர்த்திக் கொண்டார்.

பின்னர் இவரது வளர்ச்சி அபாரமானது. விரைவிலேயே எல்ஸ்டினின் கவனத்தையும் கவர, சென்ற வருடம் ஆகஸ்ட் மாதத்தில் ரஷ்யாவின் பிரதமராக எல்ஸ்டினால் நியமிக்கப்பட்டார். அந்த வருடக் கடைசியிலேயே தற்காலிக ஜனாதிபதியாகி, இப்போது நிரந்தரமாகிவிட்டார்! இதை மேலும் நிரந்தரமாக்கிக் கொள்ளும் வகையில் அரசியலமைப்பு சட்டத்தை மாற்றப் போகிறாராம். அதாவது ஜனாதிபதியின் பதவிக் காலம் நான்கிலிருந்து ஏழாண்டுகளாக உயர்த்தப்படும்.

கடுமையாக நடந்து கொண்டு கலவரங்களை அடக்குவதில் வல்லவர் என்ற இமேஜ் இவருக்குக் கிடைத்திருக்கிறது. வேறொரு விஷயத்திலும் இவர் பலரது கவனத்தையும் கவர்ந்திருக்கிறார். இவரது தந்தை தீவிர கம்யூனிஸ்ட் என்றாலும் தாய்க்குக் கிறிஸ்தவ மதத்தில் பெரும் நம்பிக்கை உண்டாம். ஒருமுறை இத்தாலிக்குப் பயணம் சென்றபோது போப்பின் ஆசிபெற்ற சிலுவையொன்றை அம்மா மகனுக்கு மாட்டிவிட, இன்றுவரை அதைக் கழற்றவில்லை புடின்!

— ஜி.எஸ்.எஸ்.

வேளூர் மாரி செட்டியாரும், விநாயக பக்தரான கந்தப்ப பண்டாரமும் ஒவ்வொரு கிருத்திகையிலும் சென்னை முத்தியாலுப் பேட்டை ஏரியாவிலிருந்து திருப்போரூர் முருகன் கோயிலுக்குச் சென்று வருவது வழக்கம். அவ்வளவு பக்தி.

ஒரு சமயம் நடந்து வந்த களைப்பினால் அவர்கள் வேப்ப மரத்தடியில் தூங்கிவிட்டார்கள், கனவில் முருகன் தோன்றி "ஏன் இவ்வளவு சிரமப்படுகிறீர்கள். புற்றில் நான் இருக்கிறேன். என்னை நீங்கள் வசிக்கும் சென்னைப் பட்டணத்துக்குக் கொண்டு போய் பிரதிஷ்டை செய்து பூஜை செய்யுங்கள்" என்று சொன்னாராம்.

விழித்த அவர்கள் பக்கத்தில் ஒரு புற்று இருப்பதைக் கண்டார்கள். புற்றைத் தோண்டினால் முருகப் பெருமான் திருவுருவச் சிலை இருந்தது. சுப்ரமணிய சுவாமியை எப்படியோ தூக்கிக்கொண்டு இருவரும் தங்கள் இருப்பிடம் வந்து சேர்ந்தார்கள். கந்தப் பண்டாரம் கட்டியிருந்த சிறிய கணபதி கோவிலில் வைத்துப் பூஜித்து வந்தார்கள்.

சர்வ சித்தி விநாயகர் ஆலயத்தில் முருகப் பெருமானை எழுந்தருளச் செய்து பூஜித்தார்கள்.

முத்து நாயகர் என்பவர் தம் உடைமையான நந்தவனத்தையே குமரக் கடவுளுக்குக் கொடுத்துவிட்டார். இருந்தாலும் ஆலயம் கட்ட பொருள் வேண்டுமே!

மாரி செட்டியார் யோசித்துக் கொண்டிருந்தபோது அவருடைய மனைவி ஆதிலக்ஷ்மி ஒரு முடிப்பை அவர் முன் வைத்தார். அந்தக் காலத்தில் பெண்கள் தலையிலிருந்து பாதம் வரை பலவித நகைகளை அணிந்து கொண்டிருப்பார்கள். ஆதிலக்ஷ்மியின் எல்லா நகைகளும் அந்த முடிப்பில் இருந்தன. "இதை வைத்துக்கொண்டு கோவில் கட்ட ஆரம்பித்து விடுங்கள்" என்றாள் அந்த பக்தை.

அதுமுதல் கோவில் கட்டத் தடங்கலே ஏற்படவில்லை.

தெய்வ தரிசனம் 25

# தேடி வந்த கந்தன்!



முதலில் செங்கல் திருப்பணியாகக் கட்டப்பட்டது கோவில். முத்துக் குமரன் அந்தப் பேட்டைக்கு வந்தது முதல் செல்வம் கொழிக்கத் தொடங்கியது. வியாபாரங்கள் பெருகின. எந்தப் பொருள் வியாபாரம் செய்தாலும் செழித்தது. வைசியப் பெருமக்கள் எல்லாரும் முருகப் பெருமானிடம் நன்றியோடு பக்தி பூண்டார்கள். தங்கள் செல்வத்தை முருகனுக்கு விழா எடுப்பதிலும், கருங்கல் திருப்பணி செய்து கோவிலை அழகு படுத்துவதிலும் செலவழித்து மகிழ்ந்தார்கள்.

மாரிச் செட்டியார் காலத்திலேயே சிறப்பு மிக்கக் கோவிலாகக் கந்தகோட்

ஆனந்தி



டம் எழுந்தது. மகா கும்பாபிஷேகம் நடந்தது.

**சோ**ழ நாட்டைச் சேர்ந்த சிலர் தீர்த்த யாத்திரை போய்விட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்தார்கள். கந்த கோட்டச் சிறப்பைக் கேள்விப்பட்டு முத்துக்குமரனைத் தரிசிக்க வந்தார்கள். மாரி செட்டியாரிடம் "இவ்வளவு உன்னதமான கோவிலில் உற்சவ மூர்த்தி இல்லை. தெய்வச் செயலாக வள்ளி தேவசேனா சமேதராக முருகப் பெருமான் திருவுருவச் சிலை ஒன்று கிடைத்தது எங்களுக்கு அந்தப் பஞ்சலோக மூர்த்தியை உங்களிடம் ஒப்படைக்கிறோம்" என்றார்கள்.

மாரி செட்டியாருக்கும் கந்த பண்டாரத்துக்கும் எப்படி இருந்திருக்கும்? உற்சவர் வந்த பின் விழாக்களும் பெருகின. வியாபாரமும் பெருகிற்று. கோவிலுக்கு சொத்துக்களும் பெருகின. அங்கே குடியிருந்த அத்தனை வைசியப் பெருமக்களும் 'முத்துக்குமரன்' மீது அன்பைப் பொழிந்தார்கள். தங்களுக்காகவே வந்து அவர்கள் பேட்டையில் குடியேறியிருப்பதாக இன்றும் நம்புகிறார்கள்.

ஆகையினாலேயே இன்றும் முருகப் பெருமானுடைய திருவிழாக்களைத் தங்கள் குடும்ப விழாவாகக் கருதி சங்கங்கள் அமைத்துக்கொண்டு கொண்டாடுகிறார்கள். தேடி வந்த குமரன் அல்லவா? அவ்வளவு பெரிய பாக்கியம் அது.

மாரிச் செட்டியார் காலத்துக்குப் பிறகும் கந்தகோட்டம் மிகச் சிறப்பான முறையில் வளர்ச்சி பெற்றது.

உற்சவ மூர்த்தி சிறியதாக இருந்தபடியால், மிக அழகாக அலங்காரம் செய்து வைர நவரத்ன நகைகளும், கிரீடமும் சூட்டிப் பட்டாடை அணிவித்து மாலைகளால் அலங்கரித்து உலா வரச் செய்ய சற்று பெரிய உற்சவர் வேண்டும் என்று எல்லாரும் சேர்ந்து தீர்மானம் செய்து கந்த சுவாமியைப் போலவே பஞ்சலோக மூர்த்தியை வார்க்க ஏற்பாடு செய்தார்கள். புதிய முத்துக்குமரன் உருவம் அற்புதமாக அமைந்தது. சிற்பத்தில் சில பொறுக்குகள் இருக்கும். அதைச் சுத்தம் செய்யச் சிற்பி உளியை எடுத்து குமரன் மீது வைத்தார். மின்னலால் தாக்குண்டதுபோல் விழுந்து மூர்ச்சையானார். அதன் பிறகு யாரும் முத்துக்குமரனை நெருங்கவே அஞ்சினார்கள். அழகன் திருவுருவம் சுத்தம் செய்யப்படாமல் மெழுகு ஒட்டிக்கொண்டே இருந்து வந்தது.

காசிக்குப் போய்விட்டு வந்த அந்தணத் துறவியொருவர் வந்தார். வரலாற்றைக் கேள்விப்பட்டு சாம்பையர் தானே சுத்தி செய்து தருவதாகக் கூறினார். நாதபிந்து கலாதியும், வேத மந்த்ர சொரூபனுமான கந்தனை வேத நாதத்தால் பல நாட்கள் வழிபட்டு மந்திரத்தாலேயே நீராட்டினார். திருவிழா நாயகன் ஒப்பற்ற தேஜஸுடன் மிளிர்ந்தான்.

இந்த முத்துக்குமார ஸ்வாமிக்கு அபிஷேகம் நடப்பதைக் காணத் தவம் செய்திருக்க வேண்டும்.

செவ்வாய்க்கிழமைகளில் சொம்பு சொம்பாகப் பன்னீரை எடுத்து தங்கச் சல்லடையால் பூமாரி பெய்வது போல் அபிஷேகம் செய்யும் காட்சி நம்மைப் பரவசப்படுத்துகிறது. ஈசனின் அருள் அந்தப் பன்னீர் மணத்தின் இனிய சக்தியால் நமது மூச்சில் கலந்து ரத்தத்தில் உறைந்து உடலில் ஊடுருவி உள்ளத்திலும் பரவி ஆன்மீக அனுபவத்தில் நம்மைத் திளைக்கச் செய்கிறது. வள்ளி தேவசேனையுடன் முத்துக்குமரன் பன்னீரில் திளைக்கும்போது வேத மந்தர சப்தங்கள் நமது செவிப்புலன் வழியே அருளைப் பெற்றுத் தருகின்றன. கண்களினால் முருகனின் திருமேனி அழகைப் பருகுகிறோம். கண்காள் காண்மின்களோ! செவிகாள் கேண்மின்களோ! கைகாள் கூப்பித் தொழீர். வாயே வாழ்த்து கண்டாய்" என்று சிவகுமாரனின் நிறைந்த அழகில் திளைக்கிறோம்.

அபிஷேகம் ஆன பிறகு அலங்காரம் செய்யும்போது கோபூஜை நடைபெறுகிறது. அகத்திக் கீரையைக் கையால் எடுத்துக் கொடுத்துப் பசுவையும், அதன் உயரத்துக்கு வளர்ந்து விட்டக் கன்றையும் வலம் வந்து வணங்குகிறோம்.

மீண்டும் முத்துக்குமரன் தரிசனம், தீபாராதனை. வைரவேல் என்ன? நவரத்தினம் பதித்த சேவற் கொடியென்ன? திவ்ய ஆபரணங்களென்ன! ஒய்யாரமாக நிற்கும் மயிலென்ன? காதலுடன் நோக்கும் வள்ளி தேவசேனையின் அழகென்ன? கந்தக்கோட்டம் வளர் முத்துக்குமரனைப் பார்த்து

"மாலயன் தனக்கும், ஏனைவானவர்
தமக்கும் எட்டா
மூல காரணமாய் நின்ற மூர்த்தி,
இம்மூர்த்தி யன்றே"

என்று சூரபதுமன் விசுவரூபத்தைக்

---

"நீங்க டப்பிங் படத்துக்கு வசனம் எழுதறவரா?"

"எப்படி கண்டுபிடிச்சீங்க?"

"உதடு அசைஞ்சு முடிஞ்சதும்தான் நீங்க பேசுறதே புரியுது!"

— அம்பை தேவா



கண்டு மயங்கினது போல மயங்கி நிற்கிறோம்.

மூத்துக்குமரனின் அழகு வடிவத்தில் சொக்கிப் போய் மற்ற மூர்த்திகளைப் பற்றிச் சொல்லாமல் இருக்கலாமா?

ஐந்து நிலைக் கோபுரத்தைத் தாண்டி உள்ளே செல்கிறோம். கந்தகோட்டம் சென்னையின் மிகவும் நெருக்கடியான இடத்தில் அமைந்திருக்கிறது. மாட வீதிகள் என்று பெயர். ஆனால் கடைகள்தான் குறுகலான தெருக்களின் இரு பக்கங்களிலும் இருக்கின்றன. வீதியுலாவின்போது எவ்வளவு நெருக்கடியாக இருக்கும் என்று எண்ணிக் கொண்டே காவடி ஏந்தும் இடும்பனைப் பார்த்துக்கொண்டே வடலூர் ராமலிங்க சுவாமிகள், பாம்பன் சுவாமிகள் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் முதலியோரைத் தரிசித்துக்கொண்டு வலம் வருகிறோம். திருப்போரூர் சிதம்பர சுவாமிகளையும் மறக்கவில்லை. அருணகிரி நாதரையும் மறக்க முடியாதல்லவா? தொண்டர்களாலும் கோவிலுக்குப் பெருமை.

இன் தமிழில் கந்தபெருமானைப் பற்றிப் பல பாடல்கள் இயற்றியிருக்கிறார் வண்ணச்சரபம் சுவாமிகள். இவர் மிகச் சிறந்த புலவர்,

"சென்ம வினை மாறவென்று
வெண்மை மிகு நீறணிந்த
திண்ணியரெலாம் விரும்பும் –
முருகோனே
தென்னை கமுகாதி யெங்கும்
மின்னும் எழி லாலுயர்ந்த
சென்னை நகர் வாழ வந்த –
பெருமாளே"

என்று சென்னை மாநகரம் ஒரு காலத்தில் தென்னங் கமுகு சோலையாக இருந்ததென்று பாடியிருக்கிறார்.

"அன்னமலி சென்னை நகர் தன்னில் வளர் கந்தனே!" என்று பாடுவது பலித்திருக்கிறது. கோவிலில் தினந்தோறும் நூறு பேருக்காவது அன்னமிடுகிறார்கள்.

அருளாளர் ராமலிங்க சுவாமிகள் பாடியுள்ள தெய்வமணி மாலையிலும் சென்னையை உயர்த்தி வைத்திருக்கிறார்.

தப்பற்ற சென்னையில்
கந்தகோட்டத்துள் வளர்
தல மோங்கு கந்தவேளே" என்று முருகனைப் புகழ்கிறார்." "தானமிகு சென்னையில்," "தன் புகழ் செய் சென்னையில்" என்றெல்லாம் சென்னையைப் புகழ்கிறார். "தரும மிகு சென்னை" என்றல்லவா பாடியிருக்கிறார்!



**"மாப்பிள்ளை ஜெயில்ல இருக்கார்னு சொன்னாங்களே, உண்மையா சம்பந்தி?"**
**"யார் இப்படி அபாண்டமா பொய் சொன்னது? அவன் ஜாமீன்ல இருக்கான்!"**
**— சித்தோடு கே. சதீஷ்குமார்**

பாம்பன் சுவாமிகளோ "சென்னைச் சேய்" என்றே கந்த பெருமானைக் கூறுகிறார். பெருமையாகத்தான் இருக்கிறது.

இந்தப் பெரியோர்களின் ஆளுமையிலும் தமிழிலும் உள்ளம் மயங்கி நின்று விட்டோம்.

மூலவர் இருக்கும் இடத்துக்குப் போகும் போதே கணபதியைத் தரிசித்துக் கொள்கிறோம். அடுத்தாற்போல் நித்யோத்ஸவர் பல்லக்கிலிருந்து நாயகியருடன் இறங்கி அறைக்குள் செல்வதைப் பார்க்கிறோம்.

ஒரு சந்நிதியில் பல உற்சவ மூர்த்திகளைக் காண்கிறோம். சுவாமி நாதரும் வாய் பொத்தி அமர்ந்திருக்கும் கைலாஸ நாதரும் நமது கருத்தைக் கவர்கிறார்கள். மாரி செட்டியார் திருவுருவமும் இங்கே இருக்கிறது! தான் வழிபட்ட தெய்வத்துடன் எப்போதும் வாழ்கிறார் அவர். கானத்திரு வேடன் கன்னியான வள்ளியம்மையைத் தரிசித்துக் கொண்டு மூலவரான புற்றிடம் கொண்ட சுப்ரமணியனைத் தரிசிக்கிறோம். யானை வாகனம் எதிரே இருக்கிறது! சந்நிதிக்கு இரு புறமும் நான்கு அடி உயரமுள்ள பாவையர் விளக்கேந்தி நிற்கிறார்கள். இந்த பெருமானுக்கு இடது பக்கம் தேவயானை ஒயிலாக நிற்கிறாள். இந்திரகுமாரியல்லவா? சொக்க நாதரும் மீனாட்சியம்மையும் தங்கள் மகனுடைய பெருமைகளைப் பார்த்துப் பூரித்துப் போயிருக்கிறார்கள். ஆறுமுகப் பெருமானுக்கும் ஆரத்தி காட்டுகிறார் அர்ச்சகர்.

திருக்குளத்தைப் பார்த்தால் பிரமிப்பாக இருக்கிறது. கோவிலுக்குள்ளே இவ்வளவு



• விழாவில்

## மௌனமான நேரம்!

'குஷி' – கேசட் வெளியீட்டு விழா. ஷங்கர், அஜித், விஜய், ரம்பா, மீனா, ஜோதிகா, வைரமுத்து என்று நீண்ட நிரைப்பட்டாளம். ஒவ்வொருவராகப் பேச அழைக்கப்பட்டார்கள். 'முத்து முத்தான வார்த்தைகளில் இப்போது வைரமுத்து பேசுவார்' என்று நிகழ்ச்சி தொகுப்பாளினி சொல்ல... எல்லோருக்கும் எதிர்பார்ப்பு! ஆனால் உட்கார்ந்துகொண்டே 'நான் பேச மாட்டேன்' என்பது மாதிரி ஆக்ஷன் செய்து விட்டு பெரிய கும்பிடு போட்டார் முத்து.



'கண்டு கொண்டேன் கண்டு கொண்டேன்' கேஸட் வெளியீட்டு விழாவில் பேசியபோது எழுந்த சர்ச்சையால் இனி பொதுவிழாக்களில் பேசப் போவதில்லை என்று அறிவித்திருந்ததையடுத்து, அதை நிஜமாலுமே கடைப்பிடிக்கத் தொடங்கிவிட்டார் என்கிறார்கள் அவருக்கு வேண்டியவர்கள்!

— ஏக்

பெரிய குளம் இருக்குமென்று தோன்றாது. இதில் எந்தக் கோடையிலும் நீர் வற்றியது கிடையாதாம். கோவிலுக்கு வரும் அன்பர்கள் ப்ளாஸ்டிக் பைகளையும், சாப்பிட்ட இலைகளையும் குளத்தில் போடாமலிருக்கக் கூடாதா?

இந்தக் குளத்தை ஒட்டிய மண்டபத்தின் ஒரு கோடியில் சர்வ சித்தி விநாயகர், இந்தத் தலத்தின் ஆதி தெய்வம் வீற்றிருக்கிறார். கந்தப் பண்டாரம் பூஜித்த கணபதி. இவருடைய கோவிலை ஒட்டி சிவ பெருமான் லிங்க வடிவில் திருக்குளத்தைப் பார்த்துக் கொண்டு வீற்றிருக்கிறார். அருகே தேவி இருப்பது தெரியாதபடியால் எதிர்ப்பக்கம் வைத்திருக்கும் நிலைக்கண்ணாடியில் அம்மையின் எழிலுருவைக் கண்டு வணங்குகிறோம்.

பெரிய கண்ணாடிப் பெட்டியில் மிகப் பெரிய ஆடல் வல்லான் மரத்தால் செய்யப்பட்டுக் காட்சியளிக்கிறார். "எண்தோள் வீசி நின்றாடும் பிரான் தன்னைத் தேடிக் கண்டு கொண்டேன்" என்று வணங்கி தண்டம் ஏந்தி நிற்கும் தண்டபாணியைத் தரிசிக்கிறோம். பள்ளியறைக் கதவும், இந்தக் கோவில் கதவும் புதிதாகச் செய்யப்பட்டிருக்கின்றன. பரத முனிவர் எழுதிய சாஸ்திரத்தின்படி 108 கரணங்களையும் இந்த நான்கு கதவுகளில் செதுக்கியிருக்கிறார் சிற்பி.

அலங்காரமாக அரசோச்சும் முத்துக் குமரன் சந்நிதிக்கு மீண்டும் வந்து மனம் குவிந்து நிற்கிறோம். இன்னும் பன்னீர் மணம் வியாபித்திருக்கிறது. நவரத்தினங்கள் இழைத்த தங்கக் கவசம் பூண்டு, நெற்றிப் பட்டமும் கட்டியும், கல்லிழைத்த பெரிய மகுடமும் அணிந்துகொண்டு, கல்லிழைத்த அபயவரத ஹஸ்தங்கோடு

*நீலமயில் வாகனனாக,*
*வெற்றி வேலாயுதனாகக்*
*கோலம் நிறைந்த கோழிக்*

கொடி படைத்த சேவகனாகக் காட்சி தருகிறார். கந்தகோட்டத்துக் கந்தசாமியான, முத்துக் குமரன். காசு மாலையும் யக்ஞோபவீதமும் அவனுடைய அழகுக்கு அழகு செய்கின்றன. இரு பக்கமும் அலங்கார வல்லிகளாகத் தேவியர்.

எதிரில் நாகத்தை அடக்கிய பொன் மயில். இத்தனை மாலைகளையும், இத்தனை ஆபரணங்களையும் எப்படித்தான் சுமக்கிறாரோ என்று தோன்றுமளவுக்கு அலங்காரம்!

இத்தனை சிறப்பாக இந்தக் கோவிலை நிர்வகித்து நித்திய பூஜைகளை குறைவின்றி நிலையாக நடத்தி வரும் அறங்காவலர்களின் சிரத்தையைப் போற்றுகிறோம்.

"பிழை தீர்ந்த சென்னையிலோர் தாய் போல் வதி தருங் கந்தா!" என்று வண்ணச் சரப சுவாமிகள் சென்னையைப் புகழ்ந்திருப்பது நமக்கு நம்பிக்கை அளிக்கிறது! பெரியோர்கள் வாக்குப் பலிக்கும். பிழைகள் இல்லாத சென்னையாக நமது தமிழ்நாட்டுத் தலைநகரம் விளங்கும் காலம் வரும்.

ஷூட்டிங் ஸ்பாட்

• தொடரில் காயத்ரி, ஜெயா மேனன்

• மீரா கிருஷ்ணா காயத்ரியுடன் இயக்குனர்கள் லட்சுமி, சரஸ்வதி



# ரஜினியின் கிளாஸ்மேட்!

ஆழ்வார்பேட்டையில் உள்ள ஜெயஸ்ரீ பிக்சர்ஸ் அலுவலகத்தின் மாடியில் உள்ள ஹால்! தற்காலிக மாக ஒரு வீட்டு வரவேற்பறையாகி இருந்தது. இரட்டைப் பின்னல், தமிழச்சிகளே மறந்துபோன பாவாடை, தாவணியில் சோபா வில் கால்களைக் கட்டியபடி காயத்ரி அமர்ந்துகொண்டிருக்க, அவரு டைய அம்மா கேரக்டர் என்ட்ரி.

அம்மா முகத்திலே கோபம். 'ஹலோ!' என்ற காயத்ரியின் கொஞ்சல் எடுபட வில்லை. படபடவென்று பேச்சு, பதில் பேச்சு. கடைசியில் சமாதானக் கொடி உயர, காட்சி கட்!

'சாவித்ரி' தொடருக்காக இந் தக் காட்சியை இயக்கிய இரட்டையர்களான லட் சுமி – சரஸ்வதியுடன் பேசினோம். இருவரும் இயக்குநர் எஸ்.வி. ரம ணின் வாரிசுகள். சன் டி.வி.யில் வர இருக்கும் இத்தொ டரின் முதல் ஷெட்யூலின் கடைசி கட்டம். "நாங்கள் கொஞ்சம் ஸ்லோ. இன்று டி.வி.

• 'சோழா லைட் ஹவுஸ்!'

# வெளிச்சத்துக்கு வராத கலங்கரை விளக்கம்!



**தி**ம்மாத் துண்டு சைஸில் ஏதோ உடைந்துபோன ரைஸ் மில் புகை போக்கி மாதிரி இருக்கும் இது... (படத்தில் நீங்கள் பார்ப்பது) ஒரு வரலாற்றுச் சின்னம் என்றால் நம்ப முடிகிறதா?



• ரசாயனப் பூச்சு அளித்தால் எஞ்சியுள்ள அமைப்பையாவது காப்பாற்றும்!

யெஸ்! முதலாம் பராந்தகச் சோழன் காலத்தில் (கி.பி. 907- 955) கட்டப்பட்ட கலங்கரை விளக்கம் தான் இப்படி காட்சியளிக்கிறது!

கோடிக்கரை கடற்கரையில் அனாதையாக நிற்கும் இந்தக் கலங்கரை விளக்கம் பற்றி கல்கியின் 'பொன்னியின் செல்வனி'ல் அழகாக விவரிக்கப்பட்டிருக்கிறது! வனத்துறை வரைபடத்திலும் 'சோழா லைட் ஹவுஸ்' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது!

இப்பகுதியைச் சேர்ந்த பலருக்கே இதன் முக்கியத்துவம் தெரியவில்லை என்பது வேதனையான விஷயம்.

இடிந்ததைப் புதுப்பிக்க வேண்டாம்; இருப்பதைக் காப்பாற்ற ஒரு தடுப்பு வேலியுடன் சின்ன தகட்டில் பலகை எழுதி வைத்தால்கூட பலருக்கு இதன் சிறப்பு தெரிய வரலாம்! கவனிப்பார்களா?

— ஏ.சி. சௌந்தர்ராஜன், உதகமண்டலம்

---

சீரியல் எடுப்பவர்கள், ஒரு நாளுக்கு ஒரு எபிசோட் என்கிற வேகத்தில் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்கிறார் லட்சுமி.

"ஒரே லொகேஷனில் எடுக்காமல், பல்வேறு அவுட்டோர் லொகேஷன்களிலும் போய் எடுத்துக்கொண்டிருக்கிறோம்" என்கிறார் சரஸ்வதி.

பல்வேறு செண்டிமெண்ட்கள் கொண்ட கதை இது. பூனையாக இருக்கும் பெண்ணின் வாழ்க்கையில் புயல் வீசுகிறது. அவள் புயலாகி, அதனை எப்படி சமாளிக்கிறாள் என்பதுதான் கதை. இக்கதை ஜெயஸ்ரீ பிக்சர்ஸ் கதை இலாகாவின் உபயம். வசனம் வியட்நாம் வீடு சுந்தரம். 'பின்னி விட்டார்' என்கிறார் எஸ்.வி. ரமணன்.

காயத்ரி தவிர ஷ்யாம் கணேஷ், மோகன் ராம், சேத்தன், டாக்டர் ஷர்மிளா, மீரா கிருஷ்ணா, யுகேந்திரன் என்று நீள்கிறது நடிக, நடிகையர் பட்டாளம்.

காயத்ரியிடம் ஒரு மினி பேட்டி.

**''எத்தனை சீரியல்களில் நடித்துக் கொண்டிருக்கிறீர்கள்?''**

தமிழில் சாவித்ரி, மெள்ளத் திறந்தது மனசு, குமரன் என்று மூன்று தொடர்கள். தெலுங்கில் ஒன்று, மலையாளத்தில் ஒன்று. தவிர, 'ஓம் நமச்சிவாய' என்ற பல மொழித் தொடர்.

**"எல்லா தொடர்களும், ஏறத்தாழ ஒரே மாதிரிதானே இருக்கின்றன. குழப்பமில்லாமல் இருக்கிறதா?"**

"எல்லா தொடர்களும் ஒரே மாதிரி என்பதையே ஒப்புக் கொள்ளமாட்டேன். பார்க்கிறவர்கள், கேரக்டர்கள் ஒரே மாதிரி என்றாலும், நடிக்கிற நான் ஒவ்வொன்றும் வெவ்வேறு என்று உணர்ந்துதான் நடிக்கிறேன்.

**"சினிமாதான் உங்களின் லட்சியமா?"**

''இல்லை... டீ.வி சீரியல்கள்தான். சினிமாவில் நான் பெரிய அளவில் கிளிக் ஆகவில்லை. டீ.வி.யில் பாபுலாரிடி அபாரம். சினிமா பக்கம் போகிற எண்ணமே கிடையாது.

**கா**யத்ரியின் அம்மா கேரக்டரில் நடிப்பவர் ஹேமா சௌத்ரியாம்!

பிலிம் இன்ஸ்டிடியூட்டில் ரஜினிகாந்த்தின் கிளாஸ்மேட். தமிழில் (அந்தக் காலத்தில்) மன்மத லீலை, குங்குமம் கதை சொல்கிறது என்று அரை டஜன் படங்களில் நடித்திருக்கும் இவர் பிறகு கன்னடம் பக்கம் போய்விட்டார். அங்கே ஐம்பது படங்கள் வரை நடித்திருக்கிறாராம்.

"நான் நடிக்கும் முதல் டீ.வி தொடர் இது. இங்கே ஸ்ரீவித்யா போல, அம்மா, அண்ணி கேரக்டர்கள் என்றால் கூப்பிடு ஹேமா சௌத்ரியை என்கிறார்கள், டீ.வி. சீரியலில் இறங்கியாகிவிட்டது. இனி, தொடர்ந்து நடிக்கப் போகிறேன்" என்கிறார் ஹேமா சௌத்ரி. டீ.விக்கு புது அம்மா நடிகை கிடைச்சாச்சுன்னு சொல்லுங்க.

ஸ்கிரிப்ட்: **கௌதம் ராம்**

# இவ்வளவுதான் ஆங்கிலம்!

**ஆங்கில எழுத்துக்கள் 26 என்பதை யாவரும் அறிவர்.**
**ஆனால் அடிப்படை வாக்கியம் 22 தான் என்பதை எத்தனை பேர் அறிவார்?**

---

இந்த இருபத்திரண்டு வாக்கியங்களை 157 பக்கங்களில் விளக்குகிறது, பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன் M.A., அவர்கள் எழுதிய ஆங்கிலப் பேராசான் **முக்கிய வாக்கிய அமைப்பு** விளக்கம் தமிழில் (**IMPORTANT SENTENCE STRUCTURE - Explained in Tamil**) என்னும் நூல்.

இந் நூலில் உள்ள இருபத்திரண்டு முக்கிய வாக்கியங்களைத் தெளிவாகப் புரிந்து கொண்டால், ஆங்கிலச் செய்தித்தாளில், ஆங்கில நூல்களில் காணப்படும் லட்சக் கணக்கான வாக்கியங்களை போல் நீங்களே வாக்கியங்களை அமைக்கலாம். ஆங்கில நூல்களிலும், ஆங்கில செய்தித்தாள்களிலும் காணப்படும் வாக்கியங்கள் அனைத்தும் இந்த 22 வகையான வாக்கியங்களின் அடிப்படையிலேயே அமைந்து இருக்கும். நூற்றுக்கணக்கான கிளைகளையுடைய ஒரு பெரிய ஆலமரத்தை அதன் அடிமரம் தாங்கி நிற்பதைப் போலப் பல்லாயிரக்கணக்கான ஆங்கில வாக்கியங்களை இந்த 22 வகையான வாக்கிய அமைப்புகள் தாங்கி நிற்கின்றன. ஒரு நாளைக்கு 5 பக்கம் என்ற கணக்கில் நிதானமாக 30 நாட்களில் ஆங்கில இலக்கணக் கூறுபாடுகள் அனைத்தையும் அறிந்து கொள்ளலாம். நூலின் இறுதியில் பயிற்சியும் உண்டு. அதற்கு நீங்களே விடை தரலாம். அளித்த விடையைச் சரி பார்த்துக்கொள்ள விடைகளும் உண்டு.

22ல் எல்லாமா? ஆமாம், ஆமாம் ! தமிழ் இலக்கணத்தில் இல்லாத அற்புதம் ஆங்கில இலக்கணத்தில் உண்டு. இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூன்றே காலம் தான் தமிழில்! அவற்றை மேலும் நுட்பமாக ஆராய்கிறது ஆங்கில இலக்கணம்.

இந்த நூலைப் படியுங்கள். இவை எல்லாமே புரியும்! இவ்வளவு தான் ஆங்கிலம். நம்பிக்கை யூட்டும் இந்தத் தொடர்களை மறவாதீர். 22 வாக்கியங்களை ஐயமறக் கற்று மேலும் முயன்று ஆங்கில மேதை ஆகுங்கள்.

இதன் விலை ரூ. 25 தான். M.O அனுப்ப வேண்டாம். கடிதம் எழுதுங்கள் V.P.P யில் அனுப்புகிறோம். தபால் மற்றும் கட்டுச் செலவு சேர்த்து ரூ.30 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலைப் பெற்றுக்கொள்ளுங்கள். கடிதம் எழுத வேண்டிய முகவரி : **வர்த்தமானன் பதிப்பகம்**, ஏ. ஆர். ஆர். வளாகம், 141, வடக்கு உஸ்மான் சாலை, தியாகராயநகர், சென்னை - 17. பனகல் பார்க் அருகில்.

நேரில் ரூ. 25 மட்டும் செலுத்தி நூலினை உடனே பெற்றுக்கொள்ளலாம். நேரம் : காலை 9.30 முதல் மாலை 6.30 வரை இடைவேளையின்றி. ஞாயிறு விடுமுறை.



**ப**வளாயிக்கு, இன்னும் உறக்கம் புடிக்கவில்லை. புரண்டு புரண்டு படுத்தாலும், ராக்காயிக் கிழவிதான் மனக்கண்ணில் பிம்பமாய்த் தெரிகிறாள். 'ஆத்தா பேரச் சொல்லி எடுத்த காணிக்கை. அந்த ஆத்தாவோட கோவில் காரியத்துக்குத்தான் செலவழிக்கணும். இல்லேன்னா...' என்று எச்சரித்து விட்டுப் போயிருந்த வார்த்தைகள் தமது உச்சந் தலைக் குடுமியைப் பிடித்து உலுக்குவது போலிருக்கிறது. ஒரு பொம்பளப் புள்ளைய வகையா ஆளாக்க முடியாத வக்கத்த பொழப்பா ஆகிடுச்சே' என்று ஏக்கத்துடன் அங்கலாய்த்தவள், சாயங்காலம் தன்னிடம் அடிவாங்கியபடி அழுது தூங்கிக் கொண்டிருக்கும் மகள் பேச்சியையும், அவளது தலைக்கு மேல் கதவுகளில்லாத அலமாரியில் முடிந்து வைக்கப்பட்டிருக்கும் துணியிலான சில்லரைப் பொட்டலத்தையும் பார்த்துக் கலங்கினாள்.

'பேச்சியை இந்த வருஷம் பள்ளிக்கூடத்துக்கு அனுப்ப முடியாமலேயே போயிருமோ' என்று மருகினவள், மீண்டும் அலமாரியிலிருந்த அந்தச் சில்லரைப் பணப் பொட்டலத்தைப் பார்த்தாள்.

முத்தாலம்மன் கோவில் திருவிழாவில், சேத்தாண்டி வேஷமிட்டு சில்லரையாய் பேச்சி வசூல் செய்து சேர்த்த பணம்.

மண் கலையத்திலிருந்து இந்தச் சில்லரைக் காசுகளை எண்ணுவதற்காக நேற்று சாயங்காலம் வீட்டுத் தரையில் கொட்டிய போது வந்த சலசலவென்ற ஓசை, எட்

# பேச்சின் புத்தகம்...

**அல்லிநகரம் தாமோதரன்**

டாம் வகுப்பில் சேர்ந்து விட்ட பூரிப்பில் பேச்சி சிரிப்பது போலக் கேட்டது பவளாயிக்கு. எண்ணி முடித்த போது அறுநூறு ரூபாய்க்கு மேல் வசூலாகியிருந்ததை அறிந்து தாய் - மகள் இருவருக்கும் தாள முடியாத திக்திப்பு. அதை துணிப்பை ஒன்றில் போட்டு முடிந்து கொண்டிருந்தபோது தான்,

'சேத்தாண்டி வேஷம் போட்டு காணிக்க வாங்குன காசுகளைக் கணக்குப் பாத்திட்டு இருக்கிங்களாக்கும்?' என்றபடி எதிர்த்த வீட்டு ராக்காயிக் கிழவி ஒரே சிறிய உறையை மட்டும் கொண்ட அந்த வீட்டுக்குள் நுழைந்து அவர்களது அருகில் உட்கார்ந்தாள்.

''ஆமா பாட்டி'' - பவளாயி சொன்னாள்.

"அது சரி. இந்தப் பணத்துல கோயிலுக்கு என்ன நேர்த்திக்கடன் பண்ணப் போறீங்க?"

''என்னது...? கோயிலுக்கா? எம்புள்ள படிப்புச் செலவுக்குத்தான் இந்தப் பணம்'' என்றாள்.

உடனே குபுக்கென்று கிழவி வெடித்தாள். ஏதோ திருடனைக் கண்டுவிட்டது போன்று திடுக்கிட்டுப் பதறினாள். "அச்சச்சோ ஆத்தா பேரைச் சொல்லி காணிக்க வாங்குன காசை வீட்டுச் செலவுக்கு வைக்கக் கூடாது. அப்படிச் செஞ்சா ஆத்தா காலு கைய மொடமாக்கிடுவா... இல்லேன்னா, கண்ணைக் கெடுத்துருவா. வசூல் பண்ணுன காசுல பொங்கல் வைச்சுக் கும்புடு; இல்லேன்னா குத்து விளக்கு, சூலாயுதம்னு ஏதாச்சும் பொருள் எடுத்து கோயிலுக்குக் கொடுத்து புண்ணியம் கட்டிக்கோ'' என்று எச்சரித்து விட்டுப் போனாள்.

அப்போதே கோபுரமாய் இருந்த பேச்சியின் படிப்புக் கனவு, குட்டிச்சுவர் போலக் குன்றி, சிதிலமடைந்தது.

இரண்டு வாரங்களுக்கு முன்பு தான், பேச்சியின் ஏழாம் வகுப்புத் தேர்வு முடிவு 'தேர்ச்சி' என்று தெரிந்திருந்தது. 'தேர்ச்சி' பற்றிய மகிழ்ச்சி

வீட்டில் ரொம்ப நேரம் நீடித்திருக்கவில்லை. அடுத்து எட்டாம் வகுப்புக்குள் நுழைய, நோட்டுப் புத்தகம் வாங்கப் பணமில்லை. பவளாயியின் தீப்பெட்டிக் கம்பெனிக் கூலி வேலையின் சொற்ப வருமானத்தில் அன்றாடம் சாப்பிட்டு ஜீவிப்பதே பெரும்பாடு. ஆனாலும் பேச்சியைப் படிக்க வைத்தே தீருவது என்று வைராக்கியம் வைத்தாள்.

ஐந்தாறு மாதங்களுக்கு நோய்வாய்ப்பட்டு தனது கணவன் இறந்து போயிருக்க, விதவைப் பெண்களுக்கான மாத நிவாரணம் கேட்டு அரசுக்கு மனுப் போடுவதற்காக, தாசில்தார் அலுவலகத்தில் கையெழுத்து வாங்கச் சென்றிருந்தபோது மனுவை அந்த அலுவலகத்திலுள்ள ஊழியர்களிடம் நிரப்பித் தரும்படி கோரினாள். எழுதப் படிக்கத் தெரியாத தன்னிடம் ஏளனமாய் நடந்து கொண்டு அலட்சியம் செய்த அலுவலர்களின் வக்ரம், மனசில் வடுவாய்ப் படிந்து போயிருந்தது. பக்கத்து வீட்டு ஜானகியின் மகள் குடிகாரக் கணவனால் அடித்து விரட்டி விடப்பட்டிருக்க, சில மாதங்களுக்கு முன் ஆசிரியைப் பயிற்சி முடித்திருந்த அந்தப் பெண்ணுக்கு வேலை கிடைத்து தன் சொந்த பலத்தில் நிற்கத் தயாராகி விட்ட அவளை நினைக்கையில், கல்வியின் அருமை கற்கண்டாய் இனித்தது பவளாயிக்கு. எப்படியும் பேச்சியைப் படிப்பாளியாக்கிவிட வேண்டும் என்ற எண்ணம் நாளுக்கு நாள் ஏறுமுகமாகவே இருந்தது.

பேச்சியைப் பற்றிய சிந்தனையிலேயே, இரண்டு தினங்களுக்கு முன்பு, கோவில் திருவிழாவுக்காகப் போடப்பட்ட பிரம்மாண்டமான கொட்டகையின் வழியாக பவளாயி நடந்து வந்த போது, கோவிலுக்கு அருகில் சிலர், திருவிழாவில் யார், யார் எந்தெந்த வேஷம் போடுவது என்பது பற்றி விவாதம் பண்ணிக் கொண்டிருப்பது அவளது செவிகளில் விழுந்தது.

வேகமாய் வீட்டுக்குப் போன பவளாயி, பூரிப்புடன் கூப்பிட்டாள் 'பேச்சி இங்க வாடீ.'

"என்னம்மா?"

"நாளைக்கு ஆரம்பிக்கப் போற முத்தாலம்மன் கோவில் திருவிழாவுல நீ சேத்தாண்டி வேஷம் போடு. கடைகள்லேயும், திருவிழாக் கூட்டத்துலேயும் 'காணிக்கை' வசூல் பண்ணு. நானூறு, ஐந்நூறுன்னு சேந்துடும். அந்தப் பணத்துல பள்ளிக்கூட ஃபீஸ் கட்டி, நோட்டுப் புத்தகமும் வாங்கிக்கிறலாம். உன் படிப்பும் தொடரும்" என்று கூறினாள்.

பேச்சி, 'நெசமாவா அம்மா?' என்று வியப்புடன் கேட்டு பரவசப்பட்டாள்.

குளத்தில் களிமண்ணை எடுத்து வந்து பேச்சியின் உடலெங்கும் பூசினாள் பவளாயி. பின், அவளது தலையிலும் இடுப்பிலும் ரிப்பன் கட்டி, அதில் கோழி இறகு, வேப்பங் குலைகளைச் சொருகினாள். பக்கத்து வீட்டுக்காரரிடம் இரவல் வாங்கிய மாட்டுச் சலங்கையை இடுப்பில் கட்டி விட்டாள். அப்புறம் மண் கலையம் ஒன்றைக் கையில் கொடுத்து கோவிலை நோக்கி அவளை அனுப்பி வைத்தாள். பேச்சிக்குப் பின்னால் பெரிய சிறுவர் கூட்டமே குதித்தபடி போனது.

அவள், கடைகளிலும், பந்தலில் இருந்தவர்களிடமும் வசூல் செய்தாள்.

கோவில் பந்தலில் நிரம்பி வழிந்த உள்ளூர், வெளியூர்ப் பக்தர்களும், கடைக்காரர்களும் பேச்சியின் கைகள் ஏந்திப் பிடித்திருந்த மண் கலையத்தில் தாராளமாய் சில்லரைக் காசுகளைப் போட்டு அவளைப் பூரிக்கச் செய்தார்கள்.

அறுநூறு ரூபாய்க்கும் மேல் கோவில் திருவிழாவில் வசூலான சில்லரைக் காசுகள்!

'**சா**மி பேரச் சொல்லி எடுத்த பணத்த கோயில் காரியத்துக்கே செலவழிச்சிடலாம். துடியான தெய்வம்...' என்று கிழவி சொன்ன தன்பேரில் சில்லரைக் காசுகளை பவளாயி துணிப்பையில் கொட்டி முடிந்து வைத்துக் கொண்டிருக்க, 'வேண்டாம்மா. நா ஸ்கூலுக்குப் போகணும். யூனிபார்ம் டிரஸ், நோட்டுப் புத்தகம் வாங்கணும். அதுக்கு இந்தப் பணத்தை வெச்சிக்கிறலாம்' என்று அழுது அடம்பிடித்து பின் தன்னிடம் அடி வாங்கியபடி, சாயங்காலம் சாப்பிடாமல் தூங்கி விட்டிருந்த பேச்சியைப் பார்த்துப் பார்த்துப் பரிதவித்தபடி இருந்தாள், பவளாயி.

'சாமி குத்தம் நமக்கு வேணாம்' என்று சிந்திக்கிற அதே வேளையில், படிக்காததால், தான் வேலை பார்க்கும் தீப்பெட்டிக் கம்பெனியில் பேச்சியின் வயசையொத்த குழந்தைகள், தீக்குச்சி அடுக்கி எதிர்காலத்தை இழந்த கோரங்கள் நெஞ்சுக்குள் நஞ்சாய்க் கசக்கிறது. 'பாவம்... பேச்சி. அவளும் இந்த வயசுலேயே அந்தக் கதிக்கு ஆளாகணுமா? மூளைக்குள் குத்திக் கேட்கும் ஆயிரமாயிரம் ஊசி முனைக் கேள்விகள்.

காலையில் கோயிலுக்குப் போனாள். பூசாரியிடம் நிலைமையைச் சொன்னாள். அம்மனை ஒருமுறை வணங்கி விட்டுத் திரும்பிய பூசாரி, "ஆத்தா காசு நல்லதுக்குப் பயன்படுதுன்னா, ஆத்தா ஒண்ணும் செய்ய மாட்டா. அவளைக் கும்பிட்டுட்டு உன் புள்ளை படிப்புச் செலவுக்கே இதைக் கொண்டு போம்மா" என்றார் பூசாரி.

இந்த வார்த்தையை அவள் எதிர்பார்க்கவில்லை. மனத்தில் உற்சாக மின்னல்கள். இரு கைகளையும் இணைத்து 'அம்மா' என்று கும்பிட்டு விட்டு நடந்தாள்.

"ஏண்டி... பவளாயி, அந்தக் காசுகள வெச்சு கோயிலுக்கு ஏதாச்சும் பொருள் எடுத்து வெக்கப் போறியா... இல்லேன்னா... – கேட்டுக் கொண்டே வீட்டுக்குள் வந்தாள் ராக்காயி கிழவி.

அவ்வளோதான்! வெகுண்டெழுந்து நின்றாள் பவளாயி! "எதுக்கு குடுக்கணும்?




"ஜோக் எழுத்தாளர்னா இப்படியா?"
"என்னவாம்?"
"வாசல்ல காலிங் பெல் வைக்காம கதவுல 'பலமாக சிரிக்கவும்'னு எழுதி வச்சிருக்கார்!"
– அம்பை தேவா

என்புள்ள உடம்பெல்லாம் சகதியப் பூசி வசூல் பண்ணின காசு அது. அது என் புள்ள பேச்சியோட படிப்புக்குத்தான் பயன் படுத்தப் போறேன். துடியான தெய்வம் கண்ணைக் கெடுக்காது! கல்விக் கண்ணில்லாம அறிவுக் குருடியா இருக்கிறதும் தெய்வத்துக்குச் சம்மதமில்லே..." குண்டு வெடிக்கிற வார்த்தைகள்!

நடுங்கிப் போனாள் ராக்காயி கிழவி. நிமிஷப் பொழுதும் தாமதிக்காது நழுவி வெளியேறினாள்.

பவளாயியின் வெடிப்புக் குரலில் விழித்துக் கொண்ட பேச்சி, வேகமாய் எழுந்து வந்து அவளை இறுகக் கட்டிக் கொண்டாள். ●



# அலைபாயுதே

மெடிக்கல் காம்ப்பிற்காக சென்றிருக்கும் ஷாலினியை கானனூரில் போய் பார்ப்பதற்கு, மாதவன், அம்மாவை பணம் கேட்டு கெஞ்சிய அடுத்த செகண்ட் அம்மா பொய் சிணுங்கலோடு நோட்டுக்களை எண்ணி கொடுத்ததும் தியேட்டரில் பின் ஸீட்டிலிருந்த ஒரு இளவட்டம் புலம்பியது- ச்சே, நமக்கெல்லாம் ஏன்டா இப்படி ஒரு அம்மா சிக்க மாட்டேன்றாங்க? (அப்பனே, அம்மாக்கள் கூடவா 'சிக்க' வேண்டும்?) ஆனால் சும்மா சொல்லக்கூடாது. தியேட்டர் முழுவதும் அடிடாஸ் டீ-ஷர்ட்டும் ரஃப் அன்டஃப் ஜீன்ஸும் பங்க் பர்சனாலிட்டிஸும், படம் ஆரம்பிக்கும் முன்பே ஒரு மணிரத்னம் அட்மாஸ்ஃபியர் உண்டாகி விடுவது வாஸ்தவம்!

மனசெல்லாம் காதலை ரொப்பிக் கொண்டு வாயளவில் வியாக்யானம் பண்ணிக்கொண்டு கண்ணில் தெரியும் ஏக்கத்தை மறைக்கத் தெரியாமல் முழித்துக் கொண்டு ஷாலினி-வெல்டன்!

டிரெயின் இடுவலில் ஷாலினியை தேடுவதும் கண்ணில் பட்டவுடன் 'பளிச்' என்று ஒரு சிரிப்பு சிரிப்பதும் இப்படியே படம் முழுவதும் ஓட்டிவிடுவாரோ மாதவன் என்று பயம் ஏற்பட்டாலும் ஷாலினி தலைமாட்டில் உட்கார்ந்து உருகி நம்மையும் உருக்கி விடுகிறார்.

"சிகரெட் பிடிக்கிறது தப்பில்லே ஆனால் அதை உன்னோட காசில் வாங்கிப் பிடிடா!" என்று சம்பாதிக்காத மாதவனை சதாசர்வகாலமும் நோண்டிக் கொண்டிருக்கும் அப்பா காரெக்டர் வெரி இன்டரெஸ்டிங்.

திருட்டுக் கல்யாணம் முடிந்து வீட்டிற்கு திரும்பும் வழியில் த்ரில் தாங்க முடியாமல் ஸ்வர்ணமால்யாவும் ஷாலினியும் ஒருவரை ஒருவர் பார்த்து கிகிள் பண்ணிக் கொண்டே இருப்பது ரொம்ப ச்சூட்.

விவேக் ஸார்! ஹீரோக்களையே ஸைடு-லைன் பண்ணும் அளவிற்கு 'காமெடி ட்ராக்'கில் தூள் கிளப்பிக் கொண்டிருக்கும் நீங்கள் மணிரத்னம் படம் என்ற ஒரே காரணத்திற்காக இப்படி ஒரு உ.ச. ரோலில் நடிக்க சம்மதித்தீர்களாக்கும்! கிளாமருக்காக ஹவாயன் ஸ்டைலில் ஒரு பாட்டு. ஓ.கே. ஆனால் 'லீட்' செய்யும் அழகி முதிர்ச்சியாக தனியாக தெரிகிறாரே? அரியர்ஸ் கேஸாக இருக்கலாம் என்று சமாதானப்படுத்திக் கொள்ள வேண்டியது தானோ?

காதலர்கள் திருமணம் பண்ணிக் கொண்ட உடன், 'காதல்' என்கிற 'ஃபான்டஸி'யிலிருந்து மீண்டு யதார்த்தத்தை ஃபேஸ் பண்ண வேண்டிய சூழ்நிலையில் ஃபிரிக்ஷன் எப்படி ஆரம்பிக்கிறது என்பதை இதைவிட அழகாகச் சொல்ல முடியாது. அதே மாதிரி குஷ்பு-அரவிந்த்சாமி ஜோடியின் அந்நியோன்யத்தை ஆழமாக காண்பித்து 'ஃபிரிக்ஷன்'ஐ எப்படி ஓவர்கம் பண்ண வேண்டும் என்பதையும் இதைவிட தெளிவாகச் சொல்ல முடியாது.

திருட்டுக் கல்யாணம் முதற்கொண்டு ஷாலினிக்கு உடந்தையாக இருக்கும் அக்கா, ஷாலினி வீட்டை விட்டுப் போனதும் டபக்கென்று அவளோடு உள்ள தொடர்பை முறித்துக் கொள்கிறாரே, மணிரத்னம் ஸார், போயும் போயும், உங்கள் படத்தில் லாஜிக் இடிக்கலாமா?

— கிருஷ்ணா சிதம்பரம்

# வட்டமேஜை

✉ மண்டையில் ஏறாத, "பல்நோக்கு சிந்தனைச் சிற்பி சுமியே, நீ கெஸ்ட் ரைட்டரா மாறியதை மறுபரிசிலனை செய்க மீண்டும் வாரா வாரம் வந்து தரிசனம் தா! அறிவுக் கண்ணைத் திற!

திருநெல்வேலி – 7, எஸ். சுந்தர்.

✉ முகமது கவுஸின் முருகபக்தி அளவிலா வியப்பை அளித்தது. ஆனால் தமது உறவின ரானாலும் தன்னை அந்நியப்படுத்தும் இந்துக்களாலும் அவர் பந்தாடப்படுகிறார் என்றதும் வியப்பு வேதனையாக மாறியது.

திருவண்ணாமலை, ஆர்.ஆர். சாமி.

✉ சுண்டல் சிறுவர்களிடம் இவ்வளவு சுவையான சமாசாரங்களா! வாழத் துணிந்தவர்களுக்கு வாழ்க்கை ஒரு கை சுண்டல் அளவுதான் என்பதில் ஐயமில்லை!

வெண்ணந்தூர்,
வ. வையாபுரி.

✉ 'ஜெயடேட்டா!' படித்தேன். ஜெயாஸ்ரீ பற்றி நாங்கள் தெரிந்து ஆகப் போவதென்ன? ஒரு அறிமுக நடிகையை விளக்கப்படுத்த வேண்டியது தான். அதற்காக இப்படியா? டூ மச்!

மொரட்டுப்பாளையம்,
க. நா. இராஜேஸ்வரன்.

✉ 'ஜெயடேட்டா'வில் ஒவ்வொரு பதிலுக்குப் பிறகும் பிராக்கட்டில் வால் பையன் செய்திருந்த கமெண்டை வெகுவாக ரசித்தேன். எனவே ஜெயாஸ்ரீக்கு பர்ஸ்ட் கிளாஸும், வால்பையனுக்கு டிஸ்டிங்ஷன் மார்க்கும் கொடுத்து விட்டேன்.

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ புத்தாண்டு தின திரைப்படங்களின் ட்ரெய்லரும் அதற்கு கல்கி தந்த கமெண்டுகளும் ரசிக்கும்படி இருந்தன.

நெய்வேலி, சாந்தி சுந்தர்.

✉ தலையங்கத்தில் பில் கிளிண்டனின் இந்திய விஜயம் பற்றிய தங்கள் விமர்சனத்தின் இறுதியாகத் தாங்கள் இந்திய அரசின் விழிப்புணர்வை ஊக்குவித்து ஒரு 'ஷொட்டு' கொடுத்திருப்பது முத்தாய்ப்பாக உள்ளது. இந்திரா காந்தியின் காலத்தில் ரஷ்யா நமது பாதுகாப்பினை உறுதிப்படுத்தியது போல இன்றைய சூழ்நிலையில் அமெரிக்காவின் பக்கபலத்தை இராஜதந்திர முறையில் பயன்படுத்திக் கொள்வதே நாட்டிற்கு நன்மை பயக்கும். ராஜாஜி இன்று இருந்தால் எதைக் கூறுவாரோ அதனையே 'கல்கி' பிரதிபலித்துள்ளது!

நீடாமங்கலம், நீ.சு. பத்மநாபன்.

**'முதல் மழைத்துளி' பற்றி வாசகர்கள்...!**

• பிரபஞ்சனின், 'முதல் மழைத் துளி' அற்புதமான படைப்பு. பாரதிக்கும், அரவிந்தனுக்கும் இடையே ஏற்பட்ட நட்பை இறுதிவரை அதன் இயல்பு கெடாமல் கொண்டு சென்றிருப்பது சிறப்பு.

மயிலாடுதுறை, எல். துர்காதேவி.

• அரவிந்தன், பாரதி பாத்திரப் படைப்புகள் என்றென்றும் மறக்க முடியாதவை. 'உண்மையான சிநேகத்தை அடையறது, பெரிய வரம். அது கிடைச்சுட்டா, எல்லாமும் கிடைச்ச மாதிரி தான்...' என்ற வரி ஒவ்வொரு மனத்திலும் கல்வெட்டாகப் பதிந்திருக்கும்.

சென்னை – 94, வெ. பாண்டுரங்கன்.

• முதல் மழைத் துளி என்ன ஒரு சுகமான அனுபவம்! இதமான சாரல் மழை விழும் ஒரு மென் காலைப் பொழுதில், குற்றால அருவியில் நின்று, நிதானமாகக் குளித்ததைப் போன்ற ஒரு பரவசம்! ஆசிரியருக்கு நெஞ்சம் நிறைந்த பாராட்டுக்கள்!

மதுரை – 10, கணியூர் சீனிவாசன்.

• பிரபஞ்சனின் கதாபாத்திரங்கள் பாரதி, அரவிந்தன், வைதேகி, லலிதா போன்றவர்கள் லட்சியவாதிகளாக, சற்று யதார்த்தத்திற்கு புறம்பானவர்களாகத் தோன்றினாலும், இவர்களைப் போன்றவர்களும் உலகில் நம்மிடையே அங்கங்கே இருப்பார்கள் என்ற நினைவே நிறைவைத் தருகிறது. இருக்க வேண்டும் அதுதான் பிரபஞ்சனின் ஆசை. நமது ஆசை!

சென்னை – 20, ஜி. சுவாமிநாதன்.

சிங்கப்பூர்க்காரரான சுதேஷ் ஐயருக்கும் கலர் கலரான டெலிவிஷன் கனவுகள்! அமெரிக்க நண்பர் ஸாமுடன் சேர்ந்து, சிந்தனைகளை ஒருமுகப்படுத்தினார். ஃபிலிம் இன்ஸ்டிட்யூட்டில் பயின்று, சினிமா, விளம்பரப்படம், குறும்படம் என ஏற்கெனவே படத் தயாரிப்பில் ஈடுபட்டிருந்ததால், 'எண்டர்டெயின்மெண்ட் மீடியா' அவரை பயமுறுத்தவில்லை. வங்கியாளர், கணிப்பொறி வல்லுனர், திட்டக் கமிஷன் உறுப்பினர் என வெவ்வேறு துறைகளிலிருந்த தம் நண்பர்களை இணைத்து, ஒரு குழுவாகத் திரட்டி, புதியதொரு டெலிவிஷன் சானலை இந்தியாவில் அறிமுகப் படுத்தத் தீவிர திட்டங்கள் தீட்டினார்.

சிங்கப்பூராருக்கு இந்தியாவில் ஈர்ப்பு ஏற்பட அடிப்படைக் காரணம், பிறப்பால் அவர் ஒரு தஞ்சாவூர் தமிழர் என்பதே! சுப்ரமணியன் என்ற இயற்பெயர் உடையவர்கள், சாதாரணமாக 'மணி'யாகத்தான் சுருங்குவர். ஆனால் இவர் டில்லியில் படித்துக் கொண்டிருந்தபோது, ஒரு ஜெர்மன் ப்ரொஃபசர் இவர் பெயரை 'submarine' என்று உச்சரிக்க, வகுப்பே சிரிப்புக் கடலில் மூழ்கியதாம்! வெறுத்துப் போய், இவர் நண்பர்களை ஆளுக்கொரு பெயர் எழுதித் தரச் சொல்லி, ஒரு கூடையில் போட்டு குலுக்கி எடுத்ததில், வந்த பெயர்தான் சுதேஷ்!

பிஸினஸில் இவர் இறங்கிய சமயத்தில் 'சோனி' டெலிவிஷன்காரர்கள் இந்தியாவில் காலூன்ற, சரியான துணை தேடி வலை வீசிக் கொண்டிருந்திருக்கிறார்கள். டாட்டாஸ், ஹிந்துஜாஸ், தப்பார்ஸ் என்று, தமக்கு சமமான இந்தியத் தொழில் சாம்ராட்டுகளுடன் பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருந்திருக்கின்றனர். தங்கள் தொழில் ராஜ்ஜியத்தின் பிரம்மாண்டத்தைப் பற்றி மட்டுமே அவர்களால் பேச முடிந்ததே தவிர, தொலைக்காட்சித் துறையின் நுணுக்கங்களைப் பற்றி அவர்கள் ஒன்றுமே அறிந்திருக்கவில்லை.

அந்தச் சமயத்தில்தான், சுதேஷ் ஐயர் தம் குழுவினருடன் பிரவேசித்திருக்கிறார்! இவர்களிடம் இருந்தது தொழில் அறிவு, இந்தியக் கலாசாரத்தை ஒட்டிய தெளிவான திட்டம், கைவசம் 500 படங்கள், கொஞ்சம் முதல். அவர்களிடமிருந்தது 'ஸோனி' என்ற 'பெத்த' பெயர்; ஒப்புயர்வற்ற டெக்னாலஜி, ப்ளஸ் ஓரளவு பணம். உலகம் முழுவதுமாக ஸோனிக்கு 15-18 சானல்கள் இருந்தாலும் அதுவரை பெரிய அளவில் பணம் பார்க்கவில்லை.

இந்த இருவரும் ஒரே மேஜையில் எதிரெதிராகச் சந்தித்தபோது தத்தமது 'சொத்து'க்களைப் பரிமாறிக் கொண்டனர். எல்லாமாக உருண்டு திரண்டு, 'ஸோனி'- எண்டர்டெய்ன்மெண்ட் டெலிவிஷன் இந்தியாவாக உருவெடுக்கும் சாத்தியக்கூறுகள் பனிச்சிட்டதும், இருவருமே கைகுலுக்கிக் கொண்டனர்.

• சுஷ்மா ஸ்வராஜுடன் சுதேஷ் ஐயர்

முதலில் பத்து கோடிகள் போட்டதாகச் சொல்கிறார் சுதேஷ்; ஆனால் எல்லோருமே, முதல் எட்டு வருடத்துக்கு, லாபத்தை கனவில் கூடக் காண முடியாது என்பதை எதிர்நோக்கியே, மனோதிடத்துடன் களத்தில் இறங்கினார்களாம்.

நினைத்ததற்கு மாறாக, இரண்டாவது வருடமே போட்ட முதலெல்லாம் திரும்பக்

கிடைத்து, லாபமும் வரத் தொடங்கியிருக் கிறது. ஆரம்பித்த ஐந்து வருடங்களில் பல்கிப் பெருகி, நூறு கோடிகளைத் தொட்டுவிட்ட மகிழ்வில் பூரிக்கின்றது இந்திய ஸோனி டீ.வி.

இந்த வெற்றிக்கு அடிப்படைக் காரணம்?– ''கமிட்மெண்ட் டு பிஸினஸ்'' என்கிறார் சுதேஷ்.

''எப்பாடுபட்டாவது தரமான நிகழ்ச்சி களையே தருவோம் என்று சத்தியப் பிரமா ணமே எடுத்துக் கொண்டோம். பழைய சினிமாக்களை நீங்கள் மற்ற சானல்களில் பார்க்கும்போது ஒரு மழை பெய்யுமே? ஸோனியில் அதெல்லாம் புத்தம் புதுசு போலிருக்கும். DVNR(Digital Video Noise Reduction) முறையில், பிரத்யேக ஸாஃப்ட்வேரின் உதவியுடன், சிறு புள்ளிகள், இரைச்சல், சொரசொரப்பு எல்லாவற்றையுமே நீக்கி விடுவோம். இதற்காகும் செலவு கொஞ்சநஞ்ச மல்ல. ஒரு படத்துக்கு 5000 டாலர்களாகும்.

''இன்று, பெட்ரூமில் வசதியாக அமர்ந்து கொண்டு, விரல் நுனியில் சானல்களை விரட் டிக் கொண்டிருக்கும் ஆடியன்ஸை, 'ஸோனி' யில் நிறுத்தி வைக்க வேண்டுமானால், பழைய படங்களையும் கண்ணுக்குக் கவர்ச்சியான விதத்தில் தர வேண்டுமல்லவா? அலை பாய்பவர்களை நிறுத்தத்தான் இவற்றுக்குத்தான் விளம்பரங்கள் நிறைய கிடைக்கும் என்பதால் அதற்கு முக்கியத்துவம் கொடுத்தாலும், குடும்பத்தோடு எல்லோரும் பார்த்து ரசிக்க அவ்வப்போது புதுமைகளைப் புகுத்துவதில் முதலிடம் எங்களுக்குத்தான்.

''காமெடிகளின் நிலை மிகவும் ட்ராஜடி யாக மாறி வருகிறதே...!'' என்று சுரேஷிடம் கேட்டால்,

''இயற்கையிலேயே இந்தியர்கள் சீரியஸா னவர்கள்'' என்று 'தற்காத்து'க் கொள்கிறார். அமெரிக்கர்கள் ஆர்ப்பாட்டமானவர்கள்; ஆப்ரிக்கர்கள் ஆடல் பாடலில் மன்னர்கள். அது போல் இந்தியர்கள் சிந்தனையாளர்கள். காமெடி செய்வது கஷ்டமானது; ஒரு காத லிக்க நேரமில்லைக்குப் பின் தரமான மற் றொரு நகைச்சுவைப் படம் வர எத்தனை காலம் ஆயிற்று?'' என வினவுகிறார்.

'அதாவது... நாம் இயற்கையிலேயே உம்மணாமூஞ்சிகள் என்கிறாரா?'

''அப்படியில்லை; 'இந்த' காமெடிகளுக்கே விழுந்து விழுந்து சிரிக்கக்கூடியவர்கள் இருக் கிறார்கள் – 'தேக் பாய் தேக்' அமோக வர வேற்பைப் பெற்றது – சாதாரணமாக, பிரச்னை யில்லாதவர்கள்தான் வாய் விட்டுச் சிரிப்பார்கள். நம் நாட்டில் பிரச்னைகள் அதிகமென்பதால் நம்மால்

# ஐந்து வருடத்தில் நூறு கோடி!

வெளிக் கவர்ச்சி; நிதா னித்துப் பார்க்க வைப் பதற்கென்று உட் பொருளும் கருத்துள்ளதாக அமைக்கப் பாடு படுகின்றோம்.

''ஆஹத், (திகில் தொடர்), பூகி பூகி (இந்தி இல்லானா இல்லானா), மூவர்ஸ் & ஷேக்கர்ஸ் (நையாண்டி தர்பார் டைப்) போன்றவை எல் லாம் ஸோனிக்குப் பெருமை சேர்த்த நீண்ட கால நிகழ்ச்சிகள். எங்களைப் பார்த்து காப்பி யடித்தவர்கள் பலர்'' என்கிறார் சுதேஷ்.

**சி**னிமாவும், கிரிக்கெட்டும்தான் நம் நாட் டில் பார்வையாளர்களை ஈர்க்கும் காந்தங்கள். சிரிக்க முடிவதில்லை'' என்று சோனி யின் 'நகைச்சுவை' நாடகங்களுக்கு வக்காலத்து வாங்குகிறார்.

''இன்று சானல்களைப் பொறுத்தவரை, 'ஸ்டார்' மிகவும் 'அப்மார்கெட்' வகை; ஜீ படு ஜனரஞ்சக ரகம்; ஸோனி இரண்டுக்கும் இடைப்பட்ட இடத்தைப் பிடித்திருக்கிறது. அதாவது, ஜனரஞ்சகமான விஷயங்களை ஒப்பனைப்படுத்தி, மெருகூட்டி, ''ஸோஃபிஸ்டி கேடட்'' ஆக தரும் வழியைக் கையாள்கிறது. இன்று 'ஜீ'யை விட எங்கள் டி.ஆர்.பி ரேடிங்தான் அதிகம்'' என்கிறார் தன்னம்பிக்கை ஒளிர.

— ஜெயஸ்ரீ ராஜ்

## சோனி டீ.வி.யின் வெற்றிக் கதை

## தங்கச்சங்கிலி பரிசுங்க!

**இத் தொடர் கதையை வாரம் ஒரு எழுத்தாளர் என்று பத்து எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். நீங்கள் செய்ய வேண்டியது இதுதான். கவனமாகப் படித்து வாருங்கள். கடைசி வாரத்தில் கேள்வி ஒன்று உங்களுக்காகவே தயாராக இருக்கிறது. சரியாக பதிலளிப்பவர்களுக்கு பரிசாகக் காத்திருக்கிறது தங்கச்சங்கிலி! பலர் சரியாக எழுதியிருந்தால் வழக்கமான குலுக்கல் முறைதான்! ஓ.கேவா? இப்போது படியுங்கள் கதையை!**

# 2

அசோக்குக்கு ஆத்திரமாக வந்தது.

எவன் ஏற்படுத்திய ஸிலபஸ் இது? அமால்கமேஷன், அரிசி ரேஷன் என்று வாய்க்கு வந்தபடி கணக்கைக் கொடுத்து ஏன் கழுத்தை அறுக்கிறார்கள்? அப்பா கடையில் 'யாவாரத்துக்குத்'தான் கடைசியில் உட்காரப் போகிறான் என்றால் இந்த டபிள் என்ட்ரி அக்கவுண்டிங்கால் என்ன புண்ணியம்? இப்போது டபிள் என்ட்ரி அவன் மண்டையில் நோ என்ட்ரி.

புத்தகத்தைத் தூக்கி ஜன்னல் வழியே எறியலாம் என்றாலும் முடியாது. ஜன்னல் கம்பிகள் வழியே புத்தகம் நுழைந்துவிடாது. அவ்வளவு பருமன். மூன்று புத்தகங்களை அடுக்கி அதன் மேல் நின்றால் வெங்கடா ஜலபதியைப் பார்த்துவிடலாம்.

ஜன்னலுக்கு வெளியே மாமரக்கிளை தெரிந்தது. கிளையில் அமர்ந்து மூக்கோடு மூக்கு உரசிக் கொண்டிருந்த ஜோடிக் கிளிகளைப் பார்த்ததும் அசோக் புத்தகத்தில் தடுக்கி விழுந்து ஜன்னல் கம்பியைப் பிடித்துக்கொண்டான்.

'ஹலோ அசோக்... ஹலோ அன்புச் செல்வி...' என்று ரகசியமாகக் கூப்பிட்டுப் பார்த்தான்.

ஒரு கிளி மட்டும் திரும்பிப் பார்த்தது. 'உன் அதிர்ஷ்டம் - கெட்ட பெயரை வைத்து என்னை அவமானப்படுத்தாதே' என்பதுபோல் அது முகத்தைச் சுளித்தது.

'அன்பு, பார்த்தாயா அன்பு? என் ஷூவுக்குள் வைத்து அடைத்து விடலாம் போல இருக்கும் இந்தக் குட்டிப் பிசாசுகள் எவ்வளவு சுதந்திரமாக மூக்கோடு மூக்கை தீட்டிக்கொண்டிருக்கின்றன. எனக்கும் உனக்கும் சிறகு வைக்காத பிரம்மாவை எங்கே பார்த்தாலும் சதாம் உசேன் கிச்சனுக்குக் கடத்த வேண்டும். ஆதாம் ஏவாளுக்கு நடுவில் இப்படித்தான் ஹாஸ்டல் சுவர்களை எழுப்பினார்களா என்ன?

நமக்கு மட்டும் ஏன் இந்த ஓரவஞ்சனை? ஓரவஞ்சனை கூட இல்லை. இது நடுவஞ்சனை.

அவனுடைய பொறாமைப் பார்வை பொறுக்காமல் கிளிகள் பறந்து வேறு கிளையில் போய் உட்கார்ந்தன. அந்தக் கிளை தாழ்ந்து ஆடியபோதுதான் அசோக் கவனித்தான். இவை வெறும் கிளிகள் இல்லை. கடவுள் அனுப்பி வைத்த செய்திக் குறிப்புகள்.

'மாங்கா மடையா, தேங்கா தடியா, அக்கவுண்டன்ஸிதான் வரவில்லையென்றால் உன் வறண்ட மூளையில் ஐடியா கூடவா வராது? ஹாஸ்டல் சுவரும் ஹாஸ்டல் கேட்டும்தானே தடை? இந்த மாமரக் கிளைகளின் வழியே நீ நடுத்

**அனுராதா ரமணன்**

தெருவுக்குப் போய்விடலாமே, கவனிக்க வில்லையா?

'அன்பே அன்பான எனக்கே எனக்கான' அன்புவிற்கு மறுநாள் வைத்த கடிதத்தில் இந்த விஷயத்தை எழுதினான். அதற்கு அடுத்த நாள் ராக்கெட் வேகத்தில் பதில் வந்தது.

'எப்படியாவது என் ரூமுக்கு வந்து விடு. நாம் இருவரும் சேர்ந்து மாமரம் வழியே வெளியே போய் விடலாம் என்ற உங்கள் கடிதம் பார்த்து முப்பது நிமிடம் அழுதேன், முப்பது நிமிடம் சிரித்தேன். எப்படியாவது உங்கள் ரூமிற்கு வருகிற மாதிரி முன்யோசனையுடன் லேடீஸ் ஹாஸ்டலில் யாரும் பனைமரம் வளர்க்காததால் அந்த வழியைக் கைவிட வேண்டியிருக்கிறது. அந்த மல்ட்டி பர்பஸ் மரக்கிளையின் வழியே நீங்கள் நடுத்தெருவுக்கு வந்து விடுங்கள். அங்கே ஆறு மணிக்கு ஆஜராக வேண்டியது என் சாமர்த்தியம்.'

அந்தக் கடிதத்தைப் பற்றி அர்த்தராத்திரியில் செமஸ்டர் எக்ஸாம் வைத்தால் கூட நூற்றுக்கு நூற்றி எண்பது மார்க் வாங்குகிற அளவு மனப்பாடம் ஆகிவிட்டது.

அசோக் றெக்கையில்லாமல் ரூமில் பறந்தான்.

ஆமாம், அன்பு எப்படி வெளியே வருவாள்?

தடாலடியாகக் கடிதம் எழுதி விட்டாளே தவிர அன்புச்செல்வியின் அடி வயிற்றில் மசாலா கொதித்தது.

அவள் திட்டம் பலிக்குமா? ரூம் மேட்டைத் திரும்பிப் பார்த்தாள்.

மங்களநாயகி மல்லாந்துப் படுத்து ஒன்று இரண்டு என்று ஏதோ வாய்ப்பாடு சொல்லிக்கொண்டிருந்தாள்.

"மங்கா என்னடி எண்ணறே?"

"ஷ். நாற்பத்தி ஏழு, நாற்பத்தி எட்டு" என்று மங்கா எழுந்து உட்கார்ந்து கண்ணாடியைக் கழற்றி அதால் இடுப்பைச் சொரிந்துகொண்டே 'மேலே ஃபான் சுத்துதே. ஒரு நிமிஷத்துக்கு எவ்வளவு ரவுண்டு வருதுன்னு பாத்திட்டிருந்தேன்..." என்றாள்.

அப்போதுதான அன்புச்செல்வியைப் பூரணமாகப் பார்த்தாள். "என்னடி அன்பு பட்டுப் பாவாடை நைலக்ஸ் தாவணின்னு ட்ரெஸ்லாம் அமர்க்களப்படுது. வெளியே போறியா?"

"இல்ல குளிக்கப்போறேன்."

"நனைஞ்சுறாது?"

"என் சமர்த்து சர்க்கரைக் கட்டி... கோயிலுக்குப் போறேன்... என் டோக்கனுக்கு சாப்பாடு வாங்கி வைச்சுடு" என்று வெளியே வந்து விட்டாள்.

மங்களநாயகி மறுபடி மல்லாந்து நாற்பத்தொன்பது ஐம்பது என்று எண்ணுவது காரிடார் வரை கேட்டது.

ஹாஸ்டல் கடிகாரத்தில் ஐந்தே முக்கால் என்று நேரம் அழுது வடிந்தது.

அன்புச்செல்வியைப் பார்த்ததும் வாட்ச்மேன் சிங்காரம் பீடியைத் தவற விட்டான்.

"என்னா கண்ணு டயம் பாக்கலை?" என்று இரண்டு கேட்களுக்கும் ஒரே தோடாகத் தொங்கிய பூட்டை மதித்து நின்றான்.



## புலம்புகிறார் டி.ஆர்!

தி.மு.க.வில் டி. ராஜேந்தருக்கு இது போதாத காலம் போலிருக்கிறது. அவரது தொகுதியில் நடந்த உட்கட்சித் தேர்தல்களில் அவரை நம்பி நின்ற ஆட்கள் தோற்றுப் போனார்கள்; காரணம் எதிர்கோஷ்டிக்கு ஸ்டாலின் முழு ஆதரவு கொடுத்ததுதானாம்! பொதுக்குழுவில் ஐந்தாவது வரிசையில் அமர்ந்திருந்த டி.ஆருக்கு எந்த ஒரு தீர்மானத்தையும், முன்மொழியவோ, வழிமொழியவோ வாய்ப்பு கொடுக்கப்படவில்லை. இத்தனைக்கும் அவர் கழகத்தின் கொ.ப.செ.வும் கூட. 'என்னை ஏன் ஒதுக்குறொர்கள்' என்று வேண்டியவர்களிடம் புலம்புகிறார் டி.ஆர்.

— கௌசி

போச்சுரா எடுத்தவுடனே கறாராகப் பேச்சு வந்து விட்டது. அன்புச் செல்வி தன் புன்னகையைத் துருப்புச் சீட்டாக இறக்கினாள்.

"அண்ணே... உங்க பர்மிஷன் இல்லாம நான் விரலைக் கூட வெளியே நீட்டுவேனா?"

அண்ணே என்ற வார்த்தை சிங்காரத்தின் முதுகுத் தண்டை நிமிர்த்தியது. இரண்டு கன்னங்களிலும் கொஞ்சம் சதை கூடுதலாகத் தொங்குகிறது என்பதற்காக அவனை 'புல்டாக்' என்று சூரிதார் சுந்தரிகளும் தாவணி தந்திரிக்ளும் முதுகுக்குப் பின்னால் முனகுவதைக் கேட்டிருக்கிறான்.

அண்ணேவா?

முகத்தில் வெண்ணெயைத் தேய்த்தது போலிருந்தது.

## கவனிப்பாரா அம்மா?



சென்ற பாராளுமன்றத் தேர்தலுக்கு முன் பா.ம.க.விலிருந்து அ.தி.மு.க.வுக்கு சென்ற தலித் எழில்மலைக்கு இன்னமும் அம்மாவின் அருட்பார்வை கிட்டவில்லை. தில்லியில் உள்ள பல தலைவர்களுடன் தலித்துக்கு நல்ல பழக்கம் உண்டு. இதற்குக் காரணம் அவர் அறிந்திருந்த ஹிந்திதான். ஒருசில தகவல்களைப் பெற தலித்தைப் பயன்படுத்தினார் அம்மா. தலைமை கழக நிர்வாகிகளை மாற்றிப் போடும் போது அம்மா தன்னை கண்டுகொள்வார் என்று எதிர்பார்த்தார் தலித். ஏமாற்றம்தான் மிச்சம். 'பேசாமல் த.மா.காவுக்குப் போய் விடலாமா' என்று யோசிக்கத் துவங்கி விட்டாராம். ஆனால் "கொஞ்சம் பொறுங்கள். அம்மா கவனிப்பார்" என்று நண்பர்கள், ஆறுதல் சொல்லி வருகிறார்களாம்.

— வம்பன்

"அண்ணே... ஊர்ல அப்பாவுக்கு மஞ்சக்காமாலை. அதுக்காக தினம் கோயிலுக்குப் போகச் சொல்லி லெட்டர் வந்திருக்கு."

ஐயோ மஞ்சக்காமாலையா? சிங்காரத்தின் அம்மாவை அந்தக் கலர் நோய்தானே விழுங்கி ஏப்பம் விட்டது? சிங்காரத்தின் மீசை தரை பார்த்தது.

"எந்த ஊர்க் கண்ணு?"

"பேரளம். மாயவரத்திலேர்ந்து திருவாலூர் ரோட்ல..."

சிங்காரத்தின் கண்களில் மத்தாப்பு வெடித்தது.

"நம்ம ஊர் கொயந்தியா நீ! ஆமா ராசாத்தி, எனக்கு வழுவூரு."

"அட அண்ணே. எவ்வளவு பக்கம் வந்துட்டோம். ராசப்பேட்டை கோவில் இருக்கு இல்ல. எங்கம்மா அங்க வேண்டிட்டிருக்காங்களாம்."

"ராசப்பேட்டையா?" சிங்காரம் நெற்றிச் சுருக்கினான்.

"நீங்க வழுவூர்தானே அண்ணே?"

"நான்னா நான் இல்ல. என் பொஞ்சாதி அந்த ஊரு. ஆனா ராசப்பேட்டைனு நான் கேள்விப்பட்டதில்லையே...."

"என்னண்ணே இது? பதினெட்டு கை துர்க்கை இருக்கே? அதுதான் மஞ்சக் காமாலைக்கு குலதெய்வம்?"

இருக்கும் என்று சிங்காரம் தலையாட்டினான்.

"அந்த அம்மன்கிட்ட வீட்ல இருக்கற அத்தனை பேரும் கோயிலுக்கு ஒரு கமண்டலம் வரதா அம்மாவோட வேண்டுதல்..."

"மண்டலம்னு சொல்லு கண்ணு."

"மண்டலம்னா நாற்பத்தெட்டு நாளு... கமண்டலம்னா அம்பத்து நாலு நாளு."

"அதென்ன அம்பத்து நாலு நாள் கணக்கு?"

"துர்கைக்குப் பதினெட்டு கை அண்ணே. ஒரு கைக்கு மூணு நாள் வீதம் கணக்கு போடுங்கண்ணே."

"இருபத்தி ஒண்ணுதான வருது?"

"அது கூட்டினா... பெருக்கிப் பாருங்க."

"பத்தொண் பத்து. பத்தெட்டு பதினெட்டு" என்று சிங்காரம் சற்று நேரம் விரல்களால் இசை நடத்தினான்.

''உங்களுக்கு என்ன வேணும், அண்ணே? துர்கை கிட்ட சொல்லிட்டு வரேன்...'' என்று அவன் தலையில் வெண்ணெய் வைத்து விட்டு அன்புச் செல்வி வெளியே வந்தாள்.

அடுத்த நாளிலிருந்து அவனைப் பார்த்தாலே ரேஷன் வாங்கிப் போகிற அளவுக்கு இருந்த பாக் கெட்டிலிருந்து மஞ்சளாய் எலுமிச்சையை எடுத்து நீட்டுகிற தன்மைக்கு சிங்காரம் மாறிப் போனான்.

''அம்மன் காலடில வச்சிரு ஆத்தா'' என்பான்.

அது லெமன் டீக்கும் லைம் ஜூஸிற்கும் தன் உயிரை விடுகிறது என்று ரொம்ப நாட்களுக்கு அவனுக்குத் தெரியாது.



• படத்தில்

## உல்டா ரோலில் ரம்யா!

**'படையப்பா'வில் ரசிகர்களை டென்ஷனாக்கிய நீலாம்பரி கேரக்டரில் நடித்த ரம்யா கிருஷ்ணன் அதற்கு நேர் எதிரான கேரக்டரில் நடித்தால் எப்படியிருக்கும்? 'அம்மன் கோயில் குழந்தை' என்ற படம் அதற்கு விடை சொல்லுகிறதாம்! இதுவரை அம்மா வேடம், பாட்டி வேடத்தில் நடித்து வந்த மஞ்சுளா இந்தப் படத்தில் பக்கா வில்லியாக நடித்திருக்கிறாராம்!**

**— லிங்**

**படம் உதவி: கணேஷ்**

''நீ சொன்னா சரிதான்மா. இப்போ ராசப்பேட்டைக்கா போவப் போறே?''

''இல்லேண்ணே ராயப்பேட்டைக்கு. குடும்பத்துலே இருக்கறவங்க அவங்க ஊர்ல இருக்கற துர்கையம்மனைப் பார்த்தா போதும்னு அம்மா எழுதி இருக்காங்க...''

சிங்காரம் காக்கி பாண்ட் பாக் கெட்டில் கைவிட்டான். பாதி கை வரைக் கும் உள்ளே போயிற்று. வெளியே கை எடுத்தபோது சாவி வளையம்!

கேட் பூட்டைத் திறக்கும் சாவியா இது? அவள் காதல் பூட்டைத் திறக்கும் திறவுகோல்.

''போய்ட்டுச் சுருக்க வந்துரு கண்ணு.''

புரொபசர் மீனா (பட்டப் பெயர் : ரேஸ் குதிரை) மூலம் அன்புச்செல்விக்கும் அசோக்குக்கும் போதாதவேளை சுவ ரேறி குதித்து வந்தது.

பாத்ரூமிலிருந்து வழுக்காமல் வெளியே வரத் தெரியாதவர்களுக்கெல்லாம் ஏன் புரொபசர் பதவி தர வேண்டும்? விழுந்து வாரியதில் அவளுக்குக் குளம்பு பிசகி யது.

24 மணி நேர க்ளினிக்கில் டூட்டி டாக் டரும் நர்சும் தாயம் விளையாடிக் கொண்டிருந்தபோது குறுக்கிட்ட கோபத் திலோ என்னவோ பக்கத்து பார்மசியில் விசாரித்து அங்கே இல்லாத ஒரு ஆயின்ட் மென்ட்டை எழுதிக் கொடுத்துவிட்டார். அரைமணிக்குள் பூசாவிட்டால் லாடம் அடித்துதான் நடக்க வேண்டிவரும் என்ற ரீதியில் அவர் மிரட்டிப் போட, சிங்காரம் மருந்து வாங்கி வரத் துரத்தப்பட் டான்.

அந்த இனிய மாலைப் பொழுதில், அசோக்கும் அன்புச்செல்வியும் ஒரே ஸ்ட்ராவில் இரண்டு இளநீரோ இரண்டு ஸ்ட்ராவில் ஒரே இளநீரோ உறிஞ்சிக் கொண்டே நிமிர்ந்தால் - இடுப்பில் கைவைத்து சிங்காரம் எதிரே நின்றிருந் தான்.

(தொடரும்)

# அமெரிக்கா போகும் குட்டி வித்வான்கள்!

**உன்னிகிருஷ்ணன், பாம்பே ஜெயஸ்ரீ, நித்யஸ்ரீ மட்டும்தான் கச்சேரிக்கு அமெரிக்கா பறக்கலாமா...? இதோ ஒரு குட்டிப் படை புறப்படுகிறது...**

'இந்தியாவின் இசைத் தூதுவர்களாக' அமெரிக்கா சென்று இருபது நாட்கள் பல நாட்டுச் சிறுவர்களுக்கு மத்தியில் 'ஆட்டம் பாட்டம், கொண்டாட்டம்' என்று குதூகலிக்கும் வாய்ப்பு சென்னையைச் சேர்ந்த ஆறு சிறுவர்களுக்குக் கிடைத்திருக்கிறது!

நமது கலாசார இசையை, நடனத்தை உலக அரங்கில் வெளிப்படுத்த பத்து வயதில் மூத்தாக ஒரு வாய்ப்பென்றால், அந்தச் சின்ன உள்ளங்களில் பொங்கிப் பெருகும் மகிழ்ச்சியைக் கேட்கவா வேண்டும்! சந்தோஷத்தை நம்மோடும் பகிர்ந்து கொண்டனர் அந்த சங்கீத வாண்டுகள்.

• குட்டி வித்வான்கள்

அமெரிக்காவின் 'டென்வர்' நகரில் செயல்பட்டு வரும் ஒரு சர்வதேச அமைப்பு 'சாங்ஸ் அக்ராஸ் தி சீஸ்', (கடல் கடந்த சங்கீதம்). இவர்கள் உருப்படியாய் ஒரு நல்ல காரியம் செய்கிறார்கள் ஒவ்வொரு வருடமும். உலகிலுள்ள பல நாடுகளின் வெவ்வேறு கலாசாரங்களைப் பரிமாற்றம் செய்து கொள்ள 'யங் மியூசிக்



• நிர்மலா சேஷாத்ரி

அம்பாசடர்ஸ்' என்ற இசை, நடன நிகழ்ச்சியை நடத்துகிறார்கள். இந்த நிகழ்ச்சியின் சிறப்பு - இதில் கலந்து கொள்ளும், அத்தனை பேருமே பத்திலிருந்து பதினான்கு வயதிற்குட்பட்ட பன்னாட்டு சின்

ளஞ்சிறு மேதைகள். கொலராடோ நகரில் நடைபெறும் இந்த நிகழ்ச்சியில் பங்குபெற முதல் தகுதி, ஆங்கிலத்தில் சரளமாக உரையாட வேண்டும். அடுத்து, பாரம்பரிய இசையிலோ, நடனத்திலோ பயிற்சியும், அதை 'சபாஷ்' என்று பாராட்டும்படி பொது மேடையில் வெளிப்படுத்தும் திறமையும் வேண்டும். இந்தத் திறமைகளை வளர்த்துக் கொண்ட சிறுவர்கள் பல நாடுகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு கொலராடோவுக்கு 'இளம் இசைத் தூதுவர்களாக' அனுப்பி வைக்கப்படுகிறார்கள். இருபது நாட்கள் நடைபெறும் இந்த நிகழ்ச்சியில் அற்புதமான பல அம்சங்கள் உண்டு.

தேர்ந்தெடுக்கப்பட்டு, கொலராடோ அனுப்பப்படும் மற்ற நாட்டுச் சிறுவர்கள், அமெரிக்காவில் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுவர்களின் இல்லங்களில், ஒரு குடும்ப உறுப்பினராக தங்கியிருந்து, மற்றொரு புதிய கலாசார பின்னணியில், வாழும் அனுபவத்தை அடைவார்கள்.

விருந்தினராக வரும் அந்நியக் குழந்தைகளை, தங்கள் குழந்தைகளாகவே எண்ணி, தினசரி தங்களது வாகனங்களிலேயே அழைத்து வந்து, நிகழ்ச்சி முடிந்ததும் திரும்ப அழைத்துப் போவார்களாம் இதற்கென்றே தேர்ந்தெடுக்கப்படும் அமெரிக்கப் பெற்றோர்கள்.

இந்த நிகழ்ச்சியில் பங்குபெறும் சிறுவர்கள் ஒவ்வொருவரும் ஐந்து முறை தங்களது தனித்திறமையைப் பொதுமக்கள் முன்பு வெளிப்படுத்தி பாராட்டுகளைக் குவித்துக் கொள்ளலாம். ஒவ்வொருத்தரும், தனக்கு இணையாகத் தேர்ந்தெடுத்துக் கொண்ட ஒரு அமெரிக்க குழந்தைக்குக் கட்டாயம் ஒரு பாடலும், நடனமும் சொல்லித்தர வேண்டும். பதிலுக்கு ஓர் அமெரிக்கப் பாடலையும் நடனத்தையும் கற்றுக் கொள்ள வேண்டும். பிறகு எல்லா நாட்டுக் குழந்தைகளும், இணைந்து 'உலகப் பாடல்' ஒன்றை மெட்டமைத்து உருவாக்குகிறார்களாம். அதே போல 'உலக நடனமும்' உண்டு!

இந்த நிகழ்ச்சியை, வேர்ல்டு ரோட்டரி, யுனெஸ்கோ, யூனிசெஃப், மைக்ரோசாப்ட், லயன்ஸ் கிளப் போன்ற நூற்றுக்கும் மேற்பட்ட நிறுவனங்களின் உதவியுடன் நடத்துகிறது, 'சாங்ஸ் அக்ராஸ் தி சீஸ்' அமைப்பு.

இந்தியாவிலிருந்து 'இளம் இசைத் தூதுவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் கிருத்திகா, சுபிக்ஷா, அபூர்வா, அஞ்சனா, அஜித், பிரசன்னா ஆகிய ஆறு பேரும் பத்திலிருந்து பதிமூன்று வயதுக்குட்பட்டவர்கள். வித்யா மந்திர், பத்மா சேஷாத்திரி, எம்.எம். மெட்ரிகுலேஷன் ஆகிய மூன்று பள்ளிகளில் இருந்து பலத்த போட்டிக்கிடையில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

ஜூன் பத்தொன்பதாம் தேதி தொடங்கி, ஜூலை ஒன்பது வரை நடைபெறும் யங் அம்பாசிடர் நிகழ்ச்சிக்கு நமது மழலை மேதைகளை அழைத்துச் செல்பவர் நிர்மலா சேஷாத்ரி. சிங்கப்பூரில் செயல்பட்டு வரும், 'கலாவர்த்தினி ஆர்ட் சென்டரின்' கலை இயக்குனராக பொறுப்பு வகித்து வரும் இந்த பரதக் கலைஞர், 'சாங்ஸ் அக்ராஸ் தி சீஸ்' அமைப்பின் ஒருங்கிணைப்பாளர் குழுவில் தம்மை இணைத்துக் கொண்டுள்ளார்.

நிகழ்ச்சியில் மினி சுற்றுலாவும் உண்டு! மிருக காட்சி சாலை, மியூசியம், கடல் பயணம், அமெரிக்க கிராமங்கள் என ஒரு மாறுபட்ட அமெரிக்காவைப் பார்த்துவிட்டு மாறுபட்ட கலாசார அனுபவத்தோடு திரும்ப இருக்கிறார்கள் இவர்கள்.

— ஜெ.

படங்கள் : வெங்கடேஷ்



## அனைத்தும் அடங்கிய ஒரே தீர்வு...




## ... பலவித பணத் தேவைகளுக்காக.

# பீமா நிவேஷ்

ஓர் இணையற்ற, குறுகியகால, பல்வித - ஆதாயங்கள் கொண்ட காப்பீடுத் திட்டம்.

**சிறப்பம்சங்கள்:**

- ரூ. 25,000 முதல் ரூ. 5,00,000 (ரூ. 5,000ன் மடங்குகளில்) வரையிலான உத்தரவாதம் அளிக்கப்படும் தொகைக்கு ஒரே முறை பிரீமியம் செலுத்தினால் போதும்.
- திட்டத்தின் காலவரை: 5 வருடங்கள் மற்றும் 10 வருடங்கள்.
- பிரிவு 88ன் கீழ் வரிச்சலுகைகள் கிடைக்கின்றன.
- விசுவாசத்தொகை எனப்படும் கூடுதல் தொகைகளுக்கான வாய்ப்பு.
- இத்திட்டத்தின் காலவரையில் ஆயுள் காப்பீட்டு வசதியும் உண்டு.
- உத்தரவாதமான கூடுதல் தொகைகளுக்கு வரியில்லை. ஆண்டுக்கு ஆயிரத்துக்கு ரூ. 85/-, முதல் 5 ஆண்டுகளுக்கு மற்றும் அதன்பின்பு ஆண்டுக்கு ஆயிரத்துக்கு ரூ. 90/- (கூட்டு வட்டி முறை)
- சேரும் தகுதி: 35 வயது முதல் 70 வயது வரையிலான தனி நபர்கள். தாங்கள் ஆரோக்கியமாக இருப்பதாக ஒரு எளிய உறுதிப் படிவம் அவசியம்.

*பீமா நிவேஷ் - விவேகமான தீர்வு.*

விபரங்களுக்கு உங்கள் எல்ஐசி முகவர் அல்லது அருகிலுள்ள கிளை அலுவலகத்துடன் தொடர்பு கொள்க.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆஃப் இந்தியா**

மக்களின் மகத்தான சேவையில்

**Please visit us at www.licindia.com**

65

பிருஹதாரண்யக உபநிஷத்தில், பரமாத்மாவின் அந்தர்யாமி பிராமணம் குறித்து வருகிறது என்று சொன்னேன்.

அந்தர்யாமி பிராமணம் குறித்து அதிலே பதில் சொல்கிறவர் யாக்ஞவல்க்ய மஹரிஷி. சூரியனிடத்திலிருந்து நேரே அத்யயனம் பண்ணி மொத்தத்தையும் அறிந்தவர் அவர்.

சமுத்திரத்தில் நின்று கொண்டு சூரியனைத் தியானம் பண்ணி, 'அக்னி – ஸோம ரூபமாய் இருக்கக்கூடியவனே! எல்லா ஜோதிஸ்ஸுக்கும் பதியாய் இருக்கக்கூடியவனே! உலகத்திலே பிரகாசவானாக விளங்கக்கூடியவனே! பாஸ்கரனே!' என்று ஸ்தோத்திரம் பண்ணுகிறார்.

எதிரே ஒரு குதிரை வடிவிலே சூரியன் காட்சியளித்தான். 'என்ன வேண்டும்?' என்று கேட்டான்.

அவர் சொன்னார் :

"எங்கள் ஆசார்யர் வைசம்பாயனருக்குத் தெரியாதது மொத்தம் எனக்குத் தெரிய வேண்டும்!"

உடனே சூர்ய பகவான் அச்வ ரூபமாய் (குதிரை உருவமாய்) இருந்து உபதேசம் பண்ணினான் அவருக்கு. நேரே சூரியனிடமிருந்தே அவர் அறிந்து கொண்டதைத்தான் தமது ஆசிரமத்திலே போய் பல பேருக்கு எடுத்துச் சொன்னார். அந்தர்யாமி பிராமணம் என்று பரமாத்மாவின் சர்வாந்தர்யாமித்வத்தை விளக்கினார்.

அப்போது உத்தாலகன் என்ற உயர்ந்தவர் யாக்ஞவல்க்யரைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டார் :

"அந்தர்யாமியை நீர் உணர்ந்திருக்கிறீரா?"

"நன்றாக அறிவேன்" என்றார் யாக்ஞவல்க்யர்.

"எல்லோரும் அறிந்ததாகத்தான் சொல்கிறார்கள். நீர் அறிந்தவாறு சொல்லும்..."

அப்போது இரண்டுவிதமாக விளக்கினார் யாக்ஞவல்க்யர் – "ப்ருத்விக்குள்ளே அசேதனமான விஷயங்களுக்குள் இருந்து கொண்டு அவற்றை எவன் ஏவுகிறானோ அவனே ஆத்ம வஸ்துக்களினுள்ளும் இருந்து கொண்டு அவற்றையும் ஏவுகிறான். சேதன அசேதனங்கள் இரண்டையும் ஏவக்கூடிய அவனை நான் உபாசிக்கிறேன்."

உடனே உத்தாலகர் அவரை ரொம்ப கொண்டாடினார். விசேஷ சம்ஸ்காரமெல்லாம் செய்து 'நீ ஏற்றமுடையவன்' என்று வியந்தார். 'உயர்ந்த உபாஸனை உடையவன் நீ' என்றார்.

பக்தி என்றால் உபாஸனை என்றுதான் அர்த்தம் – பகவானை உபாஸிப்பது. உபாஸிப்பது என்றால் எண்ணெய் ஒழுக்கு எப்படி அறுபடாமல் இருக்குமோ அந்த மாதிரி சந்தததாரையாய் இருக்க வேண்டும். அந்த உபாஸனைக்கு உதவக்கூடியது விஷ்ணு சப்தம். அப்படி உபாஸிக்கக் கூடியவர்களுக்கு விசேஷ பலனை பரமாத்மா கொடுக்கிறான். சர்வ வியாபியாய், எங்கும் நிறைந்தவனாய் உபாஸிக்கப்பட வேண்டியவனாக பரமாத்மா இருக்கிறான் என்பது வேதாந்தத்தில் சொல்லப்பட்ட விஷயம்.

அன்றன்றாட நித்ய ஸம்ஸ்காரங்களிலே பார்த்தோமானால், அவையும் பகவானை உணர்த்தும் முகமாக அமைந்தவைதான்.

கௌதம மஹரிஷி நாற்பது சம்ஸ்காரங்கள் சொல்லியிருக்கிறார். இந்த நாற்பது சம்ஸ்காரங்களும் கட்டாயம் பண்ண வேண்டியவை என்கிறார்.

ஒரு கோயிலில் ஒரு விக்ரஹத்தைப் பிரதிஷ்டை பண்ணுகிறோம். தான்யாதி வாஸம், ஜலாதி வாஸம், க்ஷீராதி வாஸம் என்று மூன்று கட்டங்கள் உண்டு. முதலில் தான்யத்திலே அதை வைக்க வேண்டும். அப்புறம் ஜலத்திலே; பாலிலே... அப்புறம் மந்திர பூதமாக அதைப் பிரதிஷ்டை பண்ணவேண்டும். அப்போது

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

தான் விக்ரஹத்துக்கு ஏற்றம். அப்போதுதான் அது தெய்வீக நிலை அடைகிறது. வெறுமே கொண்டு வந்து வைத்து விட்டால் அதற்கு உயர்வில்லை. அந்த மாதிரி, நமக்கு சம்ஸ்காரத்தால்தான் ஏற்றம் ஏற்படுகிறது. சம்ஸ்காரம் இல்லாதவன் பேசினால் அவன் சொல்வதைக் கேட்கக்கூட வேண்டாம் என்று விதிக்கிறது சாஸ்திரம்!

நாற்பதுவித சம்ஸ்காரங்கள் உண்டு என்றேனல்லவா. அதிலே விவாஹம்



(திருமணம்) என்பது ஒரு முக்கியமான சம்ஸ்காரம். கோயிலில் விக்ரஹத்தைப் பிரதிஷ்டை பண்ணுகிற மாதிரி, அந்த கல்யாணம் என்கிற சம்ஸ்காரத்தை முறையாக நடத்தி வைக்க வேண்டும். நடத்தி வைப்பவன் யார் என்று கேட்டால் பரமாத்மா, விஷ்ணு!

யம ஸ்ம்ருதி என்று ஒரு தர்ம சாஸ்திரம். சாக்ஷாத் யமனால் சொல்லப்பட்டது அது. இப்போது எப்படி நாம் சஹஸ்ரநாமம், இதிகாச - புராணங்களெல்லாம் உபன்யாஸம் பண்ணிக் கேட்கிறோமோ, அந்த மாதிரி யாக்ஞவல்கிய ஸ்ம்ருதி, பராசர ஸ்ம்ருதி, மனு ஸ்ம்ருதி, யம ஸ்ம்ருதி - இதையெல்லாம் கூட உபன்யாஸத்திலே கேட்க வேண்டும்.

எதற்காக கேட்க வேண்டும்..? எல்லாவற்றையும் நம்மால் அனுஷ்டிக்க முடியுமோ முடியாதோ, அது வேறு விஷயம் - சாஸ்திரம் என்ன சொல்லியிருக்கிறதென்று தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா!

இந்தக் காலத்திலே பலவற்றை அனுஷ்டிக்க முடியாது. சாஸ்திர ரீதியாக பல விஷயங்களைக் கடைப்பிடிக்க முடியாது.

ஒரு அபர காரியமே நடந்து போகிறது. சாஸ்திரப்படி எல்லாம் செய்வது ரொம்ப சிரமம். ஒருத்தர் மாண்டு விட்டார். ராத்திரி நேரம். ராத்திரியோடு ராத்திரியாக அந்த சவத்தை எடுத்துவிடக் கூடாது. சாஸ்திரம் சொல்கிறது மத்தியான வேளையிலே சூரியன் இருக்கிறபோதே தகன சம்ஸ்காரம் நடக்க வேண்டும். 'ராத்திரியில் பண்ணாதே! சூரியன் இருக்கிறபோதே பண்ணு' என்கிறது சாஸ்திரம்.

சரி பண்ணிவிடுகிறோம்... பண்ணிய பிறகு வீட்டுக்கு எப்போது திரும்ப வேண்டும் என்பதையும் சாஸ்திரம் சொல்கிறது :

நேரே நதிக்குப் போக வேண்டும். போய் ஸ்நானம் பண்ணவேண்டும். பண்ணிவிட்டு அஸ்தமனத்துக்காக காத்துக் கொண்டிருக்க வேண்டும். நக்ஷத்திர மண்டலங்களெல்லாம் ஆகாசத்திலே வந்தனவா? என்று பார்க்க வேண்டும். கோ தூளி காலம் என்பார்கள்... பசுக்களெல்லாம் மேய்ந்து விட்டுத் திரும்புகிற நேரம்; அவற்றின் குளம்புத் தூசி நம் மேல் படும்படி நடந்து வரவேண்டும். அப்போதுதான் அந்த ஸ்மசானத்துக்குப் போய் விட்டு வந்ததற்கு சுத்தி ஏற்படும்; இல்லாவிட்டால் வீட்டுப் பக்கமே வராதே!' என்று சொல்லி விட்டது சாஸ்திரம்!

## அருள்வாக்கு

ஆலயங்களில் ரிஷிகளின் தபஸை டெபாஸிட் மாதிரிப் போட்டு வைத்திருந்து அதிலிருந்து நாம் எடுத்துக்கொள்வது நிஜம். மூர்த்திகளிலிருந்து தெய்வானுக்ரஹம் கிடைப்பது நிஜம். மந்த்ர பூர்வமான ஆராதனைகளால் நமக்கு ஆலயத்திலிருந்து ஆத்மார்த்தமான நன்மை நிறைய உண்டாவதும் நிஜம். இத்தனையும் இருந்தாலும் ஆலய வழிபாடும் நாம் தனிப்பட நம்மை உருப்படவைத்துக் கொள்வதற்கு அங்கம் தானேயன்றி, community salvation-ஆக (ஒரு ஸமூஹம் முழுவதும் மோக்ஷம் பெறுவதற்காக)அல்ல.

கோயிலில் பல பேர் சேர்ந்து பூஜைகள், உத்ஸவங்கள், கும்பாபிஷேகங்கள் செய்து, பொன்னையும் பொருளையும், கந்தம், புஷ்பம், நைவேத்யம், மேளதாளம் எல்லாவற்

சாஸ்திரத்தை விவரமாகக் கேட்டு விட்டோம். ஆனால் இதையெல்லாம் பண்ண முடியுமா...? என்பதுதான் யோசனை. பெரிய நகரத்திலே வாசம் பண்ணுகிறோம். அடுத்தடுத்த க்ஷணம் வேகமாகப் போய்க் கொண்டேயிருக்கிறது. இந்த மாதிரி, 'நட்சத்திர மண்டலத்தைப் பாரு', 'ராத்திரி வீட்டுக்குத் திரும்பு', 'பசுக்களின் குளம்பு தூளி மேலே படும்படி நடந்துவா...' என்றெல்லாம் சொன்னால் எங்கேயிருந்து முடியும்!

சாஸ்திர வாக்கியங்களையெல்லாம் கேட்கும் போது, 'அடடா இப்படியெல்லாம் இருக்கிறதே; நம்மால் பண்ண முடியவில்லையே' என்று ஏக்கம் வந்தால் அதுவே போதும் என்கிறார்கள் பெரியோர்.

இப்போது நாம் வாழ்ந்து வரும் காலத்தில் ஸ்ம்ருதி வசனங்கள் பிரகாரம் ரொம்ப நிஷ்டையாக இருக்க முடியாது. கலியுகத்திலே பராசர ஸ்ம்ருதிதான் ரொம்ப சௌகரியம். ஏனென்றால் ஏகப்பட்ட பிராயச்சித்தங்கள் சொல்லியிருக்கிறது அதிலே!

எப்படி வேதங்கள் தாமே கேள்வி கேட்டுக் கொண்டு பதிலும் சொல்லிக் கொள்கின்றனவோ, அப்படியே ஸ்ம்ருதிகளும் பதில் சொல்கின்றன. வேதத்தை அடியொற்றி அவை இருக்கின்றன. காளிதாஸன் இதை ரகுவம்சத்திலே அழகாக வர்ணிக்கிறான் :

றையும் அர்ப்பணம் பண்ணுகிறோ மென்றால் இதற்குப் பர்பஸே (நோக்கமே) வேறு. இப்படிப்பட்ட கூட்டுப் பணிதான் மதத்தின் முடிவு என்ற அபிப்ராயத்தில் இதைச் செய்ய வில்லை. ஆனால், community thanksgiving ஆகவே இதைச் செய்கிறோம். ஈச்வரனிடமிருந்து ஸமூஹம் முழுவதும் பலவிதமான அநுக்ரஹங்கள் பெறுகிறதல்லவா? அதற்காக ஸமூஹம் முழுவதும் சேர்ந்து அவனுக்கு நன்றி தெரிவிப்பதற்கு அடையாளமாக, நன்றிக்கும், அன்புக்கும் ஸ்தூலமான அடையாளமாக, அவன் நமக்குக் கொடுத்ததிலிருந்தே திரும்ப அவனுக்கு வஸ்திரம், நைவேத்யம் என்றெல்லாம் அர்ப்பணிப்பதுதான் நம்முடைய கூட்டு ஆலயப் பணியின் 'பர்பஸ்'.



'ஸால்வேஷ'னுக்கு (விடுதலைக்கு) இதோடு நின்று விட்டால் போதாது. ஈச்வரனின் பரம க்ருபையில் கோயிலைச் சுற்றிச் சுற்றி வந்தும், அந்த மூர்த்திகளில் அப்படியே உள்ளம் சொக்கி பக்தி பண்ணியுமே மோக்ஷ ஸாம்ராஜ்யத்துக்குப் போனவர்கள் உண்டுதான். ஆனாலும் இங்கேயுங்கூட அது இவர்கள் இன்டிவிஜுவலாக (தம்மளவில் மட்டும்) செய்து கொண்டதுதானே? பொதுவில் ஆலயத்திலிருந்து பெறுகிற சக்தியைத் தனி வாழ்க்கையின் அநுஷ்டான சுத்தத்தால் விருத்தி செய்வது கொள்வதாகவே நம் மதம் இருக்கிறது. அவனவன் இப்படி சுத்தமாக அநுஷ்டானம் பண்ணித் தன்னைத் தானே கடைத்தேற்றிக் கொள்வதற்கான சக்தியையும் கோயிலுக்குப் போய்ப் போய், வேண்டி வேண்டிக்கொண்டே பெறலாம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

திலீப சக்ரவர்த்தியினுடைய தர்ம பத்னிக்கு சுதக்ஷிணா என்று பெயர். திலீபனும் சுதக்ஷிணையும் காட்டுக்குப் போகிறார்கள். நந்தினி என்கிற பசுவுக்குப் பணிவிடை பண்ண அவ்வாறு போகிறபோது, காட்டிலே பக்ஷிகளெல்லாம் சக்கரவர்த்தியை வரவேற்றதாம். எப்படி வரவேற்றன என்றால், யாராவது மகான்கள் – ஆசார்ய புருஷர்கள் ஊருக்கு வருகிறார்கள் என்று சொன்னால், அங்கே தோரணம் கட்டி வரவேற்கிறோம் அல்லவா? அந்த மாதிரி இங்கே காட்டிலேயும் தோரணம் கட்டியிருக்கிறது. என்ன தோரணம் என்றால், உபமானம் சொல்கிறான் காளிதாஸன். காளிதாஸன் மாதிரி உபமானம் சொல்ல யாராலும் முடியாது! – உயர்ந்த காட்டிலே, ராஜ தம்பதிகளை வரவேற்கின்றன பக்ஷி ஜாதிகளெல்லாம். உலகிலே தோரணம் கட்டினால் இரு பக்கமும் கம்பை நட்டு, தோரணம் அமைப்பார்கள். இங்கே காட்டிலே, சாதக பட்சிகளெல்லாம் ஆகாசத்திலே வரிசை வரிசையாகப் பறக்கின்றனவாம். அது எப்படி இருக்கிறது என்றால் 'ஸ்தம்பமில்லாத தோரணம் அமைத்தாற்போலிருக்கிறது!' என்றான் காளிதாஸன்! எப்பேர்ப்பட்ட உபமானம் பாருங்கள்!

அப்படிப்பட்ட காட்டினுள்ளே திலீபன் போகிறான். அவனும் சுதக்ஷிணாவும் நந்தினி என்கிற பசுவைப் பின்தொடர்ந்து போகிறார்கள். அது எங்கே குளம்பு வைக்கிறதோ அதைப் பின்தொடர்ந்து சுதக்ஷிணா போகிறாள். அது நின்றால், அவள் நிற்கிறாள். அது படுத்துக் கொண்டால், அவளும் உட்கார்ந்து கொள்கிறாள். இப்படித் தொடர்ந்து போவது எப்படி இருக்கிறது என்று கேட்டால், வேதத்தினுடைய அர்த்தத்தை தர்மசாஸ்திரமானது – அதாவது ஸ்ம்ருதியானது எப்படி அனுசரித்துச் செல்லுமோ, அப்படி இருக்கிறதாம்!

வேதம் சொல்வதையேதான் ஸ்ம்ருதிகளும் சொல்கின்றன. ஆதலால் வேதங்களில் உறைபவன் ஸ்ம்ருதிகளிலும் உறைபவனாகிறானல்லவா!

'சத்யம் வதா – உண்மையே பேசு' என்கிறது வேதம். அதையே தர்ம சாஸ்திரம் என்ன சொல்கிறது: 'பொய்யைச் சொல்லாதே!' என்கிறது.

இரண்டுமே ஒன்றுதானே!

வேதார்த்தத்தை தர்ம சாஸ்திரம் எப்படி அனுசரித்துப் போகிறது என்கிற உபமானத்தின் அழகைப் பாருங்கள்! உபமானம் என்றால் ஏதோ நீச்ச விஷயமாகச் சொல்லக் கூடாது. அந்த உபமானம் மூலமாக இன்னொரு அழகான விஷயமும் தெரிந்து கொள்கிறாற்போல் இருக்க வேண்டும். அப்படிப்பட்ட உவமைகளைத்தான் காளிதாஸன் சொன்னான்.

(தொடரும்)




# முறையா, தகுமா, தர்மம்தானா?

**ப**ங்குனி மாதம் மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயில் திருவிழாவின் போது தேர் வடம் அறுந்து சின்ன கலாட்டா ஆனாலும் தேர் நிலைக்கு வந்து விட்டது. ஆனால் கபாலீஸ்வரர் கோயில் குளத்தில் 2 கோடி ரூபாய் செலவில் லேசர் கண்காட்சி வைக்கப்படும் என்ற அறிவிப்பு நம்மை நிலை கொள்ளா கவலையில் ஆழ்த்தி விட்டது.

ஏற்கெனவே சிறுவர்களின் கிரிக்கெட் கிரவுண்ட் ஆகிவிட்ட குளத்தில் மழைக் காலத்தில் மட்டும் 'ஐயோ பாவம்' என்று தண்ணீர் தேங்குகிறது. இதனால் இப்பகுதியில் நிலத்தடி நீர் வளம்பெற்று வந்ததையும் மறுக்க முடியாது. குளத்தில் லேசர் கண்காட்சி என்றால் ஒரேயடியாக குளத்தை கான்கிரீட் போட்டு துவம்சம் செய்து விடுவார்களா? கோயில் அதிகாரிகளிடம் கேட்டோம்.

"மத்திய மாநில அரசுகள் மற்றும் தமிழக சுற்றுலாத்துறை இணைந்து இப்படியொரு திட்டம் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறது. இன்னும் தீர்மானமாகவில்லை" என்றார் அந்த அதிகாரி..

இந்த லேசர் கண்காட்சி பற்றி அறிவித்திருந்த மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலின் அறங்காவலர் குழுத் தலைவர் சீர்காழி கோ. சிவசிதம்பரத்திடம் கேட்டோம்.

''இந்த யோசனைக்கு நிறைய பாராட்டுக்கள் தெரியுமா? என்று ஆரம்பித்த சிவசிதம்பரம், ''குளத்தைச் சுற்றி நீருற்று, நந்தவனம் மாதிரி அமைத்து நடுவிலே லேசர் கண்[illegible]சி வைக்கலாம் என்று [illegible]ம். இதை சுற்றுலாத் துறை பாதுகாக்கும். குளம் கழிப்பிடமாக இருப்பதைவிட மக்களின் களிப்பிடமாக அதை மாற்றுவது நல்ல விஷயம்தானே... வருமானம் தரக்கூடிய ஐடியாவும் கூட! கண்காட்சியில் சென்னை வரலாறு, கோயில் பற்றியத் தகவல்கள் சைவ சமயத்தை பற்றிய முழு விளக்கமும் படங்களோடு வைக்கலாம் என்று எண்ணம்'' என்றவரிடம், ''ஏற்கெனவே சென்னையில் குளங்கள் காணாமல் போகின்றன. இந்தக் குளத்தையும் மூடிவிடுவது நல்லதா? இதனால் நிலத்தடி நீர் பாதிப்பு..'' என்று ஆரம்பித்ததும், "அது பற்றி நான் ஒன்றும் சொல்ல முடியாது. அதை வேண்டுமானால் அறநிலையத்துறை கமிஷனரிடம் கேளுங்களேன்'' என பதில் சொன்னார்.

**பெ**ரும்பாலான புராதனக் கோயில்களுக்கு அருகே பெரிய அழகான குளங்கள் காலங்காலமாக இருந்து வருகின்றன. கோயில் உத்ஸவங்களோடும் புராணங்களோடும் தொடர்புடைய புராதனச் சின்னங்களாகவும் நீர்வளத்துக்கு உதவும் அமைப்புகளாகவும் விளங்கி வருகின்றன. அபிவிருத்தி, முன்னேற்றம் என்ற பெயரில் அவற்றில் கைவைப்பது முறையா? தகுமா? தர்மம்தானா? – அறநிலையத்துறையினரைக் கேட்கிறோம்!

— அப்பு

படம் : வெங்கடேஷ்

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)**

